

......வேலவர் சன்னதியை அடைந்தோம். அர்ச்சனை செய்த அர்ச்சகரிடமிருந்து, ''மகாத்மா காந்தி நாமஞ'' என்று குரல் வந்தது. உடனே என் உடம்பிலிருந்த ஆச்சர்ய நரம்புகள் ஆச்சர்யப்பட்டு நின்றன!

நான் டாக்டர் சுப்பராயன் அவர்களை இதைப்பற்றி விசாரித்தேன். தம் ஊருக்கு வரும் பிரதான அதிதியின் பெயருக்கு ஓர் அர்ச்சனையும், மற்ற நண்பர்கள் சார்பாக மகாத்மா காந்தியின் பெயரில் ஓர் அர்ச்சனையும் செய்வது தம் வழக்கம் என்று எனக்கு விளக்கினார்.

ஒரு நண்பர், ''நாங்கள் கடவுள் பெயருக்கே அர்ச்சனை செய்து விடுவது வழக்கம்'' என்றார்.

அதற்கு டாக்டர் சுப்பராயன், ''எனக்கு மகாத்மாதானே கடவுள்?'' என்று ஒரு பெரிய போடு போட்டார்!

(எஸ். வி. எஸ். எழுதிய ''வேலவருக்கு ஒரு விண்ணப்பம்'' என்ற கட்டுரையிலிருந்து.)
கல்கி, ஜூலை 20, 1947

நினைவுத் திரையில்...

# கல்கி பொருளடக்கம்

பராபவ, தை 16 — ஜனவரி 29



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

இலங்கையில் 40 சதம் — தபால் செலவு தனி

கச்சேரி களைகிறது

அதிருப்தியாளர்






தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 26



# சுதந்திர வாழ்வுக்கு ஒரு வாய்ப்பு

தேர்தலில் வெற்றி பெறுவதற்காகக் காங்கிரஸ் கொண்டாடும் மிகப் பெரிய பாத்தியதை, அது ஒன்றே 'ஸ்திரமான' சர்க்கார் அமைக்க முடியும் என்பதுதான். டில்லியிலும் சரி, எல்லா ராஜ்யங்களிலும் சரி காங்கிரஸால்தான் ஸ்திரமான அரசாங்கம் ஏற்படுத்த முடியும் என்கிறது. இந்த 'ஸ்திரத் தன்மை'யின் பொருள் என்ன என்பதை இது வரை யாரும் தெளிவு படுத்தவில்லை.

தேர்தலுக்குப்பின் காங்கிரஸ் சர்க்கார் அமைந்தால், அதற்கே மிகப் பெரும் மெஜாரிட்டி கிடைக்கும் என்றும், அதற்கு எவ்வளவு ஆதரவு குன்றினாலும் அதன் ஆட்சியை மாற்ற முடியாது என்றும் இதற்குப் பொருளா? ஒரு காலும் ஆட்சிபீடத்திலிருந்து அசைக்கப்படமாட்டாத நிலைதான் 'ஸ்திரத் தன்மை' எனில், இது சட்டசபை ஜனநாயகத்துக்கு முற்றிலும் விரோதமாகும். ஆட்சியை மாற்ற முடிவதுதான் ஜனநாயக இயந்திரத்தின் முக்கியமான மரை. எந்த அளவுக்கு ஓர் அரசாங்கம் மாற்றப்பட வொண்ணாததாக உள்ளதோ, அந்த அளவுக்கு அது யதேச்சாதிகாரத்தை நெருங்குவதாக அர்த்தம். எந்த அளவுக்கு அது மாற்றப்படக் கூடியதாக உள்ளதோ, அந்த அளவுக்கே அது ஜனநாயகத்துக்கு இசைந்ததாகும். முக்கியமான பிரச்னைகளில் பொது மக்களின் கருத்துக்களைப் பொறுப்புடனும் நுணுக்கமாகவும் கவனித்து ஏற்றுக் கொள்வதுதான் ஜனநாயக சர்க்காரின் இலட்சணம். எனவே, மாற்ற முடியாத சர்க்காராக இருப்பதே ஸ்திரத் தன்மை என்று கருதி, அதை வரவேற்பது பெண்டுலம் இல்லாமலே கடிகாரம் ஓடவேண்டும் என்று விரும்புவதற்கொப்பாகும். பொதுமக்களின் கண்டனக் கருத்துக்களை உன்னிப்புடன் கவனித்து, அவர்களது ஒப்புதலைச் சார்ந்தே ஆட்சி நடத்த முடியும் என்கிற ஸ்திரமற்ற தன்மைதான் உண்மை ஜனநாயகம் ஏற்பட உத்தரவாதமாகும்.

அல்லது ஆட்சியாளர்கள் ஸ்திரத் தன்மை பற்றிச் சொல்லும் போது, 'எங்கள் கட்சிதான் நல்ல ஸ்திரமான அமைப்பைப் பெற்றுள்ளது; அதில் தான் மற்றக் கட்சிகளைவிடக் கட்டுக் கோப்பு இருக்கிறது' என்ற கருத்தில் அப்படிக் கூறுகிறார்களா? இப்படிச் சொல்ல முடியாது. ஏனெனில், காங்கிரஸின் கட்டுக் கோப்பு குலைந்து வருவதை நாளுக்கு நாள் நிதரிசனமாகப் பார்க்கிறோம். இப்போது காங்கிரஸ் மாளிகைக்கு மீண்டும் பூச்சு வேலையும் மற்ற ரிப்பேர்களும் நடந்து வருகின்றன. ஆனால் உளுத்துப் போய் இடிந்த மாளிகையைப் புதுப்பிப்பதில் வெற்றி காண முடியாது. தேசம் முழுவதிலும் நிருவாகத்தை நன்றாக நடத்துவதற்குரிய முறையில் கவனம் செலுத்தாமல், கட்சியின் கட்டுக்கோப்பு குலைந்தது காரணமாக ஒரு தலைவருக்கெதிராக இன்னொருவரை பலப்படுத்தும் அடிப்படையிலேயே காங்கிரஸின் அபேட்சகர்கள் பொறுக்கி எடுக்கப்பட்டிருக்கின்றனர்.

வரவேற்கத் தக்க முறையில் 'ஸ்திரமாக' நிருவாகம் நடக்க வழி என்ன? சுதந்திரமான தேர்தலின் விளைவாக அமைந்த பார்லிமெண்டின் நம்பிக்கையைப் பெற்ற தலைமைப் பீடம் வகுக்கிற கொள்கைகளை அமுல் செய்வதே நிரந்தரமான சர்க்கார் அதிகாரிகளைக் கொண்ட நிருவாக இயந்திரத்தின் கடமை. இந்த நிருவாக இயந்திரத்தை அரசியல்வாதிகள் ஊழல் செய்யாத வரையில், நாட்டுக்கு நல்ல ஸ்திரமான நிருவாகம் கிடைத்துக் கொண்டே இருக்கும். அதோடு அவ்வப்போது ஆட்சி பீடத்துக்கு வருபவர்களின் கொள்கைகளும் நியாயமான முறையில் பரிட்சை பார்க்கப்படும். நிருவாக இயந்திரத்தை இந்தத் தூய நிலையில் வைக்க வேண்டியதை மறந்து, ''எங்களுக்கே அதிகார பலத்தைக் கொடுங்கள்; ஏனெனில், எங்களிடம் தான் அதிக பலம் இருக்கிறது'' என்று ஆட்சியாளர்கள் கூறி வரு

கிறார்கள். தேசத்தின் தேவை நேர்மையுள்ள நல்ல நிர்வாகம். 'ஸ்திரத்தன்மை' என்ற மாயப் பேர் படைத்த யதேச்சாதிகார மல்ல. கம்யூனிஸ்டுகளுடன் மௌனமாகச் சேர்ந்து கொண்டு சர்க்கார் சர்வாதிபத்தியத்தை ஏற்படுத்தவே காங்கிரஸ் முயல்கிறது. உண்மையான ஜனநாயகத்தையும், நன்கு நிலைநாட்டப்பட்ட பிரஜா உரிமைகளையும் அநுபவித்துச் சுதந்திர வாழ்வைப் பெற வேண்டும் என்பதற்காகவே மக்கள் அந்நியக் கொடுங்கோன்மையை எதிர்த்துப் போராடி வென்றார்கள் — மீண்டும் சுதேசிகளின் புதிய கொடுங்கோன்மைக்கு ஆளாவதற்கல்ல. இப்போது சுதந்திர வாழ்வை ஏற்படுத்திக் கொள்ள ஒரு வாய்ப்பாகத் தேர்தல் வந்திருக்கிறது. அதைப் பயன் செய்து கொள்வோம். மாற்று வழிக்கு நிறைய வாய்ப்புத் தந்து விட்டோம். பதினைந்தாண்டுகள் பட்டாக் கொடுத்துப் பார்த்து விட்டோம். இப்போது சுதந்திரவழிக்கு வாய்ப்புத் தருவோம்.

## இசை உலகின் இழப்பு



சங்கீத கலாநிதி, சங்கீதரத்ன, மைசூர் டி. சௌடய்யா திடீரென்று காலமானார் என்ற செய்தி கேட்டுக் கர்நாடக இசை உலகமே துக்கத்திலாழ்ந்திருக்கிறது. திரு சௌடய்யா பழங்கால வித்துவத் மரபில் திளைத்தவர். மிகப் பிரபலமான பிடாரம் கிருஷ்ணப்பா போன்ற பல வித்துவான்களின் தொடர்பினாலும் மைசூர் சம்ஸ்தானத்தின் சம்பந்தத்தினாலும் அபார சாதக வலிமையினாலும் ஞான முதிர்ச்சியினாலும் வயலின் வாத்தியத்தைத் தனிச் சிறப்புடன் கையாண்டு சுமார் நாற்பது ஆண்டுகளாக முன்னணி வித்துவானாக விளங்கி லட்சக்கணக்கான மக்களை மகிழ்வித்துப் பெருமையடைந்தவர். ''மைக்'' இல்லாத பழங் காலத்துக் கச்சேரிகளில் வயலின் நாதத்தைப் பெருக்கி அளிக்க அவர் புகுத்திய புதுமைகளும், ஏழு தந்திகள் அமைத்து வயலின் வாசித்து மகிழ்வித்த பெருமையும் திரு சௌடய்யாவுக்குச் சிறப்பு அளிப்பவை. தமது குருவாகிய கிருஷ்ணப்பாவுக்கு நினைவாலயம் எடுத்துச் சிறப்பித்த இவர், தாமும் சிறந்த குருவாக இருந்து பல பிரபல வயலின் வித்வான்களைப் பயிற்றுவித் திருக்கிறார். சங்கீத குருகுலம் அமைத்து நம் இசை மரபை போஷித்திருக்கிறார்.

மைசூர் சௌடய்யா அவர்கள் நண்பர்களுடன் பழகுவதிலும் உயர் பண்புடன் நடந்து கொள்வதிலும் பெயர் எடுத்தவர். கனிந்த உள்ளமும் மனிதாபிமானமும் மிகுந்தவர். அவருடைய பிரிவினால் துக்கத்தில் ஆழ்ந்துள்ள அவரது குடும்பத்தினருக்கும் ரசிகர்களுக்கும் நமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.




நேர்மையோ நல்ல அரசியல் இலட்சியமோ இன்றி, அதிகார ஆசை மட்டும் உள்ள இடத்தில் ஜனநாயகம் நசிக்கத்தான் செய்யும். அவ்விடங்களில் ஊழலோ அல்லது பலாத்காரமோ ஏற்படத்தான் செய்யும். இது போன்ற சந்தர்ப்பத்தில் ஊழலைவிடப் பலாத்காரமே மேலானது என்றுகூட சிலர் எண்ணலாம். தூரக் கிழக்கிலிருந்து வரும் செய்திகளிலிருந்து சீனத்தில் பலாத்காரம் தோன்றி விட்டதெனத் தெரிகிறது. இந்தியாவில் இதன் மாற்றான ஊழலைக் காண்கிறோம். இரண்டுமே ஜனநாயகத்தின் சாரமான தேவைகள் யாவை என்பதை உணர்த்துகின்றன.

ஃஃஃ

முட்டைகளைக் கோழி அடைகாத்து முடியுமுன்பே குஞ்சுகளை எண்ணுவதுதான் தேர்தல் பிரசாரங்களில் நாம் காண்பது. ஆளும் கட்சியின் விஷயத்தில் இது தொண்டர்களுக்கும் அனுதாபிகளுக்கும் விறுவிறுப்பு ஊட்டுவதோடு, மக்களை அச்சுறுத்தவும் உபயோகமாகிறது. பிரதமரும் மற்றக் காங்கிரஸ் ஜமீன்தார்களும் 'எங்கள் கட்சிதான் எப்படியும் ஆட்சிக்கு வரும்' என்று சொல்லும் போதே, இந்தக் கட்சிக்கு விசுவாசமாக நடக்கா விட்டால் ஆபத்து ஏற்படும் என்று வியாபாரிகளையும் உற்பத்தியாளர்களையும் பஸ் சர்விஸ்காரர்களையும் எச்சரித்து விடுகிறார்கள். வோட்டெடுப்பு எவ்வளவு இரகசியமாக இருக்க வேண்டுமோ அவ்வளவு இரகசியமாகப் பாதுகாக்கப்படும் என்று நம்பிக்கையில்லாததால் வாக்காளர்களுக்கும் பயம் ஏற்பட்டிருக்கிறதோ, என்னவோ? தாங்கள் வோட்டைப் பிரயோகிக்கும் விதத்தால் தங்களது வியாபாரம் பாதிக்கப்படாது என்ற நம்பிக்கை தொழில் துறையினருக்கு ஏற்படவில்லை.

இதெல்லாம் ஒருபுறமிருக்க, அடைகாக்காத குஞ்சுகளை எண்ணுவதில் முதல் ஸ்தானம் வகிக்கும் காங்கிரஸ்காரர்கள், எதிர்க்கட்சிக்காரர்களும் இதேபோல் குஞ்சுகளை எண்ணக் கூடாது என்று கூறுவதுதான் விநோதம்.

வலதுசாரி கம்யூனிஸ்டுகள் தவிர மற்ற எல்லா எதிர்க்கட்சிகளும், எல்லா ராஜ்யங்களிலும் காங்கிரஸுக்கு எதிராக ஒன்று சேர்வது ஒரு வலுவான இயக்கமாகி உள்ளது என்பதை யாரும் மறுக்க இயலாது. உட்கிடையில் இதுவே ஆளும் கட்சியை எதிர்த்து மக்கள் அளித்த ஒரு ஸ்தூலமான வோட்டு தான். வாக்குச் சாவடிகள் வைத்து நடத்தும் பொதுத் தேர்தலைப் போலவே இது உறுதியானது. பொதுத் தேர்தலிலாவது பயந்தவர்களையும், லஞ்சத்துக்கு மசியக்கூடியவர்களையும், சிந்தனையற்றவர்களையும் ஆளும் கட்சிக்குச் சாதகமாக வோட்டுப் போடும்படி நிர்ப்பந்தம் செய்ய முடியும். எனவே, எதிர்ப்புக் கூட்டணியே பொதுத் தேர்தலைவிடக்கூட நம்பகமான, உறுதியான மௌன வோட்டு என்று சொல்லலாம். காங்கிரஸ் நல்ல நிலைமையிலிருந்த போதே அதனால் ஐம்பது சதவிகித வாக்குகளைப் பெற முடியவில்லை என்பதையும் கருத்தில் கொண்டால் இது மேலும் நிச்சயப்படும்.

ஃஃஃ

கோவா வாக்கெடுப்பின் அதிர்ச்சியூட்டும் முடிவுக்குப் பின்னரும், காங்கிரஸ் ஜமீன்தார்களும், அவர்களது முன்னணியில் பிரதமரும் சேர்ந்து, "நமக்கே வெற்றி; முன்னைவிடப் பெரிய வெற்றி!" என்று ஆருடம் சொல்லிக் கொண்டுதான் இருப்பார்கள். எனினும், கோவாவில் வாக்கெடுப்புக்கு முன்பே மந்திரி சபை கலைக்கப்பட்டதால், மக்கள் தைரியமாக ஆட்சிபீடத்தினருடைய கருத்துக்கு மாறாக வோட் அளிக்க முடிந்திருக்கிறது என்பது நிரூபணமாகி விட்டது. இதையே எல்லா ராஜ்யங்களிலும் பொதுத் தேர்தலுக்குமுன் செய்ய வேண்டும் என்ற கோரிக்கைக்கு உரிய கவனம் செலுத்தப்படவில்லை. வருகிற தேர்தல்கள் எப்படி நடந்த போதிலும் பொதுவாக முடிவு காண வேண்டிய விஷயங்கள் இரண்டு. முதலாவது, பண பலம் படைத்திராதவர்களும் தேர்தலில் நின்று வெற்றிபெற வழி காண்பது. இரண்டாவது, தேர்தல் சமயத்தில் ஒரு கட்சியின் ஆட்சி நடவாமல், மந்திரி சபைகள் ராஜிநாமாச் செய்வது.

கோவா வாக்கெடுப்பின் முடிவு இப்போது பெரிதுபடுத்தப்படுவது போல் மிகப் பெரிய மெஜாரிட்டி பெற்றதல்ல. இருபதில் பதினொரு பேர் யூனியன் ஆட்சியில் கோவா இருக்க வேண்டும் என்றும், இருபதில் ஒன்பது பேர் அது மகாராஷ்டிரத்துடன் சேர வேண்டும் என்றும் வோட் செய்திருக்கிறார்கள். இருபதில் ஒன்பது என்பது அற்பமானதல்ல. இதுபோன்ற சந்தர்ப்பத்தில் நடைமுறையையே நீடிப்பதுதான் உத்தமம். யூனியன் பிரதேசமாக இருக்க வேண்டும் என்ற மெஜாரிட்டி கருத்தும் நடைமுறையை நீடிப்பதும் ஒன்றேதான். எனவே, இந்த வாக்கெடுப்பினால் சிக்கல் எதுவும் ஏற்படவில்லை.

# ஹகோபா எம்ப்ராய்டரி வேலைப் பாடமைந்த துணிகள்
## பாங்கானவை, பலதிறப் பயனுள்ளவை, நீடித்துழைப்பவை



# காங்கிரசுக்கு வோட்டுப் போடலாமா?



**காயிதே மில்லத் ஜனாப் முகம்மது இஸ்மெயில், எம். பி.**

**கா**ங்கிரஸ் தலைவர்கள் இன்னொரு ஐந்து வருடங்கள் அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று கேட்கிறார்கள். தாங்கள்தான் தேசத்தை நல்லாட்சியில் வைக்க முடியும் என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்களுடைய ஆட்சி ஒன்றிரண்டு ஆண்டுகள் அல்ல, இருபது ஆண்டுகள் நடந்து வந்திருக்கின்றது. ஜனநாயக வரலாற்றிலே இவ்வளவு நீண்ட காலம் ஒரு கட்சியினர் ஆட்சியிலிருந்தது கிடையாது. இவ்வளவு நீண்ட காலம் அரசோச்சியவர்கள் நாட்டுக்கு என்ன நலனை உண்டாக்கியிருக்கிறார்கள் என்பது மூடுமந்திரமல்ல. நலன் என்பது மக்கள் அநுபவிப்பது. ஆதலால் அது ரகசியமாக இருக்க முடியாது. மக்கள் அநுபவிப்பதாகக் காங்கிரஸ்காரர்கள் சொல்லும் அந்த நலனைப் பற்றி மக்களே சொல்லட்டுமே! அவர்கள், ''நாட்டில் உணவுப் பொருளுக்குப் பஞ்சமில்லை. குடிதண்ணீருக்குக் குறைவில்லை'' என்று சொல்வார்களா?

இவ்வளவு பஞ்சமும் குறைவும் எப்பொழுது ஏற்பட்டிருக்கிறது? முன்பு எப்பொழுதுமில்லாத மிதமிஞ்சிய வரியை இந்த இருபது வருஷ காலமும் மக்களிடமிருந்து வசூலித்து, அதுவும் பற்றாதென மக்களையெல்லாம் அடகு வைத்து அந்நிய நாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கான கோடி ரூபாய் கடன் வாங்கி, ஐந்து வருஷத் திட்டங்கள் ஒன்றுக்கு மூன்றாகப் போட்டுத் தர்பார் நடத்தினார்கள். இவ்வளவு செய்த பின்பும் பஞ்சம் என்கிறார்கள்:

மழை குறைவதோ, இல்லாமலே போவதோ இப்போது மட்டுமல்ல, மற்ற நாடுகளில் ஏற்படுவதுபோல் நம் நாட்டிலும் வழக்கம்தான். இதுவெல்லாம் ஆட்சி செய்தவர்களுக்குத் தெரியாமலா போய் விட்டது? இதையெல்லாம் மனத்தில் கொள்ளாமல், வேறு எதையோ நினைத்துத் திட்டமிட்டார்கள்.

உலகம் மிக்க நாகரிகம் பெற்று முன்னேறி விட்டது என்று சொல்கிறோம். உண்மை தான். ஆனால் இந்த நாகரிகங்களுக்கெல்லாம் முன்னால் ஏழாயிரம் வருஷங்களுக்கு முன்பு, எகிப்தை ஆண்டவர்கள், பஞ்சம் வருவதற்கு முன்னால் அதற்கான அறிகுறிகளை அறிந்து தக்க ஏற்பாடுகளைச் செய்தார்களாம். பின்னர் பஞ்சம் உண்மையில் வந்து விட்டபோது எகிப்து நாட்டில் மக்களுக்கு வேண்டிய அளவு உணவு இருந்தது மட்டுமல்லாமல் பஞ்சத்தால் வாடிய சுற்றியுள்ள நாட்டு மக்களுக்கும்கூட உணவு தானியம் கொடுத்து உதவும் அளவுக்கு முன்னேற்பாடு செய்து வைத்திருந்தார்கள். ஏழாயிரம் ஆண்டுகளுக்குமுன் செய்த திட்டம் அப்படி. அதற்குப் பின் ஏழாயிரம் வருஷ காலம் நாகரிகம் முன்னேறியிருக்கும் இக்காலத்தில், அதுவும் திறமைசாலிகள், புத்திசாலிகள் என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ்காரர்கள் ஆட்சி செய்யும் இந்த நாட்டில் இவ்வளவு பஞ்சம். இவர்களுடைய திறமையின் அழகும், திட்டங்களின் உயர்வும், இதிலிருந்து மக்களுக்குத் தெரியாமலா போகும் ?

மற்றத் துறைகளிலும் காங்கிரஸ் கட்சியாருடைய சாதனைகள் என்ன?

நாலு வண்டிகள் போனால் குழி விழும் ரஸ்தாக்களும், மருந்தும் வைத்தியர்களுமில்லாத ஆஸ்பத்திரிக் கட்டடங்களும், தண்ணீர் பாய்ச்சிப் பயிர் செய்ய முடியாத லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களின் மத்தியில் உள்ள அணைத் திட்டங்களும், நூற்றுக்கணக்கான கோடி ரூபாயில் நிர்மாணித்து விட்டபின், ஆணி போன்ற சில உறுப்புக்கள் வெளிநாட்டிலிருந்து வாங்குவதற்கு அந்நியச் செலாவணி இல்லை என்பதால் துருப் பிடித்துப் போயோ, ஓடத் தயங்கிக் கொண்டோ இருக்கும் தொழிற்சாலைகளும் தானா இவர்கள் இருபது வருஷ காலத்தில் திறமையுடன் ஆட்சி செய்ததின் பயன்? இத்தனை கோடாநு கோடி ரூபாய் செலவு செய்து நாட்டுக்கு உருவாக்கியுள்ள சொத்து இதுதானா ?

கேட்கப் போனால், லஞ்ச ஊழல் பெருத்து விட்டது என்கிறார்கள். அதன் அர்த்தம் மக்களின் பணம் களவு போய் விட்டது என்பதாகும். அதிகத் திறமையுடனும், கவனத்துடனும் காவல் செய்து வந்த காங்கிரஸ் ஆட்சியினர் எவ்விதம் இப்படிக் களவு கொடுத்தார்கள்? திட்டமிட்ட இடங்களில் இல்லாமல் மற்றவர்களுடைய கையில் பணம் மிதமிஞ்சிக் குவிந்திருப்பதற்குக் காரணம் என்ன? இதைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்ற கூக்குரலுக்குக் காங்கிரஸ் கட்சியினர் செவி சாய்க்கிறார்களா? இதுவெல்லாம் மக்கள் அறியாதவையா?

நாட்டுப் பணத்தைக் களவு கொடுத்ததோடு நிற்காமல், காப்பதற்கு என்று இவர்களிடம் ஒப்படைத்த நாட்டின் பகுதிகளையே களவு கொடுத்து விட்டார்கள்.

சீனக்காரன் கையில் இன்னும் இருந்து வரும் பகுதி 20,000 சதுர மைல் என்று காங்கிரஸ்காரர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் அது 50,000 சதுர மைல் என்று சொல்லும் ஆராய்ச்சியாளர்களும் நம் நாட்டில் உண்டு. இதில் விசேஷம், சீனக்காரன் நம் நாட்டுக்குள் நுழைந்து ஆக்கிரமித்துக் கொண்ட சங்கதி இரண்டு வருஷங்களுக்கு மேலாக ஆட்சியாளருக்குத் தெரியாதாம். நம் நாட்டின் ஒரு பகுதியாகிய 'கட்ச்'சில் பாகிஸ்தானியர்கள் நுழைந்து நடமாடி வந்தது ஒரு வருஷம் வரை இவர்களுக்குத் தெரியவே தெரியாதாம். நாட்டைக் காங்கிரஸ் கட்சியினர் காக்கும் இலட்சணம் இது! இதற்கு மேலும் அவர்கள் மக்களிடம் சொல்லுகிறார்கள், ''நாங்கள்தான் நாடாளத் தெரிந்தவர்கள்'' என்று. இந்நாட்டு மக்களை இவர்கள் எவ்வளவு கேவலமாக மதித்திருக்கிறார்கள்! இவர்களைக் கண்டு உலகம் நகைப்பதில் வியப்பில்லை!

தேசம் சுதந்திரம் பெற்ற ஆரம்ப காலத்தில் நம்மை மிகுந்த மதிப்புடன் கொண்டாடின உலக நாடுகள். இன்று சிறுசிறு நாடுகள் கூட நம்மை ஏளனம் செய்யும் நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்ட திறமைசாலிகள், புத்திசாலிகள் காங்கிரஸ்காரர்கள்! நாட்டின் நலத்தை மனத்தில் கொண்டவர்கள்—வருங்கால சந்ததியினரின் உரிமைகளையும் மதிக்க வேண்டிய மனிதர்கள் — இன்னும் இந்த ஆட்சிக்குத் தாட்சண்யம் காட்டலாமா? அது எந்த விதத்திலாவது நியாயமாகுமா என்பதைக் கவனிக்க வேண்டும்.

## வானொலி விளம்பரம்

அகில இந்திய ஆகாசவாணி ஒலிபரப்புகளின் மீது விளம்பரங்கள் படையெடுக்கிற கருத்தை வரவேற்க முடியவில்லை. வானொலி பொதுத் துறையில் உள்ள வரை, முற்றிலும் தணிக்கை செய்யப்படாத அல்லது உரியபடி தணிக்கை செய்யப்படாத வர்த்தக விளம்பரங்களுக்கு ரேடியோ நிகழ்ச்சிகளில் இடம் தருவதற்கு நியாயம் இல்லை. எல்லாத் துறைகளிலுமே உற்பத்தி என்பது தேவைக்குப் பின்தங்கிதான் நிற்கிறது என்பதையும், விலைகள் உயர்ந்துள்ளன என்பதையும் அனைவரும் அறிவர். எனவே, பொருளாதார ரீதியில் இந்த விளம்பரங்களுக்கு ஆதரவாக எதுவும் சொல்வதற்கில்லை.

முதலீட்டாளரிடம் சேமிப்புக்குப் பதில் செலவுக்கே இது ஊக்கமளிக்கும். விளம்பரம் கொடுப்பவர்கள் ரேடியோவைப் புறக்கணிக்கக்கூடாது என்பது போன்ற கருத்து ஏற்படும். அதாவது, ஏதோ ஒரு தார்மிக நிர்ப்பந்தம் போலவே இந்நடவடிக்கை காரணமாக, விளம்பரம் தருவோர் ரேடியோ விளம்பரத்துக்காகச் செலவழிக்க வேண்டியிருக்கும். இதற்குச் சாதகமாகச் சொல்லக்கூடிய ஒரே வாதம், இதனால் சர்க்காருக்கு வருமானம் கிடைப்பதுதான். ஆனால் இது உற்பத்தியின் மேல் விதித்த இன்னொரு வரிக்கே ஒப்பாகும். ரேடியோவைத் தனியார் துறையாக்கினால், அப்போது விளம்பரத்திலிருந்து வருமானம் பெறுவது பற்றி அத்தனியார் துறையே சிந்திக்குமாறு விடலாம்.

பத்திரிகையாளர் சங்கம் ரேடியோ விளம்பரங்களை ஆட்சேபித்திருக்கிறது. இதனால் பத்திரிகைகளில் விளம்பர வருமானம் குறையும் என்பதே காரணம். நடுத்தரப் பத்திரிகைகளும், அடிநிலையிலுள்ள பத்திரிகைகளும் விளம்பர வருமானம் குறைந்தால் உயிர் வாழவே முடியாது.

# அவ்வளவு சிறந்தது, இந்த விலைச் சீட்டை அணியத் தகும்!




# ...ஆனாலும் நிர்ணய விலை ரூ.50 க்குள் தான்

இதோ ஒரு முதல்தரமான, மிகவும் நம்பத் தகுந்த ஆக்பா காமிரா- வாங்கிய நாள் முதலே அது உங்களுக்கு வெற்றியைத் தேடித் தருகிறது. ஏனெனில் படமெடுக்க வேண்டியவற்றை நோக்கி காமிராவைப் பிடித்து ஷட்டரை அமுத்தினால் போதும்— கணக்கிடும் தொல்லையோ, குழப்பமோ இல்லை. '120' சைஸ் சுருள் பிலிமிலே அது 12 பெரிய (6 x 6 செ.மீ.) படங்களை எடுக்கிறது. ரூ. 46.50 க்கு அது உங்களுடையதாகிறது. (உள்ளூர் வரிகள் தனி) நீடித்த மனத் திருப்திக்கு ஒரு ஆக்பா கிளிக் III வாங்குங்கள். பிரபல போட்டோக் கடைகளில் கிடைக்கிறது

இந்தியாவில் தயாரிப்பவர்கள்:
நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.

ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா கேவர்ட் இந்தியா லிட்.**

பம்பாய் - நியூ டெல்லி - கல்கத்தா - சென்னை




# கிளிக் III

12 படங்களை எடுக்கும் சிக்கனத்திற்கு அகில உலகப் பிரசித்தி பெற்ற காமிரா

CMAI-85 TM



ஒன்றல்ல, இரண்டல்ல, பத்துப் பதினேர்துமல்ல; நூற்று முப்பது பரிசுகளைத் தட்டிக் கொண்டு போயிருக்கிறர் இந்த மாணவ மணி!

# பேச்சே என் மூச்சு!

“இன்றைய உயர்கல்வியின் தரம் குறைந்திருக்கிறது என்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம்! குறிப்பாகக் கல்லூரி வட்டங்களில் உள்ள ஹாஸ்டல்களில் தங்கி, ஒழுங்கு, கட்டுப்பாடுகளுக்கு அடங்கிப் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கையை விட வெளியிலிருந்து வகுப்புகளுக்காக மாத்திரம் வந்து போகும் நபர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதும் ஒரு காரணம். ஆனல் நான் முக்கிய காரணங்களாகக் கருதுவது வேறு இரண்டு காரணங்கள். முதலாவது ஆசிரியர்கள், தேவையற்ற ஓர் உயர்வு மனப்பான்மையைத் தங்களிடம் வளர்த்துக் கொண்டு மாணவர்களிடமிருந்து ஒதுங்கி நிற்பது. இரண்டாவது பெற்றேர்கள் கல்லூரிகளில் இடம் தேடும்போதும் அப்புறம் பல நாட்கள் கழித்துப் பரீட்சை முடிவுகள்மட்டுமே பத்திரிகைகளில் வெளியாகும் போதும் தங்கள் பிள்ளைகளைப் பற்றி நினைப்பது!

''ஆசிரியர்கள் இறங்கி வந்து மாணவர்களுடன் சற்றுச் சகஜமாகப் பழகி அவர்களது தேவைகளைப் புரிந்து கொள்வதன் மூலமும், பெற்றேர்கள் கல்விக்கூடங்களுடன் அடிக்கடி தொடர்பு கொண்டு தங்கள் பிள்ளைகளின் அறிவு வளர்ச்சி பற்றித் தெரிந்து கொள்வதன் மூலமும் கல்வியின் தரம் நிச்சயம் உயரும் என்று நான் எந்த மேடையிலும் அடித்துப் பேசத் தயார்!''

மேற்கண்ட பேச்சு முடிந்ததும் நான் கரகோஷம் செய்தேன். காரணம், மேலே கண்ட வாசகங்களை உணர்ச்சியுடன் அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்த நபர் அடிக்கடி மேடையில் நின்று கரகோஷ ஒலிக்குக் காதுகளைப் பழக்கிக் கொண்டவர்! நான் மாத்திரம் ஏன் கைதட்டாமல் இருக்கப் போகிறேன்! 'கைதட்டினல் போதாது ஸார்! கோப்பை கொடுக்க வேண்டும்!', என்றார் பேசியவர் சிரித்துக்கொண்டே.

ஆம்; கரகோஷத்துடன் மாத்திரம் அவர் திருப்தியடைவதில்லை! ஒவ்வொரு தடவையும் மேடையை விட்டு இறங்கும் போது ஒரு கோப்பையையோ, கேடயத்தையோ, பதக்கத்தையோ வாங்கிப் போகக் கைகளையும் பழக்கிக் கொண்டவர். இந்தச் சாதனையைப் பத்து தடவையோ பன்னிரண்டு தடவையோ அல்ல; நூற்று முப்பது தடவைகள் இந்தச் சாதனையைச் செய்து காட்டி, 'பேச்சு என் மூச்சு' என்பது போல் விளங்குபவர் சென்னை விவேகானந்தா கல்லூரியில் இரண்டாவது எம்.ஏ. வகுப்பில் படிக்கும் இளைஞர் எம்.எஸ். ராகவன்தான்!

பள்ளி நாட்களில் விளையாட்டில் ஆர்வம் காட்டி வந்தவருக்குத் திடீரென்று பேச்சுத் துறையில் நுழையவும் ஆசை பிறந்தது.

மாணவர்கள் பேச்சுப் போட்டி ஒன்றில் கலந்து கொள்ளப் பிரமாதமாகத் தயார் செய்து கொண்டு, போட்டி நடக்குமிடத்துக்குப் போனர். அந்த இடம் வெறிச்சோடியிருந்தது. ''என்ன தம்பி! நீ தேதியைச்

சரியாகப் பார்க்கவில்லையா ? பேச்சுப் போட்டி நேற்றே நடந்து முடிந்து விட்டதே '' என்றாராம் | அங்கிருந்த ஆசாமி.

இரண்டாவது சந்தர்ப்பத்தில் அவர் பெயர் கொடுத்திருந்த பேச்சுப் போட்டி நடக்கவிருந்த வேளையில் எதிர்பாராதவித மாக ஒரு கிரிக்கெட் மாட்ச் வந்து சேர்ந்த தாம். 'பேச்சில் பங்கெடுத்துக் கொள்வதா? வீச்சில் பங்கெடுத்துக் கொள்வதா?' என்ற மனப் போராட்டத்தில் வீச்சுதான் வெற்றி பெற்றது. பேச்சுக்குப் போகவில்லை.

மூன்றாவது சந்தர்ப்பத்தில் ..... என்ன ஆச்சரியம்! அன்றையப் போட்டியில் பங் கெடுத்துக் கொள்ளப் பெயர் கொடுத்த மாணவர்கள் எல்லாருமே — ராகவன் ஒரு வரைத் தவிர — வேறு எங்கோ போய்விட் டனர். போட்டி ரத்து செய்யப்பட்டது!

இந்த அநுபவங்களெல்லாம் அவரை மனம் தளரச் செய்திருந்தால், சென்னைக் கலாசாலைகளின் மாணவர் குழாம், ஓர் அருமையான பேச்சாளரை இழந்திருக்கும் ! ஆனால் ராகவன் கொஞ்சம்கூடச் சோர்ந்து போக வில்லை. அதனால் கடந்த இரண்டு மூன்று வருடங்களாகத் தொடர்ந்து, எந்தப் பேச்சுப் போட்டியிலும் அது ஆங்கிலமாக இருந்தாலும் சரி, தமிழாக இருந்தாலும் சரி, ராகவனுக்குத்தான் முதல் பரிசு என்ற சம்பிரதாயமே தோன்றியிருக்கிறது.

சென்ற ஆண்டு சம்ஸ்கிருதப் பேச்சுப் போட்டியில் கூடக் கலந்து கொண்டு பரிசைத் தட்டிக் கொண்டு போனார்.

விவேகானந்தா கல்லூரி மாணவர் சம்மேளனத்துக்குக் கடந்த மூன்று ஆண்டு களாகத் தொடர்ந்து தலைவராக இருக்கும் வாய்ப்பும் ராகவனுக்குக் கிட்டியிருக்கிறது. சென்னை சர்வகலாசாலை மாணவர் சம்மேள னத்தின் தலைவரும் இப்போது இவர்தான்.

''சர்வகலாசாலை மாணவர் சம்மேளனம் திறம்பட இயங்கி வந்தாலும், அது சர்வ கலாசாலை நிர்வாகத்திடமிருந்து இன்னும் அதிகாரபூர்வமான அங்கீகாரம் பெறவில்லை. மேலை நாட்டுச் சர்வகலாசாலைகளில் இந்த நிலை இல்லை. நம் சர்வகலாசாலைத் துணை வேந்தர் இந்த விஷயத்தில் ஏன் தயங்குகிறார் என்றும் தெரியவில்லை !

'' 'மாணவர்கள் போராட்டம்' என்ற விஷயத்துக்குத்தான் பரபரப்பாகப் பத் திரிகைக்காரர்கள் முக்கியத்துவம் கொடுக் கிறார்களே தவிர, மாணவர்கள் பங்கெடுத் துக் கொள்ளும் பல சமூக சேவைகள் பொதுமக்களுக்குத் தெரியாமலே போய் விடுகின்றன. சமீபத்தில் ஏற்பட்ட புயல் சேதங்களுக்கு நிவாரணமளிக்கச் சென்னை மாணவர்கள் தீவிரமாகச் சேவை செய் தார்கள் !'' என்றார் ராகவன்.

பாரதி விழாப் பேச்சுப் போட்டி, வாஜ பத்தி ராய் நூற்றாண்டு விழாக் கட்டுரைப் போட்டி எதுவானாலும் சரி, 'முதல் பரிசைக் கொடுங்கள் இப்படி' என்று கேட்குமளவுக் குப் பயிற்சியும் அநுபவமும் பெற்ற ராகவன், 'சிறந்த மாணவர்',. 'சிறந்த நிர்வாகி', 'சிறந்த மாணவ நடிகர்', 'சிறந்த பேச் சாளர்', 'சிறந்த மாணவ எழுத்தாளர்' என்ற வகையிலும் பரிசுகளை வாங்கிக் குவித்துத் தம் கல்லூரிக்குப் பெருமை தேடிக் கொடுத்திருக்கிறார். 'எங்கள் முதல்வர், எந்தப் பிரச்னைக்கும், எங்களையே கலந்து கொண்டு முடிவெடுக்கும் பான்மை கொண் டவர்; இது விஷயத்தில் அவர் பல முதல் வர்களுக்கும் முன்னோடியாக விளங்குகிறார்' என்று பெருமிதத்துடன் சொல்லித் தம் குரு பக்தியையும் வெளிப்படுத்துகிறார் ராகவன்.

'' ஏதாவது புதுமையாகச் செய்ய வேண் டும்! ஆனால் அந்தப் புதுமை பைத்தியக் காரத்தனமான புதுமையாக இல்லாமல் மரபை ஒட்டிய புதுமையாக இருக்க வேண் டும். இது என் குறிக்கோள்'' என்ற ரீதியில் பேசும் இந்த சர்வகலாசாலை வாலிபர் பிரான்ஸிலிருந்தும், மலேஷியாவிலிருந்தும் மாணவர் குழுக்களுக்கு வந்திருக்கும் அழைப் புக்களைக் கையில் வைத்துக் கொண்டு இறுதிப் பரீட்சையைத் தொடர்ந்து வரும் விடுமுறை யில் எந்த நாட்டு மாணவர் சமூகத்தைக் கண்டு அளவளாவிப் பயன் பெறலாம் என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறார்.

— கோமதி சுவாமிநாதன்

---




சாக்ரடீஸிடம் அவரது சிஷ்யன் ஒருவன், "அறிவுக்கும் புத்திசாலித்தனத்துக்கும் என்ன வேறுபாடு?'' என்று கேட்டான். உடனே சாக்ரடீஸ் சிஷ்யனை நோக்கி, ''அதோ இருக்கிறானே அந்தக் கிழவனிடம் சென்று இங்கிருந்து கிராமத்தை அடைய எவ்வளவு நேரம் ஆகும்? என்று கேட்டுவிட்டு வா'' என்றார். சிஷ்யனும் சென்று அக்கிழவனிடம், "கிராமத்தை அடைய எவ்வளவு நேரமாகும்?'' என்று கேட்டான். ஆனால் அக்கிழவனோ பதில் கூற வில்லை. சிஷ்யன் மீண்டும் ஒரு முறை கேட்டும் அக்கிழவன் பதில் கூறாததால், ஒருவேளை அக் கிழவனுக்குப் புத்தி சுவாதீனம் இல்லையோ என்று நினைத்து வந்த வழியே திரும்பிச் சில அடிகள் எடுத்து வைத்தான். அப்போது அக்கிழவன் சிஷ்யனைக் கூப்பிட்டு, ''நீ ஐந்து நிமிடங்களில் கிராமத்தை அடையலாம்'' என்று கூறினான்.

''தாங்கள் ஏன் இந்தப் பதிலை நான் கேட்டதுமே கூறியிருக்கக் கூடாது?'' என்றான் சிஷ்யன்.

உடனே அக்கிழவன், ''நீ எவ்வளவு வேகமாக நடக்கிறாய் என்பதைப் பார்க்காமல் எப்படியப்பா, நீ கிராமத்தை அடையும் நேரத்தைக் கூற முடியும்? அதனால்தான் உன் நடையைக் கண்டபின் கூறி னேன்'' என்றான். சிஷ்யனும் ஒன்றும் பதில் கூற முடியவில்லை. நடந்ததை சாக்ரடீஸிடம் வந்து கூறியதும், சாக்ரடீஸ், ''அதற்குப் பெயர்தான் புத்தி சாலித்தனம்'' என்றார்.

ஆதாரம்: ''காரவான்'' - தகவல்: வி. சம்பத்குமார்





படங்கள்: இரக்க விடுதியில் குழந்தைகளிடம் அன்பு செலுத்தியும் வலோதிகருக்கும் பணிவிடை செய்யும் பராமரிக்கும் நர்சுகள்.

# தாய்க்குலத்தின் தருமப் பணி

**திருவனந்தபுரத்தில் நர்சுகள் வேலை நிறுத்தம்! கவனிக்க நாதியற்றுப் போனதால் ஆசுபத்திரியில் ஒருவர் ஆவி பிரிந்தது!**

**பல நோயாளிகள் பணிவிடைக் குறைவினால் பெரிதும் அவதியுற்றுப் போய்விட்டார்கள்!**

**மருந்துப் பெட்டிகளின் சாவிகளைக் கூடச் சிலர் எடுத்துப் போய்விட்டதனால் ஏற்பட்ட தொல்லை சொல்லி முடியாது!**

இந்தச் செய்திகளைப் பத்திரிகை வாயிலாக அறிந்த போது மனம் என்ன பாடு பட்டது! பணிவிடையையே தமது வாழ்வாகக் கொண்டு, அதற்காகச் சிறந்த



பயிற்சி பெற்ற தாய்க் குலத்தைச் சேர்ந்தவர்களா இப்படியொரு காரியத்தில் இறங்கினார்கள் என்று மனத்தை வேதனை அரித்தெடுத்தது!

ஆயினும், 'பெண் மனம் இதற்குச் சிறிதும் துணியாது; தாயுள்ளம் இது போன்ற காரியங்களுக்கு இடம் தந்திராது; ஏதோ ஒரு தீய சக்தி உள்ளோடியாக வேலை செய்திருக்குமே ஒழிய, மனமுவந்து நர்சுமார்கள் இத்தகைய இழி செயல்களில் இறங்கியிருக்க மாட்டார்கள்' என்னும் எண்ணம் ஓடியது.

தாய்க்குலத்தின் பெருமையை அறிந்தவர்களின் மனத்தில் இந்த எண்ணம் தலைதூக்கி நின்றால் அது மிகப் பொருத்தமே.

இந்தச் சிறப்பியல்பையே தனமாகக் கொண்டுதான் எத்தனையோ பெண்கள் நர்ஸாகப் பயிற்சி பெற்றுப் பணிவிடையினால் கிடைக்கும் இன்பத்தை அநுபவித்து மகிழ்ந்து வருகிறார்கள்.

நர்ஸ் பயிற்சி இப்பொழுது பல கிளைகளாக விழுது விட்டுள்ளது! பிள்ளைப் பேற்றினைக் கவனிப்பவர்கள், சின்னஞ் சிறு சிசுக்களைப் பராமரிப்பவர்கள், நோயாளிகளைக் கவனிப்பவர்கள். தீராத நோய்களைத் தீர்க்க முடியாவிட்டாலும், நோயின் தாபம் தெரியாமல் தங்கள் பணிவிடையினால் பராமரிப்பவர்கள், தொற்றுநோய்களைத் தடுத்துக் குணப்படுத்துவதில் தேர்ந்தவர்கள், போரில் காயமுற்ற ராணுவவீரர்களுக்குச் சிசுருஷை செய்பவர்கள்!

இவர்களுக்கெல்லாம் விசேஷப் பயிற்சி அளிக்கவென்று எத்தனையோ கல்வி நிலையங்கள் இயங்கி வருகின்றன.

இந்தப் பணிக்கு வருபவர்கள் பொறுமையைப் பூஷணமாகக் கொண்டவர்களாக

இருக்க வேண்டும். 'சள்' என்று எரிந்து விழாமல் இன்முகத்துடன் செயல்படுகிறவர்களாக இருக்க வேண்டும். நோயாளிகளின் குறிப்பறிந்து உதவி புரிகிறவர்களாக இருக்க வேண்டும். இப்படிப்பட்டவர்கள் பயிற்சி பெற்றவர்களாகவும் இருந்து விட்டால், அவர்களது உபசரணை மூலமே பாதிக்கும் மேல் நோய் தீர்ந்து விட்டது போன்ற உணர்வு ஏற்படும்.

சந்தேகமிருந்தால், கீழ்ப்பாக்கம் ஹால்ஸ் ரோட்டில் இயங்கி வரும் இரக்க விடுதியை ஒரு முறை வந்து பாருங்கள்!

எத்தனை அநாதைக் குழந்தைகள்! இளம்பிள்ளை வாதத்தினால் நடமாட முடியாத நிலை; கூன், குருடு என்று ஒருசில; மூப்பினால் தளர்ந்துவிட்ட ஆண்பெண்களுக்கும் கணக்கில்லை. நாதியற்று நிற்கும் சகோதர—சகோதரிகளுக்கும் ஏழை எளியவர்களுக்கும் தஞ்சமளிக்கிறது 'மெர்ஸி ஹோம்' என்னும் பெயரால் இயங்கி வரும் இந்த இரக்க விடுதி.

யாருமற்ற அநாதையாக யாராவது எங்காவது கிடக்கிறார்கள் என்று தெரியவந்தால், இவ்விடுதியைச் சேர்ந்த சகோதரிகள் அவர்களை எடுத்து வந்து ஆதரவு தருகிறார்கள். மருந்து — மாயம், உடை—உணவு எல்லாம் அளித்து அவர்களையும் மனிதர்களாக நடமாட வைக்கத் தம்மால் இயன்ற அளவு முயல்கிறார்கள். ஆண்—பெண்—குழந்தைகள் அடங்கலாக இப்பொழுது ஏறக்குறைய இருநூற்றைம்பது பேர் இவ்விடுதியில் உள்ளார்கள்.

இவர்களில் அறுபதுக்கும் மேல் விவரமறியாப் பாலகர்கள்! பிறந்த பத்தாம் நாளே தாயைப் பறி கொடுத்தவர்கள், இளம்பிள்ளை வாதத்தினால் செயலற்றுப் போனவர்கள், இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்து தாயின் அரவணைப்பு கிட்டாமல் போனவர்கள் என்று இப்படிப் பல குழந்தைகள். இந்த அநாதைகளுக்கெல்லாம் தாயாக, தாய்க்கும் மேலாக விளங்குபவர்கள் தாதிகள்தான்!

ஏழெட்டு வயது இருக்கும் ஒரு சிறுவனுக்கு. "இவன் பெயர் மணி" என்றாள் அவனைச் சுட்டிக்காட்டி ஒரு நர்ஸ். கைகூப்பி வணக்கம் தெரிவித்த அவனைப் பற்றி, "இவன் பிறந்த ஏழாவது நாளே இங்கு வந்து விட்டான். இப்பொழுது இவனுக்கு இந்த விடுதிதான் தாய் வீடு. பொங்கல் விடுமுறைக்காகத் தாய்வீட்டுக்கு வந்திருக்கிறான்!" என்றாள்.

"இதுதான் தாய்வீடு என்கிறீர்கள். பொங்கல் விடுமுறைக்காகத் தாய்வீட்டுக்கு வந்திருக்கிறான் என்றும் கூறுகிறீர்கள். நீங்கள் கூறுவது விளங்கவில்லையே!"

"விளங்க வைக்கிறேன். மாமல்லபுரத்துக்கு அருகில் இவனைப் படிக்க வைத்திருக்கிறோம். இவன் அங்கேதான் தங்கிப் படிக்கிறான். விடுமுறையாகையால் இங்கு வந்திருக்கிறான்" என்றாள் அவள்.

தாயினும் சாலப் பரிந்து இத்தனை குழந்தைகளையும் வளர்க்கும் இந்தத் தாதியர்கள் இன்னுமோர் அரிய பணியையும் புரிந்திருக்கிறார்கள்! இங்கு வந்து உடல் நலம் தேறி ஓரளவு செயல்படும் அளவுக்கு வந்தவர்களிடம் சில குழந்தைகளை ஒப்படைத்து வளர்ப்புப் பணியின் பெருமையை உணரச் செய்துள்ளார்கள்.

'இவள் இந்தக் குழந்தையின் தாய்!' என்று கூறினார்கள், கால் சூம்பி எழுந்து நடமாட முடியாத ஒரு கன்னிப் பெண்ணைக் காட்டி. அந்தக் கன்னித் தாய்க்கு அந்தக் குழந்தையிடமுள்ள வாஞ்சையையும், தாயற்ற அந்தக் குழந்தை அவளிடம் காட்டும் பாசத்தையும் கண்ட பொழுது மனம் புல்லரிக்கவே செய்தது!

இன்னொரு பெண் தையற்கலையில் தேர்ந்து அங்குள்ளவர்களுக்கு உடை தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தாள். பெரிய குழந்தைகள் சிறு குழந்தைகளுக்கு அமுதூட்டி மகிழும் காட்சியைக் கண்டோம். வாத நோயினால் நடமாட முடியாமற் போன பலருக்குப் புது வகை நடைவண்டி கொடுத்து நடமாட வைக்கும் முயற்சியையும் பார்த்தோம்.

அது மட்டுமா? குணம் பெற்றவர்கள், மாடியில் உள்ள விடுதிக்கு மாற்றப்பட்டிருந்தார்கள். அவ்விடத்தைத் துப்புரவாக வைத்துக் கொள்ளும் பொறுப்பை அவர்களிடமே விட்டிருக்கிறார்கள்.

ஆண்களில் சிலர் மருந்து — மிக்சர் ஆகியவை கொடுக்கும் பணியை மேற்கொண்டிருக்கிறார்கள். முடியாதவர்களுக்கு முடிந்தவர்கள் உதவக் கற்றிருக்கிறார்கள். "உலகத்தில் யாரும் உதவாக்கரையில்லை. அவரவரால் இயன்ற பணியைச் செய்ய முடியும். 'தன் கையே தனக்கு உதவி' என்று பாடுபட முடியும்" என்னும் பேருண்மையை இங்குள்ளவர்களுக்குப் புகட்டியிருக்கிறார்கள்! பிணியாளர்களையும் பணியாளர்களாக மாற்றித் தன்னம்பிக்கை கொள்ளச் செய்யும் பண்பை வளர்க்கிறது இந்த இரக்க விடுதி. சுருங்கச் சொன்னால், தாய்மார்களிடம் காணப்படும் இரக்க உணர்வை இங்குள்ள நோயாளிகளும் கற்றுத் தேர்ந்திருக்கிறார்கள்.

இரக்கம்தானே இந்தப் பணியின் மூலதனம்? இரக்கம் காட்டி இரக்கம் கற்பிக்கும் இவர்களது பணி இரக்க சிந்தையுள்ளவர்களின் நன்கொடையின் உதவி கொண்டே நடைபெறுகிறது.

இவ்விடுதியின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருக்கும் மதர் ரஃபேல் முப்பதாண்டுகளுக்கும் மேலாகக் கும்பகோணத்தில் தொழுநோய் விடுதியில் அரும் தொண்டாற்றியவர். மருந்து — மாயங்களைக் காட்டிலும், இரக்க உள்ளமும் சிறந்த பணிவிடையுமே நோயாளிகளின் உள்ளத்திலே உறுதியை உண்டுபண்ணிப் பிணி தீர்க்கும் என்ற நம்பிக்கை மிகக் கொண்டவர். இதே 'மிஷனரி' உணர்வு நாட்டில் உள்ள மருத்துவ மனைகள் அனைத்திலும் ஏற்பட வேண்டும் என்னும் பேராவல் கொண்டவர்.

இந்த விடுதியில் இருக்கும் நான்கு நர்ஸ்கள் அங்குள்ள பிணியாளர்களையெல்லாம் பணியாளர்களாக ஆக்க மேற்கொண்டிருக்கும் முயற்சியை எத்தனை பாராட்டினாலும் தகும். பயிற்சி பெற்ற நர்ஸ்மார்கள் இவர்களது செயல் திறனைப் பார்த்தால், பணத்தைக் காட்டிலும் பணியில் உள்ள பெருமையை உணர்வார்கள்.

# சத்திய எழுத்து

மீ. லி. சபரிராஜன்

காந்தி மகான் எழுபத்தெட்டாண்டுகள் வாழ்ந்தார். அவர் உயிர் வாழ்ந்தபோது மக்கள் அவரைத் தெய்வமாகப் போற்றினார்கள். அவருடைய பேச்சை பக்தியுடன் கேட்டார்கள். அவர் எழுத்தை ஆர்வத்துடன் படித்தார்கள். அவர் மறைந்து சுமார் இருபது ஆண்டுகள் கழிந்து விட்டன. இன்று நாட்டின் நிலைமையை நாம் கவனித்துப் பார்க்கும்போது வாழ்நாள் முழுவதும் அவர் செய்து வந்த உபதேசங்களெல்லாம் என்னவாயின, அவர் வாழ்ந்தது வீண் என்ற ஐயம் உண்டாகிறது.

தொழிலதிபரும் காந்தியடிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவருமான திரு கனசியாமதாஸ் பிர்லா அவர்கள் ஓர் உதாரணத்தின் மூலம் இந்த ஐயத்தைப் போக்குகிறார். "மழை பெய்தால் எங்கும் நீர் மயமாய்த் தெரிகிறது. கோடையில் எல்லாம் வறண்டு போகிறது. இதனால், 'மழை பெய்து என்ன பயன்?' என்று கூற முடியுமா? வேனிற்காலத்தில் வயல்களில் தானியங்கள் நிறைந்திருக்கின்றன. இது மழையின் பெருமையையே புலப்படுத்துகிறது. மழை நீர் புலங்களின் மண்ணில் புகுந்து மறைந்து விட்டது. ஆனால் அதே நீர் தானிய மணிகளில் புகுந்து வாழ்கிறது. கழனிகளில் நீர் தேங்கியிருந்தால் அகத்தும் பரவும், சேறு, கொசு, நாற்றம் முதலியன உண்டாகும். தானியத்தினுள் புகுந்த அது அமுதமாகி விட்டது. மகான்களின் உபதேசங்களும் இதைப் போலத்தான். 'மழை நீர் எங்கே?' என்று கோதுமை மணியிடம் கேளுங்கள். அது தன்னுள் வாழ்வதாய் மறுமொழி கூறும்."

இவ்விதமே காந்தி மகானுடைய உபதேசங்களும் மக்களிடையே வாழும். அவை ஒரு போதும் அழியா. மனித குலம் சத்திய நெறியை நோக்கி அடியெடுத்து வைப்பதற்கு அவை இன்றியமையாதனவாகும்.

பல்லாண்டுகள் நம்மிடையே வாழ்ந்த அம்மகாபுருஷர், அரசியல், சமூக, பொருளாதாரப் பிரச்னைகளைப் பற்றி மட்டுமல்லாது பல்வேறு விஷயங்களைப் பற்றியும் தம் கருத்





துக்களைக் கூறியிருக்கிறார். அவர் அபிப்பிராயம் தெரிவிக்காத விஷயமே இல்லை என்று கூறலாம்.

சென்னை காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தார் அவற்றையெல்லாம் தொகுத்து எளிய தமிழில், அழகான முறையில் வெளியிட்டு வருகிறார்கள். இது வரை மொத்தம் பதினொன்று தொகுதிகள் வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் சில தொகுதிகளைப் பார்ப்போம்.



பத்தாம் தொகுதி:

இதில் கடவுளைப் பற்றியும், சமயத்தைப் பற்றியும் காந்தி கூறியவை அடங்கியுள்ளன. கடவுள் இருக்கிறாரா? இருந்தால் அவர் ஒருவரா, பலரா? ஏன் பிரார்த்தனை செய்ய வேண்டும்? உலகம் உண்மையா, பொய்யா? இத்தகைய கேள்விகள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழக்கூடியவையே. காந்தியடிகள் அவற்றை இங்கு அழகாகவும் சுவையாகவும் விளக்கியுள்ளார். அவற்றுள் ஒன்றிரண்டை இங்கு குறிப்பிடுகிறேன்.

ஒரு முறை கல்லூரிப் பேராசிரியர் காந்தியடிகளிடம் சென்று, "தங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருந்தால் அந்த நம்பிக்கைக்கு அடிப்படை என்ன?" என்று கேட்டார்.

இதற்குக் காந்திஜி கூறியதாவது: "இதைப் பற்றி வாதத்தின் மூலம் மற்றவர்களை நான் திருப்திப்படுத்த வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், நான் தோல்வியடைந்தவனாவேன். ஆனால் இது மாத்திரம் நான் கூறமுடியும். நீங்களும் நானும் இப்போது இந்த அறையில் உட்கார்ந்து கொண்











டிருப்பது எவ்வளவு நிச்சயமோ, அதைக் காட்டிலும் கடவுள் இருக்கிறார் என்பது அதிக நிச்சயமாகும். நான் காற்று இல்லாமலும் தண்ணீர் இல்லாமலும் உயிர் வாழலாம். ஆனால் கடவுள் இல்லாமல் உயிர் வாழ முடியாது என்பதையும் நான் உறுதியாகக் கூற முடியும். என் கண்களை நீங்கள் பிடுங்கிவிடலாம்; அதனால் நான் இறந்துவிட மாட்டேன். அது போலவே, நீங்கள் என் மூக்கை அறுத்துவிடலாம். அதுவும் என்னைக் [கொன்றுவிட முடியாது. ஆனால் கடவுளிடத்தில் எனக்குள்ள நம்பிக்கையை நீங்கள் சிதைத்து விட்டால் நான் இறந்தவனாவேன்."

இறைவனிடம் காந்தி அடிகளுக்குள்ள உறுதியான நம்பிக்கையை இதன் மூலம் நாம் அறிந்து வியப்படைகிறோம்.

இனி, கடவுள் யார், அவர் எத்தகையவர் என்பது பற்றி அவர் கூறும் விளக்கத்தைப் பார்ப்போம். ''அவர் ஒருவர். அதே சமயத்தில் அவர் பலராகவும் இருக்கிறார். அணுவைக் காட்டிலும் சிறியவராகவும் இமயமலையைக் காட்டிலும் பெரியவராகவும் இருக்கிறார். அவர் கடல் நீரில் ஒரு துளியில்கூட அடங்கியிருக்கிறார். அதே சமயம் அவர் ஏழு கடல்களிலும் அடங்க முடியாதவாறு அவ்வளவு பிரும்மாண்டமானவராக இருக்கிறார். அவர் பகுத்தறிவுக்கு எட்டாதவர். அதற்கு அப்பாற்பட்டவர். எனினும், கடவுள் இருப்பதை மறுக்க விரும்புவோருக்கு அவ்விதமே செய்யச் சுதந்திரம் உண்டு. கடவுள் இரக்கமும் கருணையும் உள்ளவர். அவர் பூமியில் உள்ள சாதாரண மன்னரைப் போன்றவர் அல்லர். அவரது ஆட்சி அதிகாரத்தை நாம் ஒப்புக் கொள்ளும்படி செய்ய அவருக்கு ராணுவம் எதுவும் தேவையில்லை. அவர் நமக்குச் சுதந்திரம் அளிக்கிறார். அப்படியிருந்தும் அவரது கருணையானது அவரது விருப்பத்துக்குத் தலை வணங்கும்படி நம்மை வற்புறுத்துகிறது. அவரது விருப்பத்துக்கு நம்மில் யாராவது தலை வணங்காவிடில், 'அப்படியே இருக்கட்டும். அதற்காக எனது சூரியன் உன்மீது குறைவாய்ப் பிரகாசிக்க மாட்டான்; எனது மேகங்கள் உனக்காகக் குறைவாய் மழை பெய்யா; என் ஆட்சியை அங்கீகரிக்கும்படி நான் உன்னை வற்புறுத்த வேண்டிய அவசியமில்லை' என்றே கடவுள் கூறுகிறார். அத்தகைய கடவுள் இருப்பதை அறியாதவர்கள் மறுத்துக் கொண்டிருக்கட்டும். அவரிடத்தில் நம்பிக்கையுள்ள கோடிக்கணக்கானவர்களில் நானும் ஒருவன்.'' (பக்கம் 28)

இறைவனைக் கருணையின் வடிவாய்ச் சொல்லிலே புனைந்து காட்டும் இந்த ஓவியம் அற்புதமானதாயிருக்கிறது. இதைப் படித்த பிறகு அவனிடம் நம்பிக்கை அற்றவர்களுக்குங்கூட நம்பிக்கை உண்டாகும்.

நூலை இன்னும் சற்றுப் புரட்டுவோம்.

பக்கம் 205:

காந்தியின் முன் கடவுள் எப்போதாவது தோன்றியிருக்கிறாரா?

இந்தக் கேள்வியை டாக்டர் மாட் என்பவர் ஒரு முறை காந்தியடிகளிடம் கேட்டார். அதற்குக் காந்தியடிகள் கூறியதாவது : ''கடவுள் ஒரு போதும் உங்கள் எதிரில் நேராய் வந்து தோன்ற மாட்டார். உங்கள் வாழ்க்கையில் காரிருள் சூழ்ந்த சமயத்தில் நீங்கள் மீட்கப்படுவீர்கள். அதிலிருந்தே கடவுளின் அருளை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். ஒரே ஓர் அநுபவம் மட்டும் என் மனத்தில் இன்றும் தெளிவாய் இருந்து வருகிறது. அது, தீண்டாமை ஒழிப்பு சம்பந்தமாய் நான் இருபத்தொரு நாட்கள் உண்ணாவிரதம் இருந்ததைப் பற்றியதே. மறுநாள் உண்ணாவிரதத்தைப் பற்றிப் பிரகடனம் செய்ய வேண்டியிருக்கும் என்ற உத்தேசம், நான் முதல் நாள் படுக்கச் சென்றபோது எனக்குச் சிறிதும் இல்லை. அன்றிரவு சுமார் பன்னிரண்டு மணிக்கு 'நீ உண்ணாவிரதம் இருக்க வேண்டும்' என்று ஒரு குரல் கூறுகிறது. அந்தக் குரல் என் உள்ளேயிருந்து வந்ததா, அல்லது வெளியிலிருந்து வந்ததா என்பதை நான் கூற முடியாது. 'எத்தனை நாட்கள்?' என்று கேட்கிறேன். 'இருபத்தொரு நாட்கள்' என்று அந்தக் குரல் கூறுகிறது. 'உண்ணாவிரதத்தை எப்போது ஆரம்பிக்க வேண்டும்?' என்று நான் கேட்கிறேன். 'நாளைக்கே ஆரம்பித்து விடு' என்கிறது அந்தக் குரல்.''

அப்புறம் என்ன? காந்திமகான் உண்ணாவிரதத்தைத் தொடங்கினார். வெற்றியுடன் முடித்தார்.

இதைப் படிக்கும்போது நம் மெய் சிலிர்க்கிறது. இறைவனுடைய மெய்யடியார்கள் ஒரு சிலருடைய வாழ்க்கையில்தான் இத்தகைய சம்பவங்கள் நிகழ முடியும்.

கடவுள்— சமயம் சம்பந்தமாய்ச் சாதாரண மக்களுக்குத் தோன்றக் கூடிய ஐயங்கள் பலவற்றையும் இவ்விதம் சுவையாகவும் தெளிவாகவும் காந்தியடிகள் தீர்த்து வைத்திருக்கிறார்.

இனி அடுத்த தொகுதியைப் பார்ப்போம்.

ஏறக்குறைய எண்ணூறு பக்கங்கள் கொண்ட இந்நூல் முழுவதும் பகவத் கீதை சம்பந்தமானது.

கீதையைத் தம் தாயெனப் போற்றினார் காந்தியடிகள். இதைப் பற்றி அவர் கூறுவதைக் கேட்போம். ''இந்தப் பூமியில் என்னைப் பெற்றெடுத்த தாயாரை நான் இழந்து வெகு காலமாகிறது. ஆனால், அதிலிருந்து அந்த ஸ்தானத்தை இந்த அழிவற்ற தாய் பூரணமாய் ஏற்றுக் கொண்டு விட்டாள். அவள் என்னை எக்காலத்திலும் கைவிட்டதில்லை. எனக்குக் கஷ்டமோ துன்பமோ நேரும்போது நான் அவள் மடியில் அடைக்கலம் அடைகிறேன்.'' (பக்கம் 16)

இளமைப் பருவத்திலிருந்தே அவருக்குக் கீதையிடம் பக்தி இருந்தது. அவரது உள்ளத்தை அது கவர்ந்தது. அந்நூல் முழுவதையும் மனப்பாடம் செய்ய விரும்பினார். இதை அவர் எவ்விதம் செய்து முடித்தார் என்பதையும் அவரே சொல்லக் கேட்போம். ''இதற்காக என் காலைக் கடன்களைச் செய்யும் நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டேன். பல் துலக்குவதற்குப் பதினைந்து நிமிடங்களும் ஸ்நானம் செய்ய இருபது நிமிடங்களுமாக மொத்தம் முப்பத்தைந்து நிமிடங்கள் ஆயின. மேனாட்டின் பாணியில் நான் நின்றுகொண்டே பல் துலக்குவது வழக்கம். அப்போது எதிரில் உள்ள சுவரில் கீதையின் சுலோகங்கள் எழுதப்பட்ட காகிதத்தை ஒட்டி வைத்தேன். நினைவுபடுத்திக் கொள்வதற்காக அதை அவ்வப்போது பார்த்துக் கொண்டேன். அந்தந்த நாள் பகுதியை மனப்பாடம் செய்து கொள்வதற்கும், ஏற்கனவே மனப்பாடம் செய்த சுலோகங்களை நினைவுபடுத்திக் கொள்வதற்கும் அந்த நேரம் எனக்குப் போதுமானதாயிருந்தது.'' (பக்கம் 152)

இவ்விதம் அவர் கீதையை மனப்பாடம் செய்து கொண்டார்.

அப்புறம்?

## கல்யாண விசேஷ விற்பனை!

உயர்தர காஞ்சீபுரம், பனாரஸ் பட்டுச் சேலைகள்

மற்றும் நவீன மில் ஜவுளிகளுக்கு

# P. B. லக்ஷ்மண ஸா & பிரதர்ஸ்

பனகல் பார்க், தி. நகர், சென்னை-17 – போன்: 43485

சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2 – போன்: 86966

---

# தீப்தி*

இல்லந்தோறும்
பிரபலமாகிவிட்ட
பெயர்

தி ஓரியண்டல் மெட்டல்
இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.

---

# நேருவின் உலக சரித்திரம்

"உலக சரித்திரக் காட்சிகள்" என்ற ஆங்கில மூல நூலின் சுருக்கம்

தொகுத்தவர்: ஸால் கே. பாடோவர்

தமிழாக்கியவர்: தா. நா. ஸேனுபதி

580 பக்கங்கள் – விலை ரூ. 7.50

## கல்ச்சரல் புக்ஸ் பிரைவேட் லிமிடெட்

மதராஸ்-11

# தரத் தேயிலைத்தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

## லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ




குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள் —உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள் நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள்—ஆம்!—அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட!

தரத் தேயிலைத் தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப்பெருமை வாய்ந்தது.
தன்னிகரற்றது என்பது உண்மை.

**லிப்டன் என்றாலே**




**நல்ல டீ**

LHGC-3 TAM

உபதேசத்தைத் தம் வாழ்க்கையிலும் கடைப்பிடித்து ஒழுக முயன்றார்.

இது கஷ்டமல்லவா ?

அவ்விதம் காந்தியடிகள் வாழ முயன்ற போது புதிய புதிய அநுபவங்கள் பல ஏற்பட்டன. அவற்றை அடிப்படையாய் வைத்துக் கீதைக்கு விளக்கம் கூறப் புகுந்தார். அதன் விளைவாய்த் தோன்றியதே இவ்வரிய நூல்.

இதில் சில சொற்களுக்குக் காந்தி கூறும் விளக்கம் புதியவை; இது வரை யாரும் சொல்லாதவை என்று கூறலாம். உதாரணமாக, 'யக்ஞம்' என்ற சொல்லுக்கு 'வேள்வி' என்றே பலர் பொருள் கூறியிருக்கிறார்கள். ஆனால் காந்தி இதற்கு 'உடலுழைப்பு' என்று பொருள் கொடுக்கிறார்.

(பக்கம் 140–143; 400–402)

காந்தி அடிகளின் மொழிபெயர்ப்புக்கு மகாதேவ தேசாய் எழுதிய நீண்ட முன்னுரையும் இதில் சேர்க்கப்பட்டிருப்பது மற்றொரு சிறப்பாகும். இதைத் தவிர, சங்கர பாஷ்யம், திலகர் எழுதிய 'கீதா ரகஸ்யம்', உபநிடதங்கள், குறள் முதலிய பல நூல்களிலிருந்து எண்ணிறந்த மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன.

சுருக்கக் கூறினால், கீதையைப் பற்றிய எல்லா ஐயங்களையும் தீர்த்து வைக்கும் ஓர் அரிய கருவூலம் இது.

தெய்வத் தன்மை வாய்ந்த அந்தக் கீதையின் அரிய உபதேசத்தைக் கடைப்பிடித்துக் காந்தியடிகள் வாழ்ந்த வாழ்வின் ஒரு சில பகுதிகளை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது பதினான்காம் தொகுதி.

கோகலே, ஜவாஹர்லால் நேரு, வல்லபாய் படேல் போன்ற பல தலைவர்களுக்குக் காந்தியடிகள் எழுதிய கடிதங்கள் இதில் அடங்கியுள்ளன.

அவருக்கு இருந்த நகைச்சுவை உலகமறிந்ததாகும். மாபெரும் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த அம்மகான், சில சமயம் எவ்வளவு வேடிக்கையாகவும் விந்தையாகவும் பேசி, மற்றவர்களைச் சிரிக்க வைத்து மகிழ்கிறார்! அவர் கர்மயோகி என்பதற்கு இதுவே போதிய சான்று.

ஜவாஹர்லால் நேருவுக்கு மொத்தம் எண்பத்திரண்டு கடிதங்கள் எழுதியிருக்கிறார். இதில், இரண்டோரிடங்களில் நேருஜியைக் கடிந்திருக்கிறார். காரணம் என்ன? அவர் சிரித்துப் பேசித் தமாஷாயிருக்கவில்லை என்பதுதான்!

காந்தி கூறுகிறார்: "காரியக்கமிட்டிக் கூட்டங்களில் நீங்கள் உங்களுடைய நகைச்சுவை உணர்ச்சிக்கு ஏன் இடம் கொடுக்கக் கூடாது? பல ஆண்டுகளாய் யாதொரு தகராறுமின்றி வேலை செய்து வந்தவர்களுடன் சுமுகமாக நடந்து கொள்வது உங்களுக்கு ஏன் அவ்வளவு கடினமாய் இருக்க வேண்டும்?" (பக்கம் 175)

சர்தார் படேலுக்குத்தான் அதிகமாய் எழுதியிருக்கிறார். மொத்தம் 263 கடிதங்கள். இவற்றில் அவருடைய நகைச்சுவையை இன்னும் நன்றாய்க் காண முடிகிறது.

படேலின் தமையனார் காலமாகி விட்டார். இதைப் பற்றிச் சர்தாருக்குக் காந்தியடிகள் எழுதிய கடிதத்தில் ஒரு பகுதி. "உங்களுடைய சகோதரர்களை நீங்கள் மிகவும் சீக்கிரமாய் அனுப்பி வருகிறீர்கள் என்று தோன்றுகிறது. அவர்கள் நமக்கும் எங்கேயாவது இடங்களைத் தயார் செய்து வைப்பார்கள். நமது வேலை முடிந்து விட்டதென்று கடவுள் நினைத்தால், அவர் ஒரு நொடியில் நம்மைக் கொண்டு போய்விடுவார்" – (பக்கம் 325) "இன்று நாங்கள் கன்யாகுமரியில் இருக்கிறோம். இது மிகவும் அமைதியான இடமாக இருக்கிறது. நன்கொடைகளாய் வந்த வெள்ளி நாணயங்களை என்னும் சப்தத்தைத் தவிர வேறு எந்த சப்தமும் என் காதில் விழவில்லை!" (பக்கம் 253) "ஜவாஹர்லாலின் அதிர்வெடி அவ்வளவு அபாயகரமானதல்ல. அவ்விதம் கத்தித் தீர்க்க அவருக்குள்ள உரிமையைத்தான் அவர் உபயோகித்தார். அவர் இப்போது அமைதியாகி விட்டாரென்றே நம்புகிறேன்." (பக்கம் 285)

கோகலேயிடம்தான் அவருக்கு எவ்வளவு மரியாதை, அன்பு, பக்தி! குரு அல்லவா? "என்னிடமுள்ள குற்றம் குறைகளையெல்லாம் மன்னிப்பீர்களா? உங்களுக்கு நான் தகுதி வாய்ந்த சீடனாயிருக்கவே விரும்புகிறேன்"

---

### டி.கே.சி.க்கு விருந்து!

ரசிகமணி டி. கே. சி. எளிமையான தமிழ் நடைக்கு ஊக்கம் கொடுத்தார். எங்கேயாவது கிராமத்து மக்கள் கூட்டமாக நின்று பேசுவதைக் கேட்டால், ரசிகமணி சற்று நின்று உற்றுக் கேட்பார், அவர்களது எளிய தமிழை ரசிக்க அவர் ரசனைக்கும் பல சமயம் விருந்து கிடைத்ததுண்டு.

ஒரு சமயம் அவர் தம் நண்பர் ஒருவரிடம் சொன்னார்:



"வருகிற வழியில் இரண்டு பெண்கள் வாய்ச் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். நான் சற்று நின்று கேட்டேன்! ஒருத்தி ஏதோ சவால் விட்டாள். இன்னொருத்தி போட்டாளே ஒரு போடு. அதிலேதான் என்ன நயம்! "அதெல்லாம் எங்கிட்டே நடக்காது. தோசையைத் திருப்பிப் போடலாம்! ஆனால் இட்லியைத் திருப்பிப் போட முடியுமா?" என்றாள். எவ்வளவு எளிய உவமை!" - அ.கி.மூர்த்தி

**தெரியுமா?**



கடலின் ஆழத்தில் 'கிரில்' என்ற மீன்கள் நிறைய ஒளியினைக் தருகின்றன. இம்மீன்கள் கூட்டமாக நெருங்கியிருக்கும் பிரதேசம் மிகுந்த ஒளிமயமாய் இருக்கும். வெகு தூரத்திலிருந்துகூட இவ்வொளியை நாம் காணலாம். 10 கிரில் மீன்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டால், அவை தரும் வெளிச்சத்தில் புத்தகம் படிக்க முடியும்!

ஆதாரம்: ''கடல்'' என்ற நூல்.

தகவல்: ஓமலூர் இரா. அஞ்சலி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

(பக்கம் 83) என்கிறார். மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் ஒரு முறை நோயுற்றிருந்தார். அப்போது காந்தி அவருக்கு எழுதிய கடிதத்தில், ''நீங்கள் நோயுற்றிருப்பதாய் நான் கேள்விப்படும் போதெல்லாம், யாராவது ஒரு டாக்டரைச் கட்டுவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், நான் அவ்விதம் செய்வதற்கு அஹிம்சை தடையாயிருக்கிறது!'' என்கிறார். (பக்கம் 496) சாஸ்திரியார் சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கையற்றவர். இதை நினைவில் வைத்துக் கொண்டு அவர் மறுபடியும் கூறுவதாவது: ''அது (சட்டசபைப் பிரவேசம்) உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடிய விஷயமாகும். இல்லாவிட்டால் அடிக்கடி நோய்க்கு இலக்காவோர் சட்டசபை அங்கத்தினர் பதவிக்குத் தகுதியற்றவராவர் என்று நான் ஒரு மசோதா கொண்டு வருவேன்!'' என்கிறார். (496–497)

நண்பர்கள், துணைவர்களுடைய உடல் நலத்தில் அவர் பெரிதும் கவலை கொண்டிருந்தார். அவர்கள் நோயுற்றபோதெல்லாம் ''இந்த அரைகுறை வைத்தியன் சொல்வதைக் கேளுங்கள்'' என்று மன்றாடுகிறார். இயற்கை வைத்தியத்தைச் சிபாரிசு செய்கிறார். ''முழுப் பட்டினி இருங்கள். பழ உணவு சாப்பிடுங்கள். இடுப்பு ஸ்நானம் செய்யுங்கள்'' என்கிறார். ஆனால், பாவம், ஒருவராவது அதை மேற்கொண்டதாய்த் தெரியவில்லை! பயந்து விட்டார்கள் போலும்!

நகைச்சுவை ஒருபுறமிருக்க அவருடைய உயர்ந்த பண்புகள் பலவற்றையும் நாம் இங்கே காண்கிறோம். இடையிடையே அவருடைய அமுத மொழிகளையும் பார்க்கிறோம்.

தலைமையனார் லட்சுமிதாசுக்கு அவர் எழுதிய கடைசிக் கடிதமும் அன்னை கஸ்தூரிக்கு அவர் எழுதிய முதற் கடிதமும் விலை மதிக்கவொண்ணா மாணிக்கங்களாகும்.

காந்தியடிகளின் அகத்தை அறிவதற்கு இந்தக் கடிதத் தொகுதி ஒரு கண்ணாடியாய் விளங்குகிறது. சுதந்திரப் போராட்டத்தின் வரலாற்றையும் நாம் இதன் மூலம் ஓரளவு தெரிந்து கொள்ள முடிகிறது.

மூன்று தொகுதிகளை நாம் இப்போது பார்த்தோம். இதைப் போல் மொத்தம் பதினொன்று தொகுதிகள் வெளிவந்திருக்கின்றன. இவற்றை வரிசையாய்ப் பார்க்கும் போது, காலஞ்சென்ற திருமதி சரோஜினி நாயுடு அவர்களின் நினைவு வருகிறது. ஒரு முறை அவர் காந்தியடிகளிடம் ஒரு மேற்கோளைக் கூறி, ''இதைச் சொன்னவர் யார்? சொல்லுங்கள், பார்ப்போம்!'' — என்றார்.

காந்தியடிகள் யோசித்து யோசித்துப் பார்த்தார். நினைவுக்கு வரவில்லை. ''எப்போதோ கேட்டது போலிருக்கிறது. ஆனால் யார் கூறியது என்பது ஞாபகம் இல்லை'' என்றார் காந்தி.

''கிழவரே, இது நீர் சொன்னதுதான். அதற்குள் மறந்து விட்டீரே, நன்றாய் யோசித்துப் பாரும்!'' என்று சொல்லி விட்டு, விழுந்து விழுந்து சிரித்தார் சரோஜினி தேவி. காந்தி மகானும் சிரித்தார் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

காந்தியடிகளுக்கே தாம் கூறியது நினைவில்லை; அவ்வளவு விஷயங்களை அவர் எழுதியிருக்கிறார். அப்படியிருக்கும் போது, — சாதாரண மக்களாகிய நாம், ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி அவர் என்ன சொல்லியிருக்கிறார் என்பதை உடனடியாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அது கஷ்டமல்லவா? இந்தத் தொகுதிகளை வெளியிட்டதன் மூலம் சென்னை காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தார் அந்தக் கஷ்டத்தைப் போக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு தொகுதியும் ஏறக்குறைய ஐந்நூறு பக்கங்கள் கொண்டது. நல்ல அச்சு. சிறந்த அமைப்பு. விலையோ கொள்ளை மலிவு. ஏழரை ரூபாய்தான். தமிழோ, எல்லாரும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய, அழகான தமிழ். பத்து, பதினொன்றும் தொகுதிகளை திரு ரா. வேங்கடராஜுலு அவர்களும் திரு ஜெயமணி சுப்பிரமணியம் அவர்களும் மொழி பெயர்த்திருக்கிறார்கள். கடிதத் தொகுதிக்குத் திரு ஜெயமணி சுப்பிரமணியமே ஆசிரியராக இருந்து மொழிபெயர்த்திருக்கிறார்.

ஏசுநாதர் தம் உபதேசங்களைத் தாமே எழுதி வைக்கவில்லை. போதிசத்துவருடைய அருள் மொழிகளைப் பிறர் மூலமே நாம் படிக்கிறோம். ஆனால் காந்தியடிகளோ, தம் கருத்துக்களைத் தாமே ஆதாரபூர்வமாய் எழுதி வைத்திருக்கிறார். இந்த வகையில் நாம் அதிர்ஷ்டசாலிகளே. அவற்றைத் தமிழில் நாம் படிப்பதற்குத் துணை புரிந்திருக்கும் காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தார் பாராட்டுக்குரியவர்களாகிறார்கள்.

இடைக்குமிடம்: சென்னை காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், கவர்ன்மெண்ட் ஹவுஸ் எஸ்டேட், மவுண்ட் ரோடு, சென்னை—2.



# பார்வையாளரின் பாவங்கள்



இந்தப் போட்டோக்களில் மகிழ்ச்சி பொங்கும் முகத்துடன் காணப்படும் நபரையும் கன்னத்தில் கை வைத்துக்கொண்டு பரிதாபமாகத் தோற்றமளிக்கும் நபரையும் நமது புகைப்படக்காரரின் காமிரா கிரிக்கெட் மைதானத்தில் சந்தித்தது.

நமது கார்ட்டூன் சித்திரக்காரரும் பல முக பாவங்களைக் கிரிக்கெட் மைதானத்தில் பார்வையாளர்களிடையே கண்டு வரைந்தார். சுட்டிக் காட்டப்பட்டுள்ள முகங்களில் இந்த இப்போது எந்த எந்தக் கட்டங்களில் இந்த முகபாவங்களை அவர் பார்த்து எழுதியிருக்க முடியும்? கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்!

விடை 24ம் பக்கம்.




மானேஜரிடம் குமாஸ்தா தலையைச் சொறிந்து கொண்டு வந்து நின்றார் :

''ஸார் ! நாளு நாளா ஜுரம், தலைவலி. எனக்கு வெள்ளிக்கிழமை லீவு வேணும்!''

''டெஸ்ட் மாட்ச் ஜுரமா? சரி! எனக்கும் ஒரு டிக்கெட் எப்படியாவது வாங்கிக் கொடுத்துடுங்கோ ! லீவு சாங்ஷன் பண்ணி விடுகிறேன் !''

ஃ ஃ ஃ

''என்ன, ஸார்! உங்க பிள்ளே கல்யாணம் இடையிலே நின்னு போயிடுத்தாமே? என்ன காரணம் ?''

''என்ன! நம்ம ஹோம் டிபார்ட்மெண்டு உத்தரவு !''

''எதற்கு?''

''பெண் வீட்டுக்கார மனுசன் எப்படியோ நாலைந்து 'ஓசி' டிக்கெட் வாங்கி அனுப்பி வைச்சார் ! என் மனைவிக்கு மட்டும் அனுப்ப மறந்துட்டார் ! உடனே 'வரப் போகிற சம்பந்தியை உபசாரம் செய்யத் தெரியாதவா வீட்டிலே பெண் எடுக்கப்படாது'ன்னு உத்தரவு போட்டுட்டாள் அவள் !''

''அப்போ ! நீங்க டெஸ்ட் மாட்சுக்குப் போவேள் !''

''நானா ? நடக்காது. அத்தனை ஓசி டிக்கெட்களையும் கோபத்திலே என் அகத்துக்காரி திருப்பி அனுப்பிச்சுட்டா !''

''அப்படியா! அவங்க விலாசத்தைக் கொடுங்க ! என் பிள்ளைக்குப் பெண் பார்க்கிறேன். எப்படியாவது டெஸ்ட் மாட்ச பார்த்தாகணும் ! டிக்கெட் கிடைப்பது குதிரைக் கொம்பா இருக்கு; டெய்லி டிக்கெட்டுகளும் கிடையாதுன்னுட்டா.''

ஃ ஃ ஃ

'' என்ன சாஸ்திரிகளே ! நாளைக்குச் சங்கராந்தி பூஜைக்கு எப்போ வரேள்?''

''பதினொரு மணிக்குத்தான் மாசப் பிறப்பு. கிரிக்கெட் மாட்சை உத்தேசிச்சு பூஜையை சாயங்காலம்கூட வைச்சுக்கலாம், பாதகமில்லே......''

''அப்போ உம்மையும் கிரிக்கெட் மைதானத்திலே சந்திக்கலாம் என்று சொல்லும்!''

ஃ ஃ ஃ

''சம்பந்தி வீட்டுக்காரா வந்தாச்சா ? அவாளுக்கு எல்லா வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறார்களோ?'' என்று கிரிக்கெட் மாட்சுக்கு வந்திருந்த பாட்டி கேட்டாள்.

''என்ன பாட்டி ! இது கிரிக்கெட் மைதானம். சம்பந்திமார் இங்கே எங்கே வந்தா ?''

''என்னடியம்மா ! தெரியாதது மாதிரி பேசறேள்! நம்ம பொண்ணு அஞ்சலை சோபர்ஸ் கல்யாணம் பண்ணிக்கப் போறானேடி ! மேற்கிந்தியக் கோஷ்டிக்காரா— சம்பந்தி வீட்டுக்காரா ஆகலேயோ ?''

''உறவுமுறை அப்புறம் கொண்டாடலாம் ; ஆட்டம் ஆரம்பிக்கப் போறது !''

ஃ ஃ ஃ

''என்ன ஸார் ! மேற்கிந்தியக் கிரிக்கெட் ஆட்டக்காரங்க டெஸ்ட் பந்தயங்களில் 5000 எடுத்திருக்காங்க, ஒரு டெஸ்டில், ஸோபர்ஸ் மட்டும் மூந்நூறு எடுத்திருக்கான்னு பெருமையாச் சொல்லிக்கிறீங்களே! என் மனைவி, இந்த டெஸ்ட் ரிகார்டையெல்லாம் 'பிரேக்' பண்ணியிருக்கா! தெரியுமா?''

''நீங்க என்ன சொல்றீங்க?''

''என் மனைவி ஒரு வருஷத்தில் 730 சாப்பாடு தயார் பண்ணியிருக்கா! 10,000 உருளைக் கிழங்குகளை வெட்டித் தீர்த்திருக்கிறாள்; 8000 கத்திரிக்காய்களைத் துவம்சம் செய்திருக்கிறாள்; வெண்டைக்காய் கணக்கு எண்ணி மாளாது !''

''அப்படியானாலும் இன்னைக்கு என் வஞ்சை உங்ககூட வைச்சுக்கிடறேன்!''





"சரியாப் போச்சு போங்க! ' இடம் பிடிக்கிறதுக்காக ஏழு மணிக்கே ஓடுவீங்க. அத்தனை சீக்கிரம் என்னாலே சாப்பாடு தயார் செய்ய முடியாது. அதான் ஒவ்வொரு வருஷமும் கிரிக்கெட் மாட்சன்னாலே ஒரி லஞ்சு சாப்பிட்டு விடுவீங்களே, இப்போதும் அப்படியே செய்துக்குங்க' அப்படீன்னு சொல்லிட்டா நம்ம பெண்சாதி !"

"நம்ம கதையும் அப்படித்தான் ஸார் ! இப்போ சாப்பாட்டுக்கு யாரைப் பிடிக்கிறது ? வாங்க, இரண்டுபேருமாச் சேர்ந்து தேடுவோம் !"

ஃ ஃ ஃ

"இன்ஜினீயர் செஞ்சுரி போடுவாரா ?"

"எண்ணிக்கைக்கு அஸ்திவாரம் பலமாகப் போடப் போகிறவர் அவரேதான்!"

"இன்ஜினீயர் அஸ்திவாரம் போடுவது மட்டுமில்லே ஸ்வாமி; பவுண்டரிக்கும் பிட்சுக்கும் இடையே பந்தினாலேயே பாலம் கட்டி விடுவார் போலிருக்கே நம்ம இன்ஜினீயர் ! வெளுத்து வாங்குகிறாரே !"

ஃ ஃ ஃ

"ஸார் ! இந்திய கோஷ்டியில் 'செஞ்சுரியன்'கள் யார் ?"

"நூறு வயசு வாழட்டும் தாராளமாக. ஆனால் இன்று செஞ்சுரியன் இல்லை ! செஞ்சுரியாளர்கள் இன்ஜினீயரும், போர்டேயும் தான்!"

ஃ ஃ ஃ

"ஹாலும் கிரிப்பித்தும் பம்பரும் பீமரும் போட்டு நம்ம இந்திய ஆட்டக்காரர்களைப் பயமுறுத்துகிறார்களே!"

"மேற்கிந்தியக் கிரிக்கெட் கோஷ்டி வீசிய பந்தால் மண்டை உடைந்த கண்டிராக்டர் கவசத் தொப்பி அணிந்து கிரிக்கெட் ஆடுவதாகக் கேள்வி ! மண்டை பிளந்தாலும் கிரிக்கெட் ஆசை அவரை விடவில்லையாம் !"

ஃ ஃ ஃ

"காப்டன் பட்டோடியின் சிக்ஸர் ஏ ஒன்!"

"அவர் ஒரு சிக்ஸர்தான் அடிச்சார் ! ஸோபர்ஸும்,







முன்பக்கம்: 1. கிரிக்கெட் டெஸ்டில் சாதித்திடும்-கணேஷ். (2) பெருகுலருடன் லேடி கனோகள்.

○

இந்தப் பக்கம்: (1) சதத்துக்கு மேல் எடுத்த இன்ஜினீயர். (2) இந்திய ஆட்டக்காரர்கள் கவர்னருக்கு அறிமுகம். (3) மேற்கிந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களுடன் கவர்னர்.

**பார்வையாளரின் பாவங்கள்**

1. காலரியின் மேல் பகுதியிலிருந்து வீசி எறியப்பட்ட ஆரஞ்சுப் பழத் தோல் தன் தலையில் விழுந்தபோது.
2. பட்டௌடி ஸிக்ஸர் அடித்தபோது.
3. குறுக்கே நடந்து சென்றவர் காலை நன்றாக நசுக்கிய சமயம்.
4. சர்தேசாய் கன்ஹாய் கொடுத்த 'காட்'சைக் கோட்டை விட்டுவிட்டார்.
5. காலரியின் இண்டு இடுக்கு இடைவெளி வழியே செருப்பைக் கீழே விழுமாறு தவற விட்டுவிட்டபோது...
6. கோல்ட் ஸ்பாட் வாங்கி அருந்திய பிறகு அதன் விலை ஐம்பது பைசா என்று அறிந்து திடுக்கிட்ட தருணத்தில்.
7. 'ஏன் சார் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரீங்க? அது காட்சே இல்லையே: பந்து பம்ப் ஆனதைப் பார்க்கலியா நீங்க?' என்று எதிரே அமர்ந்திருந்த நாரிமணி திரும்பிப் பார்த்துக் கேட்டு அவமானப்படுத்தியபோது...
8. அவுட் பாஸ் வாங்கிக்கொள்ள மறந்து போய் வெளியே சென்றுவிட்டுத் திரும்பும் போது ஹோம் கார்டிடம் அசடு வழிய நேர்ந்தால்....
9. சொத்தை வேர்க்கடலையைக் கடித்து விட்டபோது...

கன்ஹாயும், நாதுமா போட்டி போட்டுக்கிட்டு ஐந்து ஸிக்ஸர் அடிச்சு அமர்க்களப் படுத்தி விட்டாங்களே!''

''கன்ஹாய் அடிச்ச ஸிக்ஸர் பந்து திரும்பலே! கூரையைப் பொத்துக்கிட்டுப் போயிடுச்சு !''

''அதிர்ஷ்டம் வந்தா . அப்படித்தான் ! கூரையைப் பொத்துக்கிட்டு வரும் !''

''அந்தக் காலத்திலே இதே மாதிரிதான் எங்க தாத்தா சேப்பாக்கம் மைதானத்திலே ஒரு ஸிக்ஸர் அடிச்சார். அது மரத்திலே போய்ச் சிக்கிக்கிட்டது. எங்க அப்பா அந்தப் பந்தை ஞாபகார்த்தமா இப்பவும் எடுத்து வைச்சிருக்கார் !''

''ஏன் அப்பா! ஒவ்வொரு வருஷம் மாட்சின் போதும் ஒவ்வொரு தினமும் உங்க தாத்தா ஸிக்ஸர் அடிச்ச பந்தை எடுத்து வைச்சிருக்கிறதாச் சொல்லிக்கிட்டே வரீங்க, இப்படி எத்தனை பந்துகளைப் பொறுக்கி வைச்சிருக்கீங்க ?''

ஃ ஃ ஃ

''நீங்க எந்தக் கோஷ்டி?''

''நான் பஜனை கோஷ்டி. இவர் 'டிரம்பட்' கோஷ்டி ; இவர் ஜால்ரா பார்ட்டி !''

''ஆட்டம் 'டல்' அடிக்கும் போதெல்லாம் உங்க கோஷ்டிகள் ஜமாய்க்கின்றன ! பேஷ் ! பலே!''

ஃ ஃ ஃ

ஆரஞ்சுப் பழக்காரர் காலரியில் மேலே அமர்ந்திருந்தவருக்குப் பழத்தை வீசுவதற்கு முன்னாலே கேட்டார் : ''ஸார்! நீங்க சர்தேசாயா? சுப்பிரமணியமா?''

''ஏன்? எதற்காகக் கேட்கிறாய்?''

''நீங்க சர்தேசாயாக இருந்தால் மேலே ஏறி வந்து உங்க கையிலே பழத்தைக் கொடுக்கணும். 'காச்'சைக் கோட்டை விட்டு விடுவீங்க. சுப்பிரமணியமானால் ஒரு தரம் 'காச்'சைக் கோட்டை விட்டாலும் மறுதரம் பிடிச்சுடுவீங்க !''

ஃ ஃ ஃ

''இந்தாடி! காப்டன் பட்டௌடி என்னமா பந்து வீசுபவர்களை அடிக்கடி மாற்றி விடுகிறார். பார்த்தாயா? சுப்பிரமணியம், பேடி, பிரஸன்னா, சந்திரசேகர் என்று மாற்றி மாற்றி வீசச் செய்து அமர்க்களப்படுத்துகிறாரே!'' என்றாள் கல்லூரி மாணவி தன் தோழியிடம்.

''அது கிடக்கட்டும்! சினிமா நடிகை சாவித்திரி நேற்று காலையில் நீலம், மத்தியானம் வெள்ளை, இன்று காலை சிவப்பு, மத்தியானம் பச்சை என்று எத்தனை வர்ணங்களில் மாறி மாறிப் புடவை கட்டிண்டு வருகிறாள். அதைக் கவனிச்சயா?''

ஃ ஃ ஃ

''கிரிக்கெட் பந்தயத்தில் ஓட்டப் பந்தயக் காட்சியையும் காணக் கொடுத்து வைத்தது நம் பாக்கியம்தான்!''

''எதைச் சொல்கிறீர்கள்?''

''காப்டன் சோபர்ஸுக்கு மாலையிட வந்தவர்களுக்கும் ஹோம்கார்டுகளுக்குமிடையில் நடந்த ஓட்டப் பந்தயத்தைத்தான் சொல்கிறேன் !''

ஃ ஃ ஃ

''இந்தாடி. எழுந்திரு! உடனே வீட்டுக்குப் போகணும். கிரிக்கெட் மாட்ச் பார்த்தது போதும்!''

''ஏண்டி ! மாட்சுதான் 'டல்' அடிக்கலையே, முழுசும் பார்க்கலாமே!''

''யாரோ என்னை சோபர்ஸ் காதலி அந்த மாதிரி இருக்கிறதாகச் சொல்லிட்டா. அவ்வளவுதான்! அந்த விநாடியிலேயிருந்து போட்டோக்காரர்களும், கையெழுத்து வேட்டைக்காரர்களும் என்னைத் துரத்திக் கிட்டே இருக்காங்க !''

''அட சங்கடமே! நீ இப்படி நட்சத்திர உடையிலே வராதேன்னு அப்பவே அடிச்சுண்டேன். கேட்டால்தானே ?''

ஃ ஃ ஃ

மைக் அலறியது: ''ஓர் அறிவிப்பு: 'ஜி ஸ்டாண்'டில் இருக்கும் மிஸ்டர் ரமணி உடனே வீட்டுக்கு வரும்படி கோரப்படுகிறார். அவர் பையனுக்கு உடல் நிலை சரியில்லையாம். உடனே போகவும்!''

ஜி ஸ்டாண்டில் ரமணியிடம் நண்பர் : ''என்ன ஸ்வாமி! சீக்கிரம் வீட்டுக்குப் போம் !''

''போர்டே செஞ்சுரி போடட்டும், பார்த்துட்டுப் போறேன்!''

''என்னய்யா இது? குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்றால்.....''

''அதெல்லாம் ஒன்றுமிருக்காது. என் பையனுக்கு மாட்ச் பார்க்க வேண்டும் என்று ஆசை. அவன் நச்சரிப்பு தாங்காமல் என் மனைவி இப்படி ஒரு தந்திரம் செய்திருப்பாள். வீட்டுக்குப் போக வேண்டியதுதான்; என் டிக்கெட்டை எடுத்துக் கொண்டு இங்கே ஓடி வந்து விடுவான் பையன் !'' — குண்டுமணி

பிட்சின் மையத்தில் ஸோபர்ஸும் ஹாலும் கலந்தாலோசித்தபோது, 'அது என்ன அவரோடு பரம ரகசியம்?' என்று கிண்டல் செய்கிறார் இன்ஜினியர்.

அவுட்டாக்க முடியாத நேரத்தில் பந்தை யார் கையில் கொடுப்பது என்ற நிலைமையில் பட்டோடி திணறுகிறார்!

நான் அடிச்ச பந்தைக் காணுமே. கூரை மேலே போயிருக்குமோ?

எங்கும் போகவில்லை. இதோ இருக்கு பந்து!

கிரிபித்

பாட்டி! புச்சர் பூஜ்யமானார்!

சாமா




தன்னிகரில்லாச் சிறப்பு! கண்ணைப் பறிக்கும் வெளுப்பு! துப்புரவான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை. கரைகடந்த நுரைவளம். சலவையே வெகு எளிது. ஆம், சிறுவர் உடை முதல், சட்டை, சேலைவரை எல்லாத் துணிகளையும் கைப்பட வீட்டிலேயே சலவை செய்துகொள்ளச் சாலச் சிறந்தது ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

## பட்டத்து ராணி

**ப**ழைய காலத்து ஜமீந்தார் கதையை வைத்துக் கொண்டு அத்துடன் இன்னும் என்னத்தை யெல்லாமோ சேர்த்துப் படமாக்கியிருக்கிறார்கள். ஜமீந்தாரின் ஆசை நாயகியின் மகளான ராணி அநாதரவாக விடப்பட்டுத் தெருவில் ஆடிப் பாடிப் பிழைக்கிறாள். படத்தின் முடிவில் அவள் இன்னாரென்பது தெளிவாகிறது. அதற்குள் தெளிவாக வேண்டிய பல நிகழ்ச்சிகள் படத்தில் தோன்றி வேண்டிய மட்டும் குழப்புகின்றன. ஜமீந்தாரின் கண்டிப்பும், கருரும், அந்தஸ்து - உணர்ச்சியும் அர்த்தமற்றவை; அவற்றின் காரணமாக அவர் இளைய மகன் இறந்து விடுகிறான். மூத்த மகன் ராரு வீட்டை விட்டு வெளியேறிக் குடித்துக் கெட்டலைந்து பிறகு நல்லவனாகிறான்.



பத்மஸ்ரீ பானுமதிதான் பட்டத்து ராணி. அவர்தான் நடிப்பிலும் மகாராணியாயிருக்கிறார். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர் நடிப்பு உயர்ந்து கொண்டே போகிறது. ஆடிப் பாடும்போதும், ஜமீன்தாரின் அரண்மனைக்கு வந்த போதும், கடைசிக் காட்சி வரையும் பானுமதிக்கு இணை பானுமதியே.

ஜெமினி கணேசன் ஆரம்பத்தில் சாதுவாயிருந்து பிறகு கெட்டவனாக மாறி, கடைசியில் நல்லவனாகிறார். பலவித உணர்ச்சி பாவங்களைக் காட்டச் சந்தர்ப்பங்கள் இருப்பதால் கணேசன் அவற்றை நன்கு பயன்படுத்திக்கொண்டு சிறப்பாக நடித்திருக்கிறார்.

கல்பனா ஒட்டி உலர்ந்திருந்தாலும், காதல் காட்சிகளில் ஒட்டி, உரசி நடிக்கத் தயங்கவில்லை. ஜி. வரலக்ஷ்மி ஜமீந்தாரிணியாக வந்து எல்லாரையும் மிரட்டுகிறார்.

நாகேஷ், வீரப்பன் இருவரும் ஹாஸ்யப் பகுதியை நிரப்புகிறார்கள்.

பாலாஜி வில்லன். நன்றும் நடிக்கிறார்.

ஜமீந்தார் தம் இறுதி நாட்களில் வெளியிட்ட சம்பவத்தைக் கேட்டு ராணி தன் தங்கை என்பதை யறிந்து கொண்டு அதை வெளிப்படையாகச் சொல்ல முடியாமல் ஜமீந்தாரின் மகன் ராரு தவிப்பது பொறுமையைச் சோதிப்பதாக இருக்கிறது. ஏற்கனவே தெரிந்து போன 'சஸ்பென்ஸை' வெறுமனே நீட்டிக் கொண்டு போவதில் பயன் என்ன?

பாடல்கள் நன்றாயில்லாமற் போனது துரதிர்ஷ்டம்தான்!

பட்டத்து ராணி வரப் போகிறாள், வரப் போகிறாள் என்று அமர்க்களப்பட்டது. ஆனால் படம் வெளியானதும், 'ஏன்தான்வந்தாளோ' என்று கேட்கத் தோன்றுகிறது பலருக்கு.

## ஒலிம்பிக் சாதனை!

**உ**லகம் தோன்றிய நாளாக வரலாற்றிலே விளையாட்டுக்கும் வீரத்துக்கும் ஒரு தனி இடம் உண்டு. ஒலிம்பிக் விளையாட்டுக்கள் பல நாட்டு மக்களும் தங்கள் ஆற்றலைக் காட்டும் வாய்ப்பை நல்குபவை. ஏதன்ஸ் நகரத்தில் தொடங்கப்பட்டு, நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் ஒலிம்பிக் பந்தயம் பதினெட்டாவது முறையாகச் சமீபத்தில் டோக்கியோ நகரத்தில் நடைபெற்றது உலகமறிந்த விஷயம்.

இந்த ஒலிம்பிக் சாதனைகளை உலகம் வியக்கும் வண்ணம் நுண்ணிய காமிராக்கள் பலவற்றைக் கொண்டு வண்ணப் படமாகத் தயாரித்திருக்கிறார்கள். மாறுதல் ஏதுமின்றிக் கதைப் படங்களையே பார்த்துப் பார்த்துப் புளித்துப் போன கண்களுக்கு, கதைகளைக் காட்டிலும் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாகச் சமைந்திருக்கிறது 'டோக்கியோ ஒலிம்பியாட்' என்னும் படம். காமிராக்கள் புரிந்துள்ள சாதனை உலகம் புகழும் ஒலிம்பிக் சாதனைகளுக்கு ஒரு நூலளவும் குறைந்ததில்லை என்பதை இந்தப் படத்தைக் காண்பவர்கள் எவருமே ஒப்புக் கொள்வார்கள்.





# ஊர் வம்பு

* நடமாடும் காட்சிச்சாலை
* அதிசயக் குழாய்!

● ஓட்டைக் காலணா நாணயத்தை நம்மில் யாரும் மறந்திருக்க முடியாது. சிறிது காலம் புழக்கத்திலிருந்து மறைந்து போன அந்த ஓட்டைக் காலணா வந்த போது நமக்கு அப்படியொரு நாணயம் புதுமையாக இருந்தது இல்லையா ? ஆனால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே .இம்மாதிரியான துவாரமிட்ட நாணயங்களைச் சீனர்கள் உபயோகித்திருக்கிறார்கள். அதிசயமாக இருக்கிறதா ? இப்படி இன்னும் எத்தனையோ அதிசயங்களைத் தாங்கியதொரு பொருட்காட்சியை நடமாட வைத்துக் கொண்டு, பொது அறிவை வளர்க்கும் புனிதத் தொண்டைச் செய்து வருகிறார் பூஜ்யர் ஹில்லரி அவர்கள். கன்யாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த பாதிரியாரான இவருடைய அரிய சேகரிப்புக்களைக் கண்டால் நமக்கு ஒரு தனிமனிதரின் உழைப்பையும் அதைப் பலருக்கும் பயன்படும் விதமாக அமைத்திருப்பதையும் கண்டு பிரமிப்புத்தான் ஏற்படுகிறது.

தபால் தலைகள் மட்டும் சுமார் 60,000க்கும் மேல்! இவைகளை அழகுபட வரிசைப் படுத்தி விருக்கிறார் ஹில்லரி அவர்கள். தபால் தலைகளின் அழகு, அமைப்பு, எல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலிருக்கிறது. உலகத்து நாடுகளின் தபால் தலைகளை யெல்லாம் ஒருசேர வைத்திருப்பதோடு, அவைகளில் கட்டடங்கள், விளையாட்டு, குழந்தைகள், பிராணிகள், பழங்கள், பறவைகள், மலர்கள், தலைவர்கள் இப்படியாகவும் ரகம் பிரித்து வைத்திருக்கிறார்.

நெல்மணிகளால் ஆக்கப்பட்ட மாலைகள், பண்டங்கள், அரச இலையில் தீட்டிய வண்ண ஓவியம், வைக்கோலால் அமைத்த சித்திரம், கிளிஞ்சல் பொருட்கள் என்றெல்லாம் கைவேலைப்பாட்டின் பெருமைகளை விளக்கவும் பல பொருட்கள் உள்ளன. தந்தம், சந்தனக் கட்டை இவைகளின் கைவேலைப் பாட்டுப் பொருள்களும், கன்னியாகுமரியில் கிடைக்கும் வர்ண மணலைக் கொண்டு தீட்டிய தலைவர்களின் படங்களும் சிறப்பான அம்சங்களாகும்.

வாவின் தொழிற்சாலையில் தொழில் மந்திரி



● "என்ன சார், குழாயில் தண்ணீர் வரவே இல்லையே ?"

"குழாயில் துரு ஏறியிருக்கும். துத்தநாகக் குழாய்கள்தானே? அவை பூத்து உள்ளே கரை கட்டிக் கொண்டு துவாரத்தை அடைத்துக் கொண்டிருக்கும். அதனால் சில வருஷங்களுக்கு ஒரு முறை இந்தக் குழாய்களையெல்லாம் மாற்றினால்தான் நல்லது."

"...ம்.... இது வேறு செலவா? இப்படித் துரு ஏறாத குழாய்களை இன்னும் விஞ்ஞானிகள் கண்டுபிடிக்க வில்லையோ ?"

"கண்டுபிடிக்காமல் என்ன? ஹாலந்து நாட்டிலே பூமிக்கடியில் போகும் நீர்க் குழாய்களுக்கெல்லாம் ரொம்ப மலிவான ஆனால் உறுதியான ஒருவிதக் குழாய்களை உபயோகிக்கிறார்கள். அதற்கு பி. வி. ஸி. பைப் என்று பெயர். பிளாஸ்டிக் போன்றதொரு ரசாயனச் சேர்க்கை. கனம் குறைவு. குழாய்களை இணைத்து அமைப்பதும் எளிது."

"அடேடே! இத்தனை சௌகரியமானதொரு சாதனத்தை ஏன் நம் நாட்டில் தயாரித்துச் செயல்படுத்தக் கூடாது?"

"அதற்கும் காலம் வந்து விட்டது. கவலைப்படாதீர்கள்! அம்பத்தூர் தொழிற்பேட்டையிலே இந்த ஹாலந்து கம்பெனியாரின் ஒத்துழைப்புடன் 'வாவின்' என்றொரு தொழிற்சாலையை உருவாக்கி விருக்கிறார்கள். இங்குதான் இந்த அற்புதக் குழாய்களைத் தயாரிக்கப் போகிறார்கள். இந்தியாவிலேயே இம்மாதிரியான குழாய்த் தொழிற்சாலை சென்னையிலுள்ள வாவின்தானாம். தீயால் அழியாது. நீரால் பாதிக்கப்படாது. பூமிக்குள் இருந்தால் எவ்வித மாற்றமும் அடையாது இந்தக் குழாய்கள். ஐம்பது வருஷங்கள் இதன் 'அழிவற்ற தன்மை'க்கு உத்தரவாதமளிக்கிறார்கள். போதுமே! மனுஷ ஆயுசில் பெரும்பகுதியல்லவா இந்த ஐம்பதுவருஷம்?"

துத்தநாகம், தகரம் இவைகளெல்லாம் இறக்குமதிப் பொருள்களாயிற்றே ! அவைகளுக்குப் பதில் இந்தப் பி. வி. ஸி. குழாய்களை உபயோகித்தால் அந்நியச் செலாவணியும் மிச்சமாகும். சென்னை நகராட்சிக்கு இந்தக் குழாய்களைச் சப்ளை செய்ததோடு நில்லாமல் வீட்டு வசதி இலாகாவின் தலைவரான மந்திரி ஆர். வி. இனி ஹவுஸிங் யூனிட்டுகளில் குழாய்கள் உபயோகத்துக்குப் பி. வி. ஸி.யையே பயன்படுத்தும்படி ஏற்பாடு செய்து விட்டதாகவும் தெரிவித்தார். தொழிற்சாலை ஆரம்பித்துப் பொருட்களை உற்பத்தி செய்தபின் மார்க்கெட்டைத் தேடி அலைவது வழக்கம். 'வாவின்' அதிர்ஷ்டம் உற்பத்தி தொடங்கு முன்பே ஆர்டர் கிடைத்து விட்டது நல்ல சூசகம்தானே? வருஷத்துக்கு '20,000 டன் குழாய்களை உற்பத்தி செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள். என்னதான் புதுமையான குழாய்கள் வந்தாலும் தண்ணீர் விநியோகம் பழைய நிலைமையிலேயே இருந்தால் பாதிக் கிணறு தாண்டிய கதைதானே ?

# வாரியாருக்கு மணிவிழா

பள்ளிக்கூடத்தின் படியையே மிதித்தறியாத வாரியார் பெரிய கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் சாதிக்க இயலாத அறிவுத் தானத்தை மிகப் பெரிய அளவில் வாரி வழங்கி வருகிறார். மாசற்ற ஒழுக்கமுடையவரும், முருகனடியை மறவா நியமம் பூண்டவரும், தூய சைவருமான வாரியார் அவர்கள் தமிழ்ப் பேரறிஞர். தமிழில் பெற்ற அறிவு போதும் என்று வாளா இருந்து விடவில்லை வாரியார். வடமொழிக் கடலையும் கடந்து விட்டார்.

இவ்வளவு புலமையும், கூர்ந்த மதியும் பெற்ற வாரியார் தமிழகத்தில் அறியாமைப் பசியை அகற்றத் துணிவு கொண்டார். பண்டிதர்களுக்கு மட்டும் விரிவுரை வழங்குவதில் எவ்விதப் பயனும் இல்லை என்பது அவர் கருத்து. ஆகவே, எளிய மக்கள் தெளிவு பெறும் விதத்தில், உயர்ந்த தத்துவங்களையும், அரிய கருத்துக்களையும், பெரிய போதனைகளையும் தம் பிரவசனங்களுக்கிடையே வாரி வாரி வழங்கலானார்.





தருமபுர ஆதீனத்தின் சார்பில் வாரியாருக்குப் பொன்னாடை; கி. வா. ஜ. பேச்சு; கோவில் பிரசாதம் வழங்குதல்.

காங்கேய நல்லூரில், அருட்செல்வரான திரு மல்லையதாஸ் பாகவதரின் மகனாகப் பிறந்த திரு கிருபானந்தவாரியார் தமது ஐந்தாவது பிராயத்திலேயே கவி இயற்றும் திறன் பெற்று விட்டார்.

பக்தி இலக்கியங்கள், இதிகாச புராணங்கள் என்றாலே பயனற்ற கட்டுக் கதையென்று புறக்கணிக்கும் அளவுக்கு நமது நாகரிகம் நலிவுறத் தொடங்கிய காலத்தில் இந்த மயக்கத்தைப் போக்கி, பட்டிதொட்டிகளிலெல்லாம் பக்தி உணர்வைப் பரப்பி மேற்கூறிய நூல்களுக்கு மக்களிடையே பெரு மதிப்பை ஏற்படுத்தியவர் வாரியார்.

ஸ்ரீ கிருபானந்தவாரியாருக்கு அறுபது ஆண்டு நிறைவு என்பதை அவர் எவ்வளவோ ரகசியமாக வைத்துக் கொண்டிருந்தும் ரசிகப் பெருமக்கள் அதை விட்டு விடுவதாயில்லை. ஒரு பெரும் குழு அமைத்து மணி விழாவுக்கு ஏற்பாடு செய்து விட்டார்கள். 11-1-67 அன்று விருகம்பாக்கம், ஆவிச்சி உயர்நிலைப் பள்ளியில் சென்னை உயர்நீதி மன்றத்து நீதிபதி ஆர். சதாசிவம் அவர்கள் தலைமையில் மேற்படி மணிவிழா நடை பெற்றது. திரு ஏவி. மெய்யப்பன், திரு கி. வா. ஜகந்நாதன் ஆகியோரின் சிறப்புரைகளுக்குப் பின் திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் பேசினார். எந்தப் பெரிய மனிதருக்கும் வாரியார் அவர்களுக்கு நடந்ததைப் போல் மணி விழா



நடந்ததில்லை என்பதைக் குறிப்பிட்டு, "தாய்க்குலம், தந்தையர்குலம், சேய்க்குலம், மற்றுமுள்ள சமுதாயத்தின் உறுப்பினர்களுடைய பிரதிநிதித்துவமும் கொண்ட கூட்டத்தை நான் வேறு எங்கும் யாருக்கும் கண்டதில்லை" என்றார். ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம், ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

கந்தன் கருணை பெற்று, சிவனருட்செல்வராக விளங்கும் வாரியாரவர்கள் நீடூழி வாழ்ந்து தமிழுக்கும், தமிழ்ப் பண்புக்கும் ஹிந்து தர்மத்துக்கும் சேவை செய்து வர வேண்டுமென்று முருகப் பெருமானைப் பிரார்த்திக்கிறோம்.

# அறுபத்தேழில் சந்திப்போம்!



'முரசொலி மாறன்'

"கடந்த நாற்பது ஆண்டு காலமாகக் காங்கிரசுக்கு வோட்டுப் பிச்சைக் கேட்டவன் நான். காங்கிரசுக்காக உழைத்தவன். 67ல் ஆட்சி மாறினால் எங்கும் தமிழ்—எதிலும் தமிழ் — என்ற முறையே இருக்கும். தமிழகம் என்று சென்னை மாநிலத்துக்குப் பெயர் மாற்றினால், அதைக் காதாரக் கேட்டால்,· அதுவே எனக்குப் போதும். அதைச் செய்யக் கூடிய இயக்கம் தி. மு. கழகம்தான். எந்தத் தமிழ் பக்தியால் 1945ல் காங்கிரசை விட்டு வெளியேறினேனோ அதே தமிழ் பக்தியால் இந்தக் கூட்டணியில் சேர்ந்திருக்கிறேன். கழகத் தோழர்கள் காட்டிய அன்பால் நானும் உங்கள் குடும்பத்தில் ஒருவனாகிவிட்டேன்" என்று சிலம்புச் செல்வர் குறிப்பிட்ட போது அனைவர் மனமும் இளகியது.

"அண்ணாதுரைக்குப் புதிய நண்பர்கள் கிடைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் காமராஜருக்கோ அவரது நண்பர்கள் எல்லாம் பிரிந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்"

என்று கிருஷ்ண மேனனில் தொடங்கி, அண்மையில் காங்கிரசை விட்டு விலகிய சிவகாசி சட்டமன்ற உறுப்பினர் திரு எஸ். ஆர். நாயுடு வரை அவர் பட்டியல் காட்டிய போது வாழ்த்தொலி வானை எட்டியது.

"எதிர்ப்பு அணிகளிடையே தொகுதி உடன்பாடு மட்டுமல்ல; கொள்கை உடன்பாடும் உண்டு. காங்கிரசை ஆட்சியிலிருந்து கீழே இறக்குவது என்ற கொள்கையில் நாங்கள் ஒன்றுபட்டு இருக்கிறோம்..... நாங்கள் பல கட்சியினர். கொள்கை வேறுபாடு இருக்கலாம். அதில் நியாயம் கூட இருக்கிறது. ஆனால் காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே கொள்கை வேறுபட்டவர்கள் இருப்பதாக மந்திரி எஸ். கே. பாட்டீல் சொல்கிறார். அப்படி இருக்கும்



போது எங்களிடையே கொள்கை வேறுபாடு இருப்பதில் தவறு என்ன?"

இவ்வாறு சிலம்புச் செல்வர் எழுப்பிய கேள்வி கையொலியால் அனைவரது ஆமோதிப்பையும் பெற்றது. "தி. மு. க. மட்டுமே மந்திரி சபை அமைத்தாலும் நான் மனப் பூர்வமாக வரவேற்பேன்" என்று அவர்

அறுதியிட்டுக் கூறியது அவரது பெருந்தன்மையைக் காட்டியது.



தி. மு. க., சுதந்திரா, முஸ்லிம் லீக், தமிழரசுக் கழகம், இடதுசாரி கம்யூனிஸ்ட், பார்வர்டு பிளாக், நாம் தமிழர், பி.எஸ்.பி. ஆகிய எட்டு தோழமைக் கட்சிகள் காங்கிரசின் பத்தொன்பது ஆண்டுக்கால 'ஒரு கட்சி சர்வாதிகாரத்தை' வீழ்த்த ஓர் உடன்பாட்டின் கீழ் வந்திருக்கும் கற்கண்டுச் செய்தியைக் கேட்கும் பாக்கியம் அன்று விருகம்பாக்கம் வந்திருந்த அத்தனை பேருக்கும் கிடைத்தது.

''தி. மு. க.வின் இரண்டாவது நாள் மாநாடு அக்கட்சி தேர்தலில் வெற்றி பெற்றுச் சர்க்கார் அமைப்பதற்கு எதிர்க் கட்சிகளின் முழு ஆதரவை உறுதிப்படுத்தும் ஒரு சர்வகட்சி மாநாடு போல விளங்கியது'' என 'தினமணி' (சென்னை, 30–12–66 பத்திரிகை) குறிப்பிட்டிருந்தது முற்றிலும் உண்மையே.

தமிழகத்தின் பெரு நகரங்களிலிருந்தும், பட்டிதொட்டிகளிலிருந்தும், ஆந்திரம், கேரளம், கர்நாடகம், பம்பாய் — போன்ற பிற மாநிலங்களிலிருந்தும் மாநாட்டுக்கு வந்திருந்தோர் குடும்பம் குடும்பமாகப் பந்தலில் அமர்ந்து அமைதியுடன் நிகழ்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

தாய்மார்கள் பந்தலிலேயே தங்கள் குழந்தைகளுக்குத் தொட்டில் கட்டித் தூங்க வைத்து, கைகள் தொட்டிலை ஆட்டியவாறு இருக்க, பேச்சுக்களை அவர்கள் உன்னிப்பாகக் கேட்டார்கள். சமையல் சாப்பாடு உறக்கம் எல்லாம் பந்தல், சுற்று வட்டாரத்திலேயே நடந்தது பலப்பல குடும்பங்களுக்கு.

சொற்பொழிவு நடக்காத பிற நேரமும் வீணாகாமல், தினமும் மாநாடு தொடங்குவதற்கு முன்பும், மதியம் உள்ள இடைவேளையின்போதும் இயக்கக் கலைஞர்கள் மேடையில் பக்கவாத்தியங்களுடன் பிரசாரப் பாடல்களைப் பாடினர்.

சிறிது நேரம் இளைப்பாற விரும்புவோருக்கெனப் பந்தலில் தனி இடத்தில் ஒரு 'கலைக் கண்காட்சி' ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அங்கே இதுவரை சென்னை மாநகராட்சியிலே கழகம் பதவிக்கு வந்து ஆற்றியுள்ள சாதனைகள் புகைப்படங்கள் மூலமும், புள்ளி விவரப் படங்கள் மூலமும் விளக்கப்பட்டிருந்தன. தற்போது சட்டசபையிலே அங்கம் வகிக்கும் ஐம்பது உறுப்பினர்கள் அங்கு எடுத்துக்காட்டிப் பேசிய குறைபாடுகள் கவர்ச்சியான முறையில் பெரிய 'போர்டு'களில் எழுதி வைக்கப்பட்டிருந்தன. இந்தியாவெங்கிலும் உள்ள பிரபல பத்திரிகைகளில் வெளியான — காங்கிரஸ் ஆட்சியைச் சாடித் தீட்டியிருந்த — 'கேலிச் சித்திரங்கள்' பெரிய அளவில் மறு உருவாக்கப்பட்டுச் சிந்தனையைத் தூண்டும் வகையில் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. மேலும், இந்தி எதிர்ப்பு மாணவர் போராட்டங்கள், காங்கிரஸ் ஆட்சியில் இதுவரை நடந்த துப்பாக்கிப் பிரயோகங்கள், அதில் இறந்தவர்கள் விவரம் — ஆகியனவும் பெரிய பெரிய சித்திரங்களாகத் தரப்பட்டிருந்தன.

எந்த நேரமும் இந்தக் 'கருத்துக் கண்காட்சி'யைக் காண ஒரு பெரிய 'க்யூ' நின்று கொண்டிருந்தது குறிப்பிடத்தக்கது.

மாநாட்டில் கலந்து கொண்ட ஒவ்வொருவரும், ஒவ்வொரு கோணத்தில் ஆட்சியின் சீர்கேட்டையும், கழகக் கோட்பாட்டையும் விளக்கினர்.

சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தோழமைக் கட்சிகளின் கூட்டணி காங்கிரசை எவ்விதம் வீழ்த்த முடியும் என்பதைப் புள்ளி விவரங்களோடு விளக்கினார்.

''1962 தேர்தலில் 45 சதவிகித வாக்குகளைப் பெற்றுக் காங்கிரஸ் கட்சி பதவிக்கு வந்தது. ஆனால் 55 சதவிகித வாக்குகளைப் பெற்ற எதிர்க்கட்சிகள் 206 பேர் கொண்ட சட்ட மன்றத்தில் 67 இடங்களைமட்டுமே கைப்பற்ற முடிந்தது.''

என்கிற விவரத்தை விளக்கி, எதிர்க்கட்சிகள் தங்களுக்கிடையே போரிட்டுக் கொண்டால் சென்ற தேர்தலில் நடந்தது



TRAYONS

# ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன்

## கொண்டு பாக் செய்தது, உங்கள் விற்பனையை பன்மடங்கு அதிகமாக்குகிறது



ஒரு பொருளை வாங்கு முன், அதைக்கையிலெடுத்து நன்கு பரிசீலனை செய்யாமல் யாரும் முடிவுக்கு வருவதில்லை. வாடிக்கைக்காரரின் பரிசீலனைக்கேற்ப, கைக்கெட்டியவாறு பொருள்களைக் கடையில் வைப்பது சிறந்த முறைதான். ஆனால், அடிக்கடி கைபடுவதால் பொருள்களின் மேல் அழுக்கும், கறைகளும் பட்டு விடுகிறது. பிறகு அதை வாங்குவார் யார்? இக்காரணத்தினால்தான் பெரும்பாலான உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்கின்றனர்.

ஸ்டாக்கிஸ்டுகள் :

**ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1.

போன் 21641 தந்தி CELYARN.

கிளைகள்: போன் 3253-தந்தி CELYARN 68/416 மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.

போன் 2598-தந்தி CELYARN 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.

போன் 4425-தந்தி RAYONS இந்தியா லைப் பில்டிங் திருச்சி ரோடு, கோயமுத்தூர்

RT 32-SA



'ஜனநாயக சோஷலிசம்' என்ற கூக்குரல் எவ்வளவு போலித்தனமானது என்பதை விளக்கினார்கள்.

''முன்பு ஜெர்மனியிலே இப்படித்தான் இட்லரும் தனது பொருளாதாரக் கொள்கைக்கு சோஷலிசம் என்று பெயரிட்டான். 'தேசிய சோஷலிசக் கட்சி' (National Socialists) என்பதற்கான ஜெர்மன் மொழிப் பெயர்தான் 'நாஜிக் கட்சி' என்பது. இட்லரைப் போலத்தான் இவர்களும் 'சோஷலிசம்' என்கிற பெயரை வைத்து ஏமாற்றுகிறார்கள் !'' என்று உதாரணத்தோடு அவர் விளக்கிக் காட்டினார்.

'தி. மு. க. ஆட்சிக்கு வந்தால் ஆள விடுவோமா?' என்று சிலர் கூறுகிறார்கள் அல்லவா ? அதற்கும் அவர் அழகாகப் பதில் கூறினார்:

''இப்போது இருக்கிற பிரச்சினை ஆட்சியைக் கைப்பற்ற முடிகிறதா என்பது தானே தவிர, கைப்பற்றினால் கவிழாமல் ஆட்சி செய்ய முடியுமா என்பதல்ல.

''தி. மு. க.வை ஆட்சி நடத்த விடுவோமா என்கிற பாணியில் காமராசர் பேசுகிறார் என்றால் அதற்குக் காரணம் அவரது கட்சிக்காரர்களுக்கு உற்சாகம் ஊட்டுவதற்குத்தான்.

''ஜெயிக்க முடியாது; ஜெயித்தாலும் ஆள முடியுமா? விட்டு விடுவோமா? என்று உரத்த குரலில் கேட்டால் அவர்கள் கட்சிக்காரர்களுக்குச் சிறிது நேரம் உற்சாகம் பிறக்கக்கூடும். அதனால் பேசுகிறார்.

''சாதாரண கார்ப்பொரேஷனையே ஒரு முறை நம்மிடம் விட்டு விட்ட பிறகு திருப்பி அவர்களால் பிடிக்க முடியாத போது — மாநில ஆட்சியை நம்மிடம் ஒரு முறை விட்டு விட்ட பிறகா, திரும்பப் பிடிக்கப் போகிறார்கள்? வீடு ஏலம் போன ஒவ்வொருவனும், இந்த வீடு போனால் போகிறது: இதைவிடப் பெரிய வீடு கட்டத்தான் போகிறேன் — என்று மீசையை முறுக்கித்தான் காட்டுவான்! அது போலத்தான் காமராசரும், மற்றவர்களும் தி. மு. க. ஆட்சிக்கு வந்தாலும் ஆளவிடுவோமா என்கிறார்கள். அது இங்கே நடக்காது !''

இப்படி அண்ணா கூறியபோது கையொலியால் 'பொன்னுசாமி பந்தலே' ஆடியது !

பின்னர், அண்ணா அவர்கள் 'தேர்தல் அறிக்கை' (Election Manifesto) வெளியிட்டு, அபேட்சகர்கள் பட்டியலையும் படித்ததோடு நான்கு நாட்கள் ஈடும் இணையும் இன்றி விருகம்பாக்கத்திலே கூடிய மாநாடு முடிவுக்கு வந்தது.

இந்த மாநாட்டின் மொத்த வசூல் ரூ. 3,30,000 என்பதே மாநாட்டு வெற்றிக்கான அடையாளமாகும். ஏழை நடுத்தர மக்கள் கட்டணம் கொடுத்துச் சொற்பொழிவுகளைக் கேட்பதும், அதற்கு இவ்வளவு பெரிய தொகை வசூலாவதும் இந்தியாவிலேயே — ஏன் உலகத்திலேயே ஓர் அதிசயம் என்றே கூறலாம். ஏனெனில், வேறு எங்கும் அரசியல் கட்சிகள் நிதி திரட்டுவதற்கு இத்தகைய முறையைக் கையாளுவதாகத் தெரியவில்லை.

முடிவாக, அறிஞர் அண்ணா அவர்கள் கூறியது போல,

''கண்களுக்கு விருந்தாகவும், கருத்துக்குச் செல்வமாகவும், உணர்ச்சிக்கு வித்தாகவும் இருந்த இந்த மாநாடு நடந்த இடம் நாளைய தினம், அறுவடை செய்யப்பட்ட வயல் போல — பறிக்கப்பட்ட மலர் வனம் போல — நீர் வற்றி விட்ட ஆறு போலக் காட்சியளிக்கும். ஆனால் இந்த மாநாட்டில் நாம் பெற்ற கருத்தும், காட்சியும் நம் மனத்தில் நிற்கும். இந்த மாநாட்டில் நாம் பெற்ற மணம் நம் குருதியில் கலந்திருக்கும். இந்த நான்கு நாட்களின் காட்சி நம் புறக்கண்ணைவிட்டு அகன்றாலும் அகக்கண்ணை விட்டு அகலாது. நினைத்துப் பார்த்தால் எழுச்சி மிக்கக் காட்சிகள் நினைவுக்கு வரும். நம் நினைவு இருக்கும் வரை நிலைத்திருக்கும், இந்த நான்கு நாட்கள் !''

முற்றும்





காஷ்மீர கவர்னர் ஸ்ரீ கரண்ஸிங் பட்டமளிப்பு விழாவின்போது சிறப்புரை நிகழ்த்துகிறார். ஸ்ரீ ஜைமினி ராய் அவர்களுக்கு வங்காள கவர்னர் ஸ்ரீமதி பத்மஜாநாயுடு டாக்டர் பட்டம் வழங்கி கௌரவிக்கிறார்.

# டாக்டர் எம். எஸ்.

கவீந்திரராகிய ரவீந்திரரின் இலட்சியங்களை முன்வைத்துக் கல்கத்தாவில் இயங்கிவரும் ரவீந்திர பாரதி சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழாவில் இசைக் கலைஞர் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்கும், சம்பிரதாய ஓவியக் கலையில் கிராமக் கலையின் அம்சங்களையும் புகுத்திப் புகழ் கொண்டுள்ள ஓவியர் ஸ்ரீ ஜைமினி ராய் அவர்களுக்கும் 'டாக்டர்' என்ற கௌரவப் பட்டம் வழங்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் வங்காளிகளே வியக்குமாறு ரவீந்திர சங்கீதம் பாடுபவர் என்பதையும், பட்டமளித்த வங்க கவர்னர் ஸ்ரீமதி பத்மஜா நாயுடுவின் அன்னையாகிய கவிக் குயில் சரோஜினி தேவியை ஸ்ரீமதி எம். எஸ். தமது தாய்போல் கருதுபவர் என்பதையும், பட்டமளிப்பு உரை நிகழ்த்திய காச்மீர கவர்னர் ஸ்ரீ கரன் சிங் அவர்கள் எம். எஸ்ஸின் இசையில் ஆழ்ந்த ஈடுபாடுள்ளவர் என்பதையும் எண்ணுகையில் இந்தப் பட்டமளிப்பு விழாவில் ஒரு தனிச் சிறப்பே புலப்படும்.

உப அத்யட்சகர் ஸ்ரீ ஹெச். பானர்ஜி அவர்கள் எம். எஸ்ஸைப் பற்றிக் குறிப்பிடுகையில் ''ஒரு தலைசிறந்த இந்திய இசை நிபுணரான ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் பொன்குரல் உலகமெங்கும் உள்ள கோடானுகோடி இதயங்களைக் கவர்ந்திருக்கிறது. இந்தியாவின் பக்தி இசையையும், நாட்டுப் பாடலையும்கூட அவர் சாஸ்திரிய இசையின் ஸ்தானத்துக்கு உயர்த்தியுள்ளார். தமது குரலின் மந்திர சக்தியாலும் தமது கலை ஞானத்தின் எழிலாலும் அவர் மற்ற நாடுகளுடன் புதியதொரு கலாசாரத் தொடர்பை ஏற்படுத்தியுள்ளார்'' என்றார்.

சங்கீத சம்பந்தமில்லாவிடினும் நாட்டு நலனுக்குகந்த ஒரு விஷயம்: ''ரவீந்திரர் வங்காளியாயினும் அவர் உலகப் பிரஜை. எனவே ரவீந்திர கலாசாலை வங்காளத்தோடு ஆங்கிலத்திலும் போதனை தரவேண்டும். அகில உலக சமுதாய உணர்வுக்கு ஆங்கில அறிவு மிகவும் உதவி புரியும்'' என்று கரண்சிங் அவர்கள் இவ்விழாவில் எடுத்துக் கூறினார்.



# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

## அத்தியாயம் 3

## அந்த உருவம்!

இரவு நேரத்தில் ஏழில் மலை அடிவாரத்தில் இருந்த நன்னர்களுடைய தங்கள் மாளிகையிலே, அரசனுடைய படுக்கையறையைக் குறி பார்த்துச் சென்ற நூல் ஏணியைப் பின் தொடர்ந்து செல்வதற்கு முன்னால், துளு நாட்டின் அன்றையச் சரித்திர நிலையை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

இக் காலத்தில் தென் கன்னட மாவட்டப் பகுதியில் நமது நாட்டின் மேற்குக் கடற்கரையோரமாக இருக்கும் ஒரு நிலப்பரப்பே அந்தக் காலத்தில் துளு நாடு

என்று பெயர் பெற்றிருந்தது. இந்தத் துளு நாட்டுக்குக் கொங்கண நாடு என்றும், கொங்கான நாடு என்றும், கொண்பெருங்கானம் — என்றும் பெயர்கள் இருந்தன. ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியார்கள் தென் இந்தியாவுக்கு வந்து வர்ணிபம் செய்தவாறு நாடுகளை வசமாக்கிய காலத்தில் துளு நாடாகிய கொங்கண நாடும் அவர்கள் ஆட்சிக்கு வந்தது.

அசோக சக்கரவர்த்தி நமது பாரத தேசம் முழுவதையும் அரசாண்ட காலத்தில் தம்முடைய சாசனங்களில் 'சத்திய புத்திர நாடு' என்று ஒரு பகுதியைக் குறிப்பிடுகிறார். அந்தப் பகுதியே துளு நாடு என்பது வரலாற்று ஆசிரியர்களின் கருத்து.

துளு நாடு அந்தக் காலத்தில் எத்தகைய சீரும் சிறப்பும் கொண்டு வளமான நாடாக விளங்கியது என்பதைத் தாலமி போன்ற யவன வரலாற்று அறிஞர்கள் வியப்போடு பேசுகிறார்கள். துளுநாடு என்ற பதத்துக்கே வீரர்கள் நிறைந்த நாடு என்றும், வீரம் சிறந்த நாடு என்றும், போரிடும் ஆற்றலில் புகழ் பெற்ற நாடு என்றும் விளக்கம் சொல்லுகிறார்கள். இந்த நாட்டையே பிற்காலத்துச் சோழர்களின் கல்வெட்டுகள் 'குடமலை நாடு' என்று குறிப்பிடுகின்றன!

மேற்கில் கடல். கிழக்கில் மலைகள். இந்த மலைகளில் மிகவும் முதன்மையானது நன்னர்களுடைய ஏழில் மலை!



ஏழில் மலை; தமிழ் நாட்டு வரலாற்றில் மிகவும் சிறப்பான இடம் இந்த மலைக்கு உண்டு! வாஸ்கோடகாமா என்னும் போர்ச்சுகீசியர் நமது நாட்டுக்கு வந்தபோது கடலில் மரக்கலத்தில் இருந்து பார்த்தாராம். அப்போது முதன்முதலாக அவருடைய கண்ணில் பட்டது இந்த ஏழில் மலைதானும்!

கடற் கரைக்குக் கிழக்கே சற்றுத் தொலைவில் இருந்த இந்த ஏழில் மலையின் அடிவாரத்திலேதான் நன்னர்களின் தங்கல் அரண்மனை ஒய்யாரமாக வீற்றிருந்தது. கடல் வழியாகத் தமிழ் நாட்டுக்கு வந்து போன யவனர்களும் அராபியர்களும் துளு நாட்டுத் துறைமுகப்பட்டினங்களாகிய மங்களூர் நறவு முதலிய ஊர்களுக்கு வருவது வழக்கமாக இருந்ததால், அந்த வெளி நாட்டுச் செல்வர்களுக்கு நன்னர்களின் அரசப் பெருமைகளும் இந்தத் தங்கல் அரண்மனையின் சிறப்புகளும் நன்கு தெரிந்திருந்தன. ஆனால் அவர்கள் எல்லாரையும் வருத்தப்படுத்திய செயல் ஒன்றும் நன்னர்கள் செய்துவந்தார்கள். அதுவே கடற் கொள்ளை.

நன்னர்களுக்குக் கீழடங்கிய சிற்றரசர் கூட்டமே கடம்பத் தீவில் இருந்த குறும்பர்கள் என்ற கொள்ளைக் கூட்டத்தார்கள்! நீலவல்லியின் வளர்ப்புத் தந்தையும், வெள்ளைத் தீவின் மன்னனுமாகிய வானமண்டலக் கடம்பன், நன்னர்களின் ஊக்கத்திலும் செல்வாக்கிலும் மேலே மேலே வளர்ந்து, இப்போது நன்னர்களுமே அஞ்சக்கூடிய அளவுக்குச் செல்வமும் வலிமையும் கொண்டு திகழ்ந்தான். இந்தக் கடம்பர்கள் நன்னருடைய வீரர்களின் துணையோடு சோமாபுரியிலிருந்தும் அலெக்சாந்திரியாவிலிருந்தும் சேர நாட்டுக்கு வாணிபத்தின் பொருட்டு வந்து கொண்டிருந்த மரக் கலங்களைக் கடல் மீது மறித்துக் கொள்ளையடித்து இன்னல் புரிந்து வந்தார்கள். பிளினி என்னும் வரலாற்று ஆசிரியர் இந்தக் கொள்ளைக்கூட்டத்தார்களின் வன்முறைச் செயல்களைப் பற்றி மனம் நொந்து எழுதுகிறார் தமது சரித்திரக் குறிப்புகளிலே!

சேர மன்னர்கள் இந்தக் கொள்ளைக் கூட்டத்தாரின் கேடான செயல்களினால் மேல் நாட்டு மக்களுக்கும் தங்களுக்கும் இடையே நடந்து வந்த வாணிபம் சீர்குலைவது கண்டு வெருண்டார்கள். இந்தச் சீற்றம் காரணமாகவே வெள்ளைத் தீவுக் குறும்பர்களை அழிப்பதற்கு என்ன வழி உண்டு என்று ஆராய்ந்து வந்தார்கள். இதன் விளைவாகவே



"அப்பப்பா! இந்த சங்கீத சீசன்லே இந்தப் பாட்டுக் கச்சேரியைத்தான் கை தட்டலே இல்லாமல் கேட்க முடிந்தது!"
"கை தட்டறதற்கு 'ஹால்'லே யாரேனும் இருந்தாத்தானே!"

சேரலாதன் வெள்ளைத் தீவுக்கு உளவு காண்பதற்காக வேலவன்கோதையை அனுப்பினான். அங்கே நடந்த செயல்களை நாம் அறிவோம்.

இந்த நிலையிலே துளு நாட்டு நன்னர்களோ என்றால், வெள்ளைத் தீவுக் கொள்ளைக் கூட்டத்தார்களின் கூட்டுறவிலே செய்து வந்த அட்டூழியங்களைத் தவிர, உள்நாட்டிலும் பல தீய இன்னல்கள் செய்து மக்களைக் கொடுமைப்படுத்தத் தொடங்கினார்கள்!

சத்தியபுரி என்று அந்தத் துளு நாட்டுக்குப் பெயர் வந்ததற்குக் காரணமே அந்தப் பகுதியில் வாழ்ந்த கோசர் குல மக்கள்! சொன்ன சொல் மாறாத வாக்கு நாணயமும், அஞ்சாது போரிடும் ஆற்றலும், நேர்மையான போர் அறமும் ஒருங்கே வாய்ந்து சத்தியக் கடவுளின் திருக் குமாரர்கள் என்று வெளிநாட்டு வரலாற்று ஆசிரியர்கள் பாராட்டும் வகையில் சத்திய வீரர்களாக விளங்கிய இந்தக் கோசர்களைக் கொடுமைப்படுத்தத் தொடங்கினான் நன்னன்.

ஆற்றிலே மிதந்து வந்தது ஒரு மாம்பழம். அது எந்த மரத்தின் பழம் என்று தெரியாத நிலையிலே அதை எடுத்துப் புசித்தாள் கோசர் தலைவனின் மகள் நேரிழை! தவறுதான். அரசனுடைய காவல் மரத்தின் பழத்தைத் தொடக் கூடாது என்பது நாட்டின் நெறிமுறை! தொட்டது தவறு என்பது உண்மை. என்றாலும் அறியாமல் செய்த தவற்றுக்கு அத்தனை கொடிய தண்டனை கொடுக்கலாமா என்று வெகுண்டது கோசர் குலம். அரசனுடைய காவல் மரத்தின் கனியைத் தின்ற நேரிழைக்குக் கொலைத் தண்டனை கொடுத்துக் கோசர் குலத்தின் பகைமையைத் தேடிக்கொண்டான் நன்னன். இந்தப் பகைமை நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.

கொடுங்கோல் மன்னன் என்றும், பெண் கொலை புரிந்த பாவி என்றும் நன்னனை மக்கள் நொந்தார்கள். நொந்தாலும் என்ன? அவனுடைய வலிமையும், படையாற்றலும், கடல் தீவுகளிலே அவனுடைய கூட்டாளிகளின் செல்வாக்கும் எல்லாம் சேர்ந்து யாரும் அவனை அணுக முடியாத நிலை! முதலாம் நன்னனுடைய ஆட்சி அப்படி முடிந்தது. அவனுடைய மகனாகிய இரண்டாம் நன்னன் பட்டத்துக்கு வந்தான். அப்போதும் நிலைமை திருந்தவில்லை. கொங்கு நாட்டைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றி விழுங்க ஆரம்பித்தான் இந்த நன்னன்! இதோடு நில்லாமல் சேர நாட்டுக்கு உரிய பூழி நாட்டையும் மெதுவாக விழுங்கத் தொடங்கினான். அதோடும் நிறுத்தவில்லை! தமிழகத் துறைமுகத்துக்கு வந்த யவன வணிகர்கள் சேர நாட்டு மிளகையும் புன்னாட்டு நீலக் கற்களையும் ஏராளமாகப் பொன் கொடுத்து வாங்கிச் சென்றார்கள் என்பதை அறிந்து, இப்போது நன்னன் தனது பார்வையைப் புன்னாட்டின் மீது செலுத்தத் தொடங்கினான்!

நீலவல்லியின் தம்பியும் புனல் வேணிய மன்னனின் மகனுமாகிய மலர் வேணியன் புன்னாட்டில் அரசாட்சி செய்து வருகிற காலம்! அந்த அரசாட்சியை ஆட்டம் கொடுக்கச் செய்வதற்காக நன்னன் இப்போது பல சூழ்ச்சிகள் செய்யத் தலைப்பட்டான்.

இதையெல்லாம் கண்டு வெகுண்டவர்கள் வெளிநாட்டு அரசர்கள் மட்டுமில்லை. துளு நாட்டுக்குள்ளேயே நேர்மையும் சத்தியமும் நிரம்பிய வீரர்கள் இந்த நடவடிக்கைகளையெல்லாம் கண்டு மனம் பொருமினார்கள். ஏற்கனவே நேரிழைக்குத் தந்த தண்டனையினால் தங்கள் குலத்துக்கு ஏற்பட்டிருந்த பழியை எண்ணி எண்ணி மனம் குமைந்து வந்த கோசர்கள் இப்போது இரண்டாம் நன்னன் செய்து வரும் சதியாலோசனைகளையும், நேர்மையற்ற வன்முறைச் செயல்களையும் கண்டு வெகுண்டனர். இப்படி வெகுண்டவர்களிலே இரண்டு கட்சிகள் இருந்தன. ஒரு கட்சி, தமிழ் நாட்டு மன்னர்கள் சிலரைக் கூட்டாகச் சேர்த்து ஒன்றுகூடி வந்து இந்த நன்னர்களைத் தாக்க வேண்டும் என்றும்,

# அல்ஜிப்ரா பட்டர்!




இப்போது நாம் ஆங்கில எழுத்துக்களைக் கொண்டு அல்ஜிப்ரா போடுகிறோம். இதை முதன் முதலில் கண்டு பிடித்தவர் யார்? மேனாட்டவர் அல்ல. தேவநாகரி எழுத்துக்கள் உபயோகித்து அல்ஜிப்ரா கணக்கை முதன் முதல் செய்தவர் ஆரியபட்டர். ஐந்தாம் நூற்றாண்டில் நம் நாட்டில் வசித்த கணித மேதை. அல்ஜிப்ராவின் காலத்தைக் கணக்கிட ஆராய்ச்சி செய்த போது ஆரிய பட்டரின் நூல்களில் அல்ஜிப்ரா காணப்பட்டதாம். எனவே, ஆராய்ச்சியாளர் அவர்தான் முதன் முதலில் அல்ஜிப்ராவைக் கணித்திருக்க வேண்டும் என்று தீர்மானித்திருக்கின்றனர். ❁

— தகவல்: தோ ஆதாரம்: வைக்கிங் என்சைக்ளோபீடியா

தாக்கி அடியோடு அழித்து இந்தத் துளு நாடு முழுவதையும் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்றும் கருதியது. இந்தக் கட்சியோடு கருத்து மாறுபாடு கொண்ட இன்னொரு கட்சியாளர்களும் துளுநாட்டிலே இருந்தார்கள். அவர்கள் கோபாவேசத்தில் உருவான போர் வீரர்கள்! கோசர்களுடைய வீரத்திலே பயிற்சி பெற்றுக் கோசர் மரபின் மாணவர் மரபிலே வந்த போர் வல்லவர்கள் இவர்கள். இவர்களுடைய சீற்றமெல்லாம் நன்னர்களை எப்படியாவது தொலைக்க வேண்டும், துடைத்து மெழுக வேண்டும் என்பது! அதிலும் இரண்டாம் நன்னன் செய்து வருகிற கொடுமையும், அநீதிகளும் பார்க்கும் போது, இந்தக் கொடுங்கோலனை எப்படியாவது கொலை செய்து தீர்த்தால் கூடத் தமிழ் நாட்டின் எதிர்காலத்துக்கு அது ஒரு பெரிய அரசியல் தொண்டாக அமையும் என்று கருதினார்கள் இந்த வீரர்கள்! இவர்களிலே உடற்பயிற்சியும், போர்க்களப் பயிற்சியும், தாக்குதல், அடித்தல், குத்துதல், பம்முதல் முதலான எண்பத்து நான்கு வகையான உடல் விளையாட்டுக்களும் தேர்ந்திருந்த பல மல்லர்கள் இருந்தார்கள். இந்த வீர மல்லர்களுக்கெல்லாம் நன்னனுடைய உயிரே குறியாக இருந்தது. அந்த உயிரை எப்படியாவது வாங்கிவிட வேண்டுமென்று துடித்தார்கள் இந்த வீர இளைஞர்கள்!

துளுநாட்டு மன்னனாகிய நன்னனுக்கு ஓரளவு தெரியும்; சேர மன்னரும், புன்னாட்டு வேளிர்களும், மற்றக் குறுநில மன்னர்களும் தனக்கு எதிராக ஒரு கூட்டுச் சேர்ந்து பலம் திரட்டுகிறார்கள் என்பதை நன்னன் அறிவான். அதே சமயம் தனது அரசியல் சுற்றத்தார்களிடையேயும் சில எதிர்ப்பு வேகங்கள் உருவாகி வருகின்றன என்றும் அவனுக்குத் தெரியும். ஆனால் தன்னுடைய வலிமையிலும், படை ஆற்றலிலும் அவனுக்கிருந்த அளவற்ற நம்பிக்கையும் உறுதியும் காரணமாக, நன்னன் இந்த எதிர்ப்புக்களைக் குறித்துக் கவலைப்படவில்லை. அவனுடைய வன் செயல்களும் சூழ்ச்சிகளும் இம்மியும் தளரவில்லை! இதுகண்டு அவனுடைய அமைச்சர்களிலே சிலர் வருந்தினார்கள். அறிவுரை சொல்லி அதனால் பயன்காணாத சில முதிய அரசச் சுற்றத்தார்கள் ஒதுங்கி வாழ முனைந்தார்கள்! அரசவையிலிருந்து விலகிச் சென்றார்கள்!

உள்நாட்டிலே நன்னனுக்கு எதிராகக் கிளம்பிய வீரர்களின் அணி நாளுக்கு நாள் வலிமை பெறத் தொடங்கிற்று. கோசர்களிலே வல்லமை படைத்த சில வீரர்கள் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று மன உறுதி எடுத்துக் கொண்டு தக்க தருணத்தை நாளும் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். இவர்களிலே ஒருவர் ஆதனார்!

ஏழில் மலை அடிவாரத்தை யடுத்த கானக வட்டத்திலே ஆதனாருடைய போர்ப் பயிற்சிக் கூடம் இருந்தது. துளு நாட்டிலே மிகவும் புகழ் பெற்ற

மற்களம் அது. போருக்கு ஆயத்தமாகும் படைவீரர்களுக்குப் பயிற்சி தருவதோடு, மல்லர்கள் பலரை உடற் பயிற்சியிலே பழக்கி, ஆனைப் போர், மற்போர், குத்துச் சண்டை, சிலம்பப் பயிற்சி, வாட்போர் முதலான பயிற்சிகளிலே ஒப்பற்ற வீரர்களாக உருவாக்கி வந்தார் இந்த ஆதனூர். இவருடைய மாணவர்கள் சிலர் நன்னனுடைய மெய்காவலர் கூட்டத்திலும் இலைமறைவு காய் மறைவாகப் பணி புரிந்துவந்தார்கள்! இதுவே ஒரு பெரிய வாய்ப்பாக அமைந்தது அழலாடிக்கு!

ஆம்; அழலாடி தனது அன்புக்கும் திருமண உரிமைக்கும் உடைமையாகி விட்ட பேரழகி பொன்மணியிடம் உறுதிமொழி வழங்கிவிட்டுப் புறப்பட்ட அந்தத் தருணம், துளு நாட்டின் அரசியல் சூழ்நிலை அவனுடைய எண்ணத்துக்கும், எடுத்துக் கொண்ட முயற்சிக்கும் ஏற்ற முறையில் ஊக்கமும் உதவியும் வழங்கக் கூடியதாக இருந்தது! அதை நன்கு பயன்படுத்திக் கொண்டான் அழலாடி!

''பெண் பழி செய்தது நன்னர் குலம். அந்தப் பழிக்குப் பழி ஒரு பெண்ணின் வழியாகவே சாதனையாகப் போகிறது!'' — இவ்வாறு எண்ணினான் அழலாடி. வீரமும் ஆற்றலும், செயல் திறமையும் வாய்ந்த ஒரு மல்லன் அழலாடி! அவனுடைய நேரான மனத்தில் அம்பு பாய்வது போல ஒரே ஓர் எண்ணந்தான். பழிக்குப் பழி! நேர்மையின் வழியிலே வந்தவள் பொன்மணி! நன்னன் வழியிலே வந்தவன் இந்தக் கொடுங்கோல் மன்னன்! பழிக்குப் பழி — இப்படி எண்ணங்களை உறுதிப்படுத்திக்கொண்டான் அழலாடி. அவனுடைய உள்ளத்தில் பொன்மணிக்காக இருந்த அன்பு வேகமோ என்றால், வெறும் காளை மாட்டைப் பிடித்து அடக்கியது போதாது அந்த வேகத்துக்கு! ஒரு மன்னனையே பழி தீர்த்துக் கொள்ளக் கூடிய அத்தனை வேகம் கொண்டது அந்த அன்பும், அதிலிருந்து புறப்பட்டு இயங்கிய மன ஆற்றலும்!

ஃ ஃ ஃ



நூலேணியிலே படர்ந்தான் வீரத் திருமகன் அழலாடி! ஆதனூர் கொடுத்த நச்சுப் பொடிகள் எல்லாம் அந்தத் துணிப் பந்திலே இருந்தன. நல்ல பாதுகாவலோடு இருந்தன! ஒன்றை அவிழ்த்து அந்தப் பொடியை இடது உள்ளங்கையில் வைத்து ஐந்து விரல்களாலும் நன்கு பிசைய வேண்டும். புகை வரும். அதை அந்தக் கட்டிலின் முகப்பைப் பார்த்து ஊத வேண்டும். நாசிக்குள் மெதுவாக அந்தப் புகையிலே ஐந்தாறு இழைகள் புகுந்தால் போதும். தூக்கம் மயக்கமாகி விடும்! உறக்கம் இறக்கமாகி விடும்! துயில்வது என்பது நினைவழிவது என்ற நிலையாகி விடும். ஆனால் ஒன்று. அந்தப் புகையை ஊதும் போது தான் தன்னுடைய மூச்சை நன்றாக அடக்கிக் கொள்ள வேண்டும்!

இத்தனை வழிகளையும் சொல்லி அனுப்பியிருக்கிறார் ஆதனூர். வெறும் மல்லரா அவர்? இல்லை! சித்தர்களின் வைத்திய முறைகளிலே நன்கு தேர்ந்த மூலிகை வல்லவரும் கூட அவர்!

ஏழில் மலை அடிவாரத்திலே இருந்த அந்த அரண்மனைக்கு வெளியே கோட்டையின் மதில்களிலிருந்து சற்றுத் தொலைவிலே, காட்டு அரணின் விளிம்பிலே மூன்று குதிரைகள் நின்றன. கருங் குதிரைகள். ஒன்று அழலாடி ஏறி வந்த விந்தைப் பரி. மற்ற இரண்டும் வேறு இரண்டு மல்லர்கள் ஏறி வந்த கருங்குதிரைகள். இப்போது துணை வீரர்கள் இருவரும் அந்தக் குதிரைகளுக்கருகே நின்று ஒவ்வொரு விநாடியும் அரண்மனைப் பக்கமே பார்த்துப் பார்த்துத் திரும்புகின்றனர். அவர்கள் அப்படித் திரும்புவதைப் பார்க்கும் போது அவர்களுக்குச் சற்றுத் தொலைவிலே இன்னும் சில வீரர்கள் மறைந்து கொண்டு நிற்க வேண்டும் என்று தோன்றுகிறது.

இதோ! அழலாடி சாளரத்தின் பட்டைச் சுவரிலே நிற்கிறான். பலகணியின் வழியாகப் புகை கிளம்புகிறது. கட்டிலை நோக்கிச் செல்கிறது, அந்த மயக்கப் புகை.

இதோ! கட்டிலில் படுத்திருந்த உடம்பு மெதுவாக அசைகிறது.. ஆனால் விழிக்கவில்லை. ஒரு சிறு அசைவு. முகம் அந்தப்பக்கமாகத் திரும்பி யிருக்கிறது. அதைப் பார்க்க முடியவில்லை. ஆனால் அவன் ஊதிச் செலுத்திய புகை நாசியிலே நுழைந்திருக்க வேண்டும்! நூறு எண்ணும்படி ஆதனூரின் கட்டளை! நூறு எண்ணி முடிந்ததும் புகை வந்த கருவைக் கசக்கித் தூர எறிகிறான். மறுபடி சாளரத்தின் பட்டைச் சுவரிலேயே இருந்து கொண்டு இருநூறு வரை எண்ணுகிறான், மனத்துக்குள்ளே!

புகை அடங்கியிருக்க வேண்டும். சாளரத்தின் அகன்ற பெரிய வட்டமான கண்ணின் வழியாகக் குளிர்ந்த

காற்றுப் பாய்கிறது. அந்தக் காற்றிலே சற்று நேரம் மௌனமாக இருக்கிறான் அழலாடி!

இதோ உள்ளே குதிக்கிறான். நாயகமான பெரிய விளக்கு எரிந்துகொண்டிருக்கிறது. மற்றப்படி அதிக வெளிச்சம் இல்லை. பக்கத்து அறையிலோ அல்லது சுற்றுச் சூழ்நிலையிலோ மனிதக் குறியே காணோம்! தன்னந் தனியான ஏகாந்தச் சூழலிலேயே அப்படிக் கண்ணயர்ந்திருக்கிறானா மன்னன்?

கீழே குதித்த அழலாடி சாளரத்துக்கு அருகே இருந்த கொளுகு வலையத்தைத் திறக்கிறான். வாசல் இன்னும் அகலமாகிறது. அடுத்த சிறிய கதவையும் திறக்கிறான். இன்னும் பெரிய வாசல் அது! இப்போது தான் நுழைந்து வெளியேறுவதோடு இன்னொரு உடம்பையும் தூக்கிக் கொண்டு நூலேணியிலே பற்றிக் கீழே இறங்கி விடலாம்! இண்டு இடுவல் இல்லை. மிகுந்த வாகோடு அந்த மயங்கிய உடலைத் தன் தோளிலே சாய்த்துக் கொண்டு சாளரத்தின் விளிம்பிலே தொத்தி நின்று மையப் படுத்திக் கொண்டு பிறகு நூலேணியிலே ஒரு கையைப் பற்றிச் 'சரசர' என்று கீழே சறுக்கி இறங்கி விடலாம். எத்தகைய இடைஞ்சலும் இல்லை.

சுருக்காங்கண்ணியை இடுப்பிலிருந்து எடுத்துப் படுக்கையின் மீது சுண்டுகிறான் அழலாடி. தலையணையின் உறையைப் போல் அகன்று சுருங்கி அந்த மனித உடலைப் போர்த்திச் சுண்டி இழுக்கிறது சுருக்காங்கண்ணி! இனி அந்த மயக்கமுற்ற உடலை அப்படியே தூக்கித் தோளிலே சாய்த்தவாறு சாளரத்தின் அகன்ற கண் வழியாக இறங்க வேண்டியதுதான்!

மங்கலான பள்ளியறை வெளிச்சத்தில் அதைச் செய்து முடிக்கிறான். இதோ சாளரத்தில் தொத்தி வெளியே நூலேணியைப் பிடித்துச் 'சரசர' என்று கீழ் நோக்கிச் சரிகிறான் அழலாடி. வானத்திலிருந்து விண்மீன்களின் ஒளி பாய்ந்து வந்து தோளிலே சாய்த்திருந்த உருவத்தின் மீது படிகிறது. ஆகா! என்ன தவறு நேர்ந்து விட்டது! தன் தோளின் மீது மயங்கிக் கிடந்த அந்த மனித உடல் அரசனா? இல்லை. ஒப்பற்ற எழிலோடு கூடிய இள மங்கை அவள். நூலேணியில் மிகுந்த வேகத்தோடு இறங்கிக் கொண்டிருந்த அழலாடிக்கு இதயத்தில் ஒரு பெருந் துணுக்கம்! தான் தூக்கிச் செல்வது மன்னனுடைய உடல் இல்லை! எல்லையற்ற வனப்பு வாய்ந்த அரச குமாரி அவள்!

(தொடரும்)

### வருத்தப்படுவானேன்?

"நம்மை மற்றவர்கள் பாராட்டவில்லையே என்று நாம் ஏன் வருத்தப்பட வேண்டும்? நம்மை நாமே பாராட்டிக் கொள்ள வேண்டியதுதான். என்னையே எடுத்துக் கொள்ளுங்களேன். எனக்கும் ருட்யார்டு கிப்ளிங்குக்கும் இடையில் இந்த உலகிலுள்ள எல்லா விஷயங்களும் அடங்கி விடுகின்றன. ருட்யார்ட் கிப்ளிங்குக்கு இந்த உலகத்தில் தெரியாத விஷயங்களே இல்லை. எனக்கோ மீதி எல்லா விஷயங்களும் தெரியும்!"— **பிரபல நகைச்சுவை எழுத்தாளரும், பேச்சாளருமான மார்க் ட்வைன் பம்பாயில் 1896ம் ஆண்டில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.**

ஆதாரம்: லோஜுரா

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்

# கடலுக்கு அடியில் நகரம்!

● இங்கிலாந்து போன்ற சிறிய நாட்டில் ஜனத்தொகை ஏராளமாகப் பெருகிவிட்டால் என்ன செய்வது? விஞ்ஞானிகள் அதற்குப் பதில் வைத்திருக்கிறார்கள். — "கடலுக்கடியில் போய் வாழ்வது!"

விளையாட்டு அல்ல; பிரிட்டனில் இது விஷயமாகத் தீவிர ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. கிழக்கு இங்கிலாந்தை யொட்டியுள்ள வடக்குக் கடலின் அடிவாரத்தில் பூமியைக் குடைந்தால் ஏராளமான பெட்ரோலியம் எண்ணெய் கிடைக்கும் என்று கண்டிருக்கிறார்கள். ஆகவே இங்கு கடலின் அடிவாரத்தில் ஒரு தொழில் நகர் அமைப்பதெனத் 'திட்டம்' வகுத்துள்ளனர். இதற்கான 'பிளான்'கள் தயாராகிவிட்டன.



இந்தத் தொழில் நகரை அமைக்க அரை மில்லியன் பவுன்கள் செலவாகும்! கடலின் அடிவாரத்தில் பூமியோடு நங்கூரம் பாய்ச்சியது போல் இணைந்து நிற்கும் இந்த நகரம். மூன்றடுக்கு மாடிகளைக் கொண்ட இந்நகரில் மூன்று மாடிகளிலும் சேர்த்து இருபத்தையாயிரம் டன் எடையுள்ள இயந்திர சாதனங்களை நிறுவலாம்.

◄ தொழிலகங்களின் புகைபோக்கிகளைப் போன்ற ஆனால், அளவில் மிகப் பெரிய அமைப்புக்கள் இந்நகரிலிருந்து கிளம்பிக் கடலின் நீர்மட்டத்துக்கு மேலே எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும். இவற்றின் வழியாக மக்கள் கீழே இறங்கிப் போவார்கள்; வெளியே வருவார்கள். தொழிலகங்களில் வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்கும் அவர்கள் குடும்பத்தினருக்கும் தேவையான எல்லா வசதிகளும் இந்தக் கடல் நகரில் இருக்கும்.

பயங்கரமான புயல் வீசினாலுங்கூடக் கடலின் அடிவாரத்தில் அமைக்கப்படும் இந்தத் தொழில் பட்டணத்தை அசைக்க முடியாது!

பெட்ரோலியம் எண்ணெய் உற்பத்திக்கு மட்டுமல்ல; சர்க்கரை ஆலை, காகித ஆலை, நெசவு நூல் ஆலைகள் முதலியன நிறுவவும் இந்நகர் பயன்படும்.

.பி.ஸி. லண்டன் விகிதம்

● அமெரிக்காவில் இரண்டு புற்றுநோய் ஆராய்ச்சிசாலைகளில், சில எலிகளுக்கு ஏ விட்டமின் சத்து மிகுதியாகச் செலுத்தப்பட்டது- பிறகு அவற்றின் உடலில் புற்றுநோய் உண்டாக்க முயன்ற போது, அவற்றுக்கு அந்த நோய் வரவில்லை. ஏ - விட்டமின் கொடுக்கப்படாத எலிகளுக்குச் செயற்கை முறையில் புற்று நோயை ஏற்படுத்த முடிந்தது. இதிலிருந்து ஏ - விட்டமினுக்கும் புற்றுநோய்க்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரிகிறது.




ஆதாரம்: டெய்லி எக்ஸ்பிரஸ்
தகவல்: தி.நா.

□ □ □ □ □ □ □

● குரங்குகளின் முகபாவங்களுக்கு இது தான் என்று நாம் நினைக்கும் அர்த்தமெல்லாம் உண்மையில் சரியல்ல. குரங்குகள் பற்களெல்லாம் தெரியும்படி வாயைத் திறந்தால் அதற்கு சந்தோஷம் வந்துவிட்டது என நினைக்கிறோம். உண்மையில் அது சரியல்ல. அதற்கு, குரங்கு அப்பொழுது ஏதோ துன்பத்திலிருக்கிறது என்று அர்த்தம். அதேபோல் கீழ்வரிசைப் பற்கள் தெரியும்படி வாயைத் திறந்தால் அது மகிழ்ச்சியி லிருக்கிறது என்று அர்த்தம். மேல் வரிசைப் பற்கள் தெரியும்படி வாயைத் திறந்தால் அது கோபமாயுள்ளது என்றும், உறுமினால் நட்புப் பேச்சு என்றும் அர்த்தம். கோரைப் பற்கள் தெரியும்படி வாயைத் திறந்தால் தன் சகாவைத் திட்டுகிறது என்று அர்த்தம். குரங்குகள் கொட்டாவி விட்டால் உண்மையில் அது களைப்பாயுள்ளது என்று அர்த்தமல்ல. குரங்குகளின் முக பாவங்களெல்லாம், அவை பேசும் பேச்சுக்களே!



ஆதாரம்: 'ஸயன்ஸ்' டுடே'
தகவல்: வி. ஸ்ரீதரன்









# மேனாடுகளுக்குப் போகாத மாடுகள்!



மேனாடுகளுக்குச் சென்று கல்வி பயின்று வந்தவன் அந்த மாணவன். அவன் தனது கிராமத்து வாணியன் சிதம்பரத்தின் அலுவல் ஓயாத வாழ்க்கையைக் கண்டு அதிசயமுற்றான். சிதம்பரம் செக்கு மாட்டை ஓட்டுவான். செக்கில் எண்ணெய் கொட்டுவான்; தண்ணீர் கொடுப்பான். நடுவில் யாராவது எண்ணெய் கேட்டு வந்தால் அவர்களுக்கும் போய் எடுத்துக் கொடுப்பான்.

இத்தனை அலுவல்களையும் அவன் ஒருவனே செய்வதைக் காண வெளிநாட்டுக் கல்வி பயின்றுவந்த அந்த மாணவனுக்கு வேடிக்கையாக இருந்தது. அங்கு ஒவ்வொரு வேலைக்கும் தனித் தனி நபர்களையல்லவா போட்டு வந்தார்கள்?

"ஏன் சிதம்பரம், ஒண்டியாக நீ இத்தனை வேலைகளையும் செய்யவேண்டும்? ஒத்தாசைக்கு ஆள் போட்டுக் கொள்ளக் கூடாதோ?" என்று கேட்டான்.

"எல்லா வேலைகளையும்தான் நான் ஒண்டியாகவே செய்துவிடுகிறேனே, அப்படி இருக்கும்பொழுது நான் எதற்கு ஆட்கள் போட்டுக் கொள்ள வேண்டும்?" என்றான் சிதம்பரம்.

"மேனாடுகளி லெல்லாம் இப்படிச் செய்வதில்லை. நீ கடைக்கு எண்ணெய் எடுத்துக் கொடுக்கப் போகிறாய் என்று வைத்துக் கொள். இந்த மாடுகள் நடக்காமல் நின்றுவிடலாம் அல்லவா? ஓர் ஆள் போட்டால் அவன் பார்த்துக் கொள்ளுவான், பார்!" என்றான் இளைஞன்.

"மாடுகள் நிற்காமல் நடக்கின்றனவா, இல்லையா என்பதற்காகக் கழுத்தில் மணி கட்டியிருக்கிறேன். மாடுகள் நடக்காமல் நின்று விட்டால், மணி ஓசையும் நின்றுவிடும் அல்லவா? அப்பொழுது வந்து அதட்டி ஓட்டி விடுவேன்!" என்றான் சிதம்பரம்.

"ஏன், இந்த மாடுகள் உன்னை ஏமாற்றி விடலாமே! நின்ற இடத்திலேயே இருந்து கொண்டு கழுத்தை ஆட்டினால் மணி ஓசை கேட்குமே! அப்பொழுது என்ன செய்வாய்?" என்றான் இளைஞன்.

சிதம்பரம் சிரித்தான். "தம்பி, இந்த மாடுகள் உன்னைப் போல் மேனாட்டுக்குப் போய்ப் படித்துவிட்டு வரவில்லையே, அப்படியெல்லாம் செய்ய!"

---

# மூன்று ஆண்டுகள் சம்பளம் வாங்கிக் கொள்ளாத பேராசிரியர்



1. பிரபல இந்திய விஞ்ஞானி. இவர் பணியாற்றிய கல்லூரியில் மேனாட்டுப் பேராசிரியர்களுக்கு ஒரு விதமான சம்பளமும், இந்தியப் பேராசிரியர்களுக்கு வேறு விதமான சம்பளமும் கொடுப்பதை எதிர்த்து மூன்று ஆண்டுகள் சம்பளம் வாங்கிக் கொள்ளாமல் பணியாற்றியிருக்கிறார். ஏறக்குறைய எட்டு ஆண்டுகளுக்கு முன் இவரது நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. யார் இவர்?

2. ஆதியில் அமெரிக்காவில் தக்காளிப் பழம் மருந்துக்குக்கூடக் கிடையாது! தக்காளிப் பழ விதைகளை அமெரிக்கா முதலில் ஓர் ஐரோப்பிய நாட்டிலிருந்துதான் தருவித்துக் கொண்டது. எந்த நாடு அது?

3. 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் உதவி ஆசிரியராக இருந்த காலத்திலும் பின்னரும், நான்கு பத்திரிகைகளின் ஆசிரியப் பொறுப்பை ஏற்று நடத்தியிருக்கிறார் பாரதியார். அப்பத்திரிகைகளின் பெயர்களைக் கூற முடியுமா?

4. மின்சாரம் கண்டு பிடிக்கப்பட்ட பிறகு ஆங்கில மொழியில் உள்ள சொற்கள் சில ஆயிரங்கள் அதிகரித்து விட்டன! சுமார் எத்தனை ஆயிரங்கள் இருக்கலாம்? 2,000? 3,000? 4,000?

5. யானையின் எடை அதிகபட்சம் எத்தனை டன்கள் இருக்கும்?



6. கடந்த ஆண்டில் (1966) சுதந்திரம் பெற்ற நாடுகள் நான்கு. அவை எவை எனக் கூற முடியுமா?

7. இன்று பாரதத்தில் உள்ள பல்கலைக் கழகங்கள் மொத்தம் எத்தனை? 58? 60? 62?

8. பாண்டிய மன்னன் ஒருவனிடம் மந்திரியாக இருந்திருக்கிறார் 'தென்னவன் பிரம்மராயன்' என்னும் பட்டப் பெயர் கொண்ட பெரியார் ஒருவர்: யார் இவர்? மன்னன் யார்?

9. ஹோமர்; மில்டன்: இவ்விருவரிடையே உடலமைப்பில் ஒற்றுமை ஒன்று உண்டு. என்ன அது?



-- பரணி

(குழப்பம் தெளிய 70ம் பக்கம் பார்க்கவும்)

## அரசினர் துறையே! அட அழகே!

பிரிட்டிஷ் அரசாங்கம் சில தொழில் துறைகளைத் தானே ஏற்று நடத்தி வருகிறது. அவைகளில் இதுவரை மொத்தம் 812 மில்லியன் பவுண்டு நஷ்டம் ஏற்பட்டு இருப்பதாகக் கணக்குப் போட்டிருக்கிறார்கள்.

பிரிட்டனில் உள்ள எஃகு தொழிற்சாலைகளில், கடந்த மூன்று ஆண்டுகளில் 22 மில்லியன் பவுண்டு நஷ்டம் காட்டியுள்ள ஒரே ஒரு தொழிற்சாலை - அரசாங்கம் ஏற்று நடத்தும் தொழிற்சாலைதானாம்!

ஆதாரம்: டைம் அண்ட் டைட். தகவல்: ஏ. கே. சுந்தரசாமி

# "கிறள் கட்"

எழில்வண்ணன்

### கிரிக்கெட் வாழ்த்து

'போலிங்' மிசை ஏகினான் கைத்திறன் எதிர்த்தார்
'கிரீஸ்' மிசை நீடு நிற்பார்.

### டீமின் இலக்கணம்

நல்லதொரு 'பாட்ஸ் மேனும்' 'பௌலர்களும்' வல்லதொரு
'காப்டனு'ம் சேர்வதாம் 'டீம்'.

### மக்கள் கூற்று

பார்த்ததனாலாய பயனென்கொல் - பார்புகழ்
'காமென்டரி' கேட்டிலர் எனின்

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்-உய்வில்லை
நல்ல 'காட்ச்' விட்ட மகற்கு

டிரான்ஸிஸ்டர் உடையார் எல்லாம் உடையார்-அஃதிலார்
என்னுடைய ரேனும் இலர்

### போலிங் திறன்—

எல்லா விக்கும் விக்கல்ல 'பௌலர்ஸ்'க்கு
'விக்கெட்' விக்கே விக்கு.

அல்லற்பட்டு ஆற்றாது விடுத்த பந்தன்றோ
'ஸ்டம்பை' உடைக்கும் படை.

'போலிங்'கிற் பெருந்தக்க யாவுள - ஒரே 'பாலி'ல்
'விக்கெட்' உண்டாகப் பெறின்.

### பாட வண்மை

தன்னைத்தான் காக்கின் 'கிரீஸ்' காக்க - காவாக்கால்
தன்னையே கொல்லும் விக்கெட்.

அடிப்பின் 'பௌண்டரி' அடிக்க அஃதிலார்
அடித்தலின் அடிக்காமை நன்று.

சாடுக பந்தை விரைவுடன் - சாடிய பின்
ஓடுக அதற்குத் தக.

யாகாவா ராயினும் 'பிச்' காக்க - காவாக்கால்
சோகாப்பர் 'ஸ்டம்ப்' இழுக்கப்பட்டு

ரன் எடுத்து வாழ்வாரே வாழ்வார் - மற்றெல்லாம்
டக் அடித்துப் பின் செல்பவர்

எப்பந்து யார் யார் கைவீசி எனினும் - அப்பந்தை
பவுண்டரிக் கடிப்பதாம் 'பாட்டிங்'

## கணித சூத்திரம்!

'பிரிட்டிஷ் ரிஜிஸ்டர்' என்ற பத்திரிகையின் நிருபர், பேராசிரியர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனிடம், 'வாழ்க்கையில் வெற்றி பெறுவது எப்படி?' என்று கேட்டபோது, அவர் கொடுத்த கணித சூத்திரம் இது: $A = X + Y + Z$

A என்பதுதான் வாழ்க்கையில் வெற்றி. X என்பது கடின உழைப்பு. Y என்பது ஆரோக்கியமான விளையாட்டு. 'Z என்பது என்ன தெரியுமா?' என்று பேராசிரியர் நிருபரைத் திருப்பிக் கேட்டாராம்! நிருபர் விழித்தபோது, மேதை சொன்னார்: "அதுதான் அதிகம் பேசாமல் வாயை மூடிக் கொண்டிருப்பது!" தகவல்: எஸ். எஸ்.



வெள்ளி விழா
இரண்டாவது
பரிசு நாவல்

# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்



### மூன்றாம் அத்தியாயம்

## பாசத் தவிப்பு

நெல்லையப்ப பிள்ளை வாழ்ந்ததெல்லாம் ரங்கமணிக்காகத்தான். ஆனால் அவன் யாருக்காக வாழ்கிறான்? நாற்பது கோடி இந்தியர்களுக்காக வாழ்க்கையைப் பணயம் வைக்கிறான். அவனுக்கு அது விளையாட்டு, கிழவருக்கு வேதனை. அவனுடைய துடிப்பையும் ஆவேசத்தையும் கிழவர் புரிந்து கொள்ளவே இல்லை. தமது மகன் தாய் நாட்டுக்காக உயிரை விட்டபோதுகூடப் புரிந்துகொள்ளவில்லையே!

ஒரு காலத்தில் நெல்லையப்ப பிள்ளை தமக்காக மட்டுமே வாழ்ந்தார். அது அவர் மைனர் நெல்லையப்ப பிள்ளையாக இருந்த காலம். அந்த வாழ்வெல்லாம் மின்னலைப் போல் ஆசை காட்டி மறைந்து விட்டது. பிறகு, வாழ்ந்த வாழ்வெல்லாம் அந்தக் குடும்பம் அணையாமல் இருப்பதற்காக அவர் பட்ட வேதனைகள்தாம். முப்பது வயதிலிருந்தே

குடும்பத்தைத் தாங்கித் தாங்கித் தழும்பேறிவிட்ட அவருடைய இதயத்தில் பாசம் படுத்திய பாட்டுக்கு அளவேது? இன்று அவருடைய தொடர்ச்சி என்று சொல்ல ரங்கமணி ஒருவன்தான் இருந்தான். அதில்தான் கிழவருக்கு எவ்வளவு பெருமை. நிறைய சொத்து இருக்கிறது. அதை ஆண்டு அனுபவிக்கத் தெரியாமல் தம் பேரன் இப்படி நாடோடியாகத் திரிகிறானே என்று அங்கலாய்த்தார்.



இரண்டரை ஆண்டுகளுக்குமுன், ரங்கமணி சட்டம்படிக்கச் சென்னைக்குப் போகவேண்டும் என்று கூறிய போது கிழவர் பதறி விட்டார். பட்டணம் பக்கத்திலா இருக்கிறது? அவ்வளவு தூரம் பேரனைப் பிரிய முடியுமா? அவருடைய கண் பார்வையிலிருக்கும் போதே அவன் யாருக்கும் அடங்காமல், சுதந்திரப் போராட்டம், பயங்கர இயக்கம் என்றெல்லாம் கூறிக் கொண்டு திரிந்தான். பட்டணத்துக்குப் போய் விட்டால் என்ன ஆகுமோ? பாவம், கிழவரின் அடிவயிற்றில் ஏதோ பிசைவது போலிருந்தது. பட்டணம்தான் அவருடைய ஒரே மகனைப் பலி வாங்கியது. அதை இப்போது நினைத்தாலும் கிழவரின் இதயம் தவிக்கும். பேரனையும் அதே பட்டணத்துக்கு அனுப்புவதா? ரங்கமணி, பட்டணம் போவதைக் கிழவர் ஆதரிக்கவில்லை.

''டேய், ரங்கா! வக்கீல் தொழில் ஒரு தொழிலாடா? தாசி வாடிக்கைக்காரனை எதிர்நோக்கி இருப்பது போல், நீ கட்சிக்காரனை எதிர்பார்த்துக் காத்துக் கிடக்க வேண்டியதிருக்கும். வக்கீலாகி விட்டால் சத்தியத்தை விலை கூற வேண்டியிருக்கும். வேசிக்காவது பாலியத்தில் வருமானம் உண்டு; வக்கீலுக்கு விருத்தாப்பிய வயதில் தான் வருமானம் வரத் தொடங்கும்'' என்றார் எரிச்சலுடன்.

''தாத்தா, வக்கீல் தொழிலை இப்படி இறக்கி விட்டீர்களே! புனிதமான தொழில் அது. நீதிக்காக வாழும் வாழ்க்கை அது. அதற்கு ஈடான கண்ணியமும், பெருமையும் வாய்ந்த தொழில் வேறு எது இருக்

இறது? சத்தியத்தைக் காக்கும் திருப்பணியல்லவா அது! அது சோறு போடவில்லை என்றால், நீதி வாழ்வதற்காக ஒரு வக்கீல் பட்டினி கிடந்து செத்தான் என்ற புகழாவது இருக்கட்டுமே!'' என்றான் ரங்கமணி.

''தொழில் பார்த்துத்தான் நீ சம்பாத்தியம் பண்ண வேண்டுமா? கடவுள் புண்ணியத்தில் நமக்கு இருக்கிற சொத்து இன்னும் மூன்று தலைமுறைக்குக் காணுமே! நிம்மதியாக இங்கேயே இருந்து சொத்தை மேல் பார்த்துக் கொண்டிருந்தால் போதாதா'' என்றார் கிழவர் வாஞ்சையுடன்.

அவர் எவ்வளவு சொல்லியும் ரங்கமணி கேட்காமல் சட்டம் படிக்கப் பட்டணம் புறப்பட்டு விட்டான். ஆனால், படிப்பைப் பாதியிலேயே நிறுத்திவிட்டுப் பெட்டி படுக்கையுடன் திடீரென்று ஊருக்குத் திரும்பிவிட்டான். படிப்பு நின்று விட்டதில் கிழவருக்கு மட்டற்ற மகிழ்ச்சி. பேரன் தன் பக்கத்தில் வந்து விட்டான் அல்லவா? ஆனால் கிழவரின் ஆசை நிலைக்கவில்லை.

ரங்கமணி விடுதலை இயக்கத்தில் தீவிரமாக இறங்கி விட்டான். தொடர்ந்து இரண்டு நாட்கள் வீட்டில் இருந்ததில்லை. இவனும் இவனுடைய தகப்பனைப் போல ஆகிவிடுவானோ என்று எண்ணிப் பதறினார் கிழவர்.

சில நாட்களில் அவன் வீடு திரும்பும் போது நடு ஜாமம் ஆகியிருக்கும்! எங்கே போகிறான், ஏன் போகிறான் என்பது ஒன்றும் நெல்லையப்பபிள்ளைக்குப் புரியவில்லை. அவர் கேட்டால் ரங்கமணி கூறுவதும் அவருக்குப் புரியவில்லை. விடுதலை, கட்சி, இயக்கம் என்று ஏதேதோ பேசுகிறான்.

''வெள்ளைக்காரர்களை விரட்ட உங்களால் முடியுமாப்பா? இப்படித்தான் உன் அப்பனும் பேசித் திரிந்தான். கடைசியில் அவனை இழந்தேன். சுதந்திர இயக்கம் அவனைப் பலி வாங்கி விட்டது. ஈடேறாத காரியத்தில் ஏன் இறங்குகிறாய்? ஒரு வேலை தேடிக் கொண்டு நிம்மதியாக இரேன்'' என்றார் கிழவர்.

''இப்போது வேலையில்தானே இருக்கிறேன். நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கும் வேலை தாத்தா!'' என்றான் ரங்கமணி, சிரித்துக் கொண்டே.

கிழவருக்குச் சுதந்திரத்தைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. எவனும் எப்படியும் போகட்டும், இந்த ரங்கன் இரண்டு நாட்களாவது வீட்டில் சேர்ந்தாற் போல் இருக்காமல் சுற்றிக் கொண்டிருக்கிறானே என்ற வேதனைதான் அவரை அரித்தது.

சட்டப் படிப்பை நிறுத்திவிட்டு ரங்கமணி ஊர் திரும்பி ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. சேர்ந்தாற்போல் இரண்டு நாட்கள்கூட கிழவரோடு தங்கவில்லை. எங்கெல்லாமோ சுற்றிவிட்டுச் சில மாதங்களுக்குப் பிறகு இப்போது வந்து சேர்ந்திருக்கிறான்.

பேரனைத் தொட்டுத் தொட்டுப் பேசினார். அன்று இரவு முழுவதும் தூங்கவில்லை. பேரன் வந்துவிட்ட மகிழ்ச்சி, இரவெல்லாம் பேசித் தீர்த்தார். எங்கோ பெண் பார்த்திருக்கிறாராம். புளியம்பட்டிப் பண்ணையார் மகளாம். ஒரே பெண்ணாம். ஏராளமான சொத்துக் கிடைக்குமாம் — இரவு முழுவதும் இதே தொண தொணப்புத்தான். ரங்கமணிக்குச் சிரிப்பு ஒரு பக்கம், கிழவரின் ஆசையை எண்ணி வேதனை ஒரு பக்கம்.

இவ்வளவு பாசத்தையும் உள்ளே அடக்கித் தவிக்கிறாரே! இவருடைய ஆசைகளை நிறைவேற்ற முடியாத நன்றி கெட்டவனாகத் தானே ஆகவேண்டியிருக்கிறது. கடவுளே, என் மீது அன்பு கொள்ளும் இதயங்களையெல்லாம் நொறுக்குவதுதான் விதியா? என் மீது ஏன்தான் இப்படி அன்பு செலுத்துகிறார்களோ? ஒருத்தி தன் இதயத்தையே எனக்குக் கொடுத்தாள். அவளும் ஏமாந்தாள். என்னை ஆளாக்கிய தாத்தா, தொட்டுத் தொட்டுப் பார்த்து மகிழ்கிறார். இவரும் ஏமாறத்தான் போகிறார். நான் நன்றி கெட்டவன் அல்லன். என்னுடைய பாதை வேறு என்பதை இந்தத் தெய்வங்கள் புரிந்து கொண்டால் போதும்!

ரங்கமணியின் உள்ளம் வேதனையால் தவித்தது. அவனோ இந்த மண்ணுக்காக வாழத் துடிக்கிறான். ஆனால் மற்றவர்களோ அவனை அவனுக்காக வாழத் தூண்டுகிறார்கள்.

ஏதேதோ எண்ணிக் கலங்கிக் கொண்டிருந்த கிழவர், திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவராய், ''ரங்கா!'' என்று கூப்பிட்டார். சிந்தனையில் மூழ்கியிருந்த ரங்கமணி, படுத்தவாறே, ''என்ன தாத்தா?'' என்று திரும்பிப் பார்த்தான். கிழவர், படுக்கையிலிருந்து எழுந்து ரங்கமணியின் படுக்கையில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

''ஏன்டா, நீ மனத்தில் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்? இந்தக் கிழவனைக் கடைசியில் தெருவில்தான் விட்டு விடுவாயா? உன் அப்பன் அப்படித்தான் செய்தான்!'' என்றார் கிழவர். குரல் கரகரத்தது.

ரங்கமணி படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து விட்டான். கொஞ்ச நேரம் மௌனம் நிலவியது. பதில் சொல்ல முடியாமல் தவித்தான் ரங்கமணி. ''கடைசிக் காலத்தில் உன்னைத்தானேடா, நம்பியிருக்கிறேன். உன்னுடைய முடிவு அப்படித்தான் என்றால் என் தலைவிதி அவ்வளவுதான் என்று நினைத்துக் கொள்ளுகிறேன்'' என்றார் கிழவர் மிகுந்த துக்கத்துடன்.

''இப்போது என்ன நடந்துவிட்டது? திடீரென்று உங்களுக்கு ஏன் இந்தச் சந்தேகம்?'' என்றான் ரங்கமணி.

''புளியம்பட்டிப் பண்ணையார் நெருக்குகிறார். வருகிற ஆனியில் கலியாணத்தை முடித்து விடலாம்'' என்று கிழவர் ஆசையோடு பேசினார்.

''என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!'' என்றான் ரங்கமணி.

''ஏன்டா, நீயாக வேறு எந்தப் பெண்ணையாவது தேர்ந்தெடுத்து விட்டாயா? அப்படியிருந்தாலும் சொல்லு. நான் தடை செய்யவில்லை. வீட்டுக்கு ஒரு லக்ஷ்மியைக் கொண்டு

வந்து விடப்பா !'' என்றார் கிழவர். அவருடைய வேண்டுதலில் பொதிந்திருந்த உருக்கத்தை உணர்ந்த போது ரங்கமணியின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. தாத்தாவின் கைகளை இறுகப் பற்றிக் கொண்டான்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. என் போக்கில் போக விடுங்கள். அதுதான் எனக்கு நிம்மதி. குடும்பமாக நீங்கள் வாழ்ந்தீர்களே, என்ன சுகத்தைக் கண்டீர்கள் ? உங்கள் பேரனாவது கொஞ்சம் சுதந்திரமாக வாழட்டுமே !'' என்றான் ரங்கமணி நெஞ்சம் குரலில்.

''என்னமோப்பா, என் ஆசை அப்படி. இந்த வீட்டில் குழந்தைகள் விளையாடுவதைப் பார்க்கத்தான் ஆசைப்படுகிறேன்.''

''நாற்பது கோடி மக்களும் உங்கள் குழந்தைகள்தாம்.''

''ஏதேதோ பேசுகிறாய்! எனக்கு என்ன புரியப் போகிறது. நீ சுகமாக இருக்க வேண்டும். அவ்வளவுதான். உன் அப்பனைப் போல் முரட்டுத்தனமாக நடந்து விபரீதத்தை உண்டாக்கி விடாதே. உன்னை நம்பித்தான் உயிரோடு இருக்கிறேன். என்னவோ கிழட்டு வயதில் பாசம் கிடந்து அடித்துக் கொள்ளுகிறது'' என்று கூறிக் கொண்டே எழுந்து சென்று தம்முடைய படுக்கையில் போய்ப் படுத்துக் கொண்டார் கிழவர். கண்களில் முட்டியிருந்த கண்ணீரைத் துடைக்கக்கூட உணர்வில்லாமல் கிடந்தார். அவரை நினைத்து ரங்கமணி வருந்தினான். இருவரும் இரவு முழுவதும் தூங்கவேயில்லை.

ரங்கமணி வந்து இரண்டு நாட்கள் ஆயின. இரண்டு நாட்களும் ஒரு பக்கமும் போகாமல் பேரன் தம்மோடு இருந்ததில், நெல்லையப்ப பிள்ளைக்கு அளாதி மகிழ்ச்சி. ஒரு நாள் மாலையில் ரங்கமணி, கிழவரின் அறைக்குள்ளிருந்த ஒரு பழைய துருப் பிடித்த தகரப் பெட்டியைத் திறந்து பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது கிழவர் வராந்தாவில் தம் பேரனைப் பற்றிப் பக்கத்து வீட்டுக்காரரிடம் பெருமையாகப் பேசுவதில் லயித்திருந்தார்.

துருப் பிடித்துப் போன பெட்டிக்குள் கிழவர் என்னதான் வைத்திருப்பார் என்பதை அறிவதில் ஈடுபட்ட ரங்கமணி பெட்டிக்குள் ஒரு மூலையில் துருப் பிடித்த நிலையில் ஒரு கைத் துப்பாக்கி கிடப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அதன் பக்கத்தில் ஒரு காகித உறையும் இருந்தது. ஆவலோடு துப்பாக்கியை எடுத்துப் பார்த்தான். துருப் பிடித்திருந்தாலும் பழுதில்லாமலிருப்பதைத் தெரிந்து கொண்டான். துப்பாக்கியின் பக்கத்தில் கிடந்த காகித உறையைப் பிரித்துப் பார்த்தான். உள்ளே இரண்டு கடிதங்கள் மடித்து வைக்கப்பட்டிருந்தன. அவைகளைப் பிரித்தான். ஒவ்வொரு தாளிலும் ஒரு கவிதை எழுதியிருந்தது. ஒரு தாளை வாசித்தான் —

''தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பான் வாழ்வுமோர் வாழ்வுகொல்?
மானமொன் றிலாது மாற்றலர் தொழும்பராய்
ஊனமுற் றிருக்க எவன்கொலோ விரும்புவான் ?
தாம்பிறன் கைப்படச் சிப்பவனுறி
நாமென வாழ்வோன் நமரிலிங் குளனோ?''

வாசித்து முடித்துவிட்டு மற்றொரு தாளையும் வாசித்தான். அதில்,

''இருந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுத் திழிவுற்றாலும்,
விதந்தரு கோடி இன்னல்
விளைந்தெனை அழித்திட்டாலும்,
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே''

- சுப்பிரமணிய பாரதி

என்று எழுதியிருந்தது. கவிதைகளைத் திரும்பவும் படித்தான்.

''இந்தப் பாடலைத் தாத்தா பத்திரப் படுத்தி வைப்பானேன் ?'' என்று தனக்குள்ளேயே முனகிக் கொண்டே கவிதைகளையும் துப்பாக்கியையும் தன்னுடைய பெட்டிக்குள் வைத்துப் பூட்டிக் கொண்டான். அன்று இரவு கிழவரும், ரங்கமணியும் மொட்டை மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த பொழுது ரங்கமணி கேட்டான்.

''தாத்தா, உங்களுக்குத் துப்பாக்கி சுடத் தெரியுமா ?''

''துப்பாக்கியா? அந்தச் சனியன் எல்லாம் எனக்கு எதற்கு?''

''உங்கள் பெட்டிக்குள் ஒரு கைத் துப்பாக்கி இருந்ததே ?''

''அடப்பாவி, அதைப் பார்த்து விட்டாயா? அது உன் அப்பா கொண்டு வந்தது. அதை எடுத்தாயா?'' என்று பதறிப் போய்க் கேட்டார்.

''பத்திரமாக வைத்திருக்கிறேன்.''



# ஜம்ஷெட்பூர் எஃகுத் தொழிலாளிகள் 'சிரமவீர்' தேசீய விருதுகள் பெறுகிறார்கள்

இந்தியாவின் புதிய வீரர்களை — டெக்னீஷியன்களையும், ஆலைத் தொழிலாளிகளையும்—பெருமைப்படுத்துவதற்காக மார்ச் 1966ல் முதலாவது விழாவை நமது அரசாங்கம் நடத்தியது; 'சிரமவீர்' தேசீய விருதுகள் வழங்கி அவர்களைப் பாராட்டியது. குறைந்த செலவில் அதிக உற்பத்திக்கு வழி செய்யும் யோசனைகளுக்கு ஊக்கம் அளிப்பதற்காக ஒவ்வொரு ஆண்டும் இப்பரிசுகள் வழங்கப்படும்.

இந்த ஆண்டு வழங்கப்பட்ட 27 விருதுகளில் இரு முதற் பரிசுகள் உட்பட ஐந்து பரிசுகள் டாடா ஸ்டீல் தொழிலாளிகளுக்குக் கிடைத்திருக்கின்றன. இந்நாட்டிலேயே அதிகமான விருதுகள் பெற்றுள்ள தனியொரு ஸ்தாபனம் இதுதான்.

ஜம்ஷெட்பூர்த் தொழிலாளிகள் கடந்த 20 ஆண்டுகளில் 12000க்கும் அதிகமான யோசனைகளைத் தெரிவித்திருக்கிறார்கள். அவற்றுள் கிட்டத்தட்ட 1000 யோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. உற்பத்தியைப் பெருக்குவதற்கும், தொழிற்சாலை விபத்துக்களைத் தவிர்ப்பதற்கும், தொழிற்சாலையில் கிடைக்கும் பொருள்களையும், அனுபவ அறிவையும் கொண்டு சுயதேவையைப் பூர்த்தி செய்வதற்கும் இக்கருத்துக்கள் வழிவகுக்கின்றன.

உற்பத்தியின் ஆரம்ப நிலையில் இருந்தே பல முயற்சியை ஊக்குவிக்கும் கருத்தரங்குத் திட்டத்திற்குத் (Suggestion Box Scheme) தாம் முன்னோடியாக அமைந்தது குறித்து டாடா ஸ்டீல் ஸ்தாபனத்தார் பெருமிதம் அடைகிறார்கள். இத்திட்டம் இப்பொழுது இந்தியாவில் உள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும் நடைமுறைக்கு வரத் தொடங்கியுள்ளது.

**டாடா ஸ்டீல்**



The Tata Iron and Steel Company Limited

JWT TN 3274A

"அந்தப் பெட்டியிலேயே வைத்து விட்டாயல்லவா?"

"ஆமாம், என்னுடைய பெட்டியில் வைத்திருக்கிறேன்."

"உனக்கு அது வேண்டாண்டா! சனியனைத் தூர எறிந்துவிடு. அதை முன்பே ஆற்றில் வீசி எறிந்துவிடத்தான் நினைத்தேன். ஆனால், உன் அப்பாவுடைய துப்பாக்கி. தூர எறிய மனமில்லை. பழைய பெட்டிக்குள் போட்டு வைத்தேன்."

"சரிதானே, என் அப்பா சொத்து எனக்குக் கிடைத்திருக்கிறது. அதோடு பாரதியார் எழுதிய கவிதையும் பெட்டிக்குள் இருந்தது" என்றான் ரங்கமணி.

"அதைப் போய்ப் பார்த்து விட்டாயேடா! இந்த மாதிரி விஷயமெல்லாம் உன் அப்பாவோடு போகட்டும். நீயாவது ஒழுங்காக இரேன்" என்று கிழவர் கெஞ்சினார்.

"நான் சும்மா இருக்க முடியுமா தாத்தா? சும்மாதான் இருக்கலாமா? அப்பா விட்டுச் சென்ற பணியைத்தானே தொடருகிறேன். வெள்ளைக்காரனை அடித்து விரட்டும் வரை எனக்கு வேறு எதிலும் கவனம் கிடையாது."

"நமக்கு எதுக்கடா இந்த வம்பெல்லாம்?"

"இந்தப் பணியில் உங்களுக்குத்தான் முக்கிய கடமை இருக்கிறது. நீங்களே இப்படி ஒதுங்கினால்....? உங்கள் மகனைப் பழி வாங்கினானே வெள்ளைக்காரன், அதற்குப் பழி வாங்க வேண்டாமா? தாத்தா, நீங்கள் மட்டும் அன்று நடந்த போலீஸ் தடியடியைப் பார்த்திருந்தால், வெள்ளைக்காரனின் வெறியாட்டத்தில் என் அப்பா மண்டை பிளந்து கீழே சாய்ந்ததைப் பார்த்திருந்தால், இப்படிப் பேசுவீர்களா? நான் பார்த்தேன். என் கண்ணாலேயே பார்த்தேன். அதற்குப் பழி வாங்கும் வரை எனக்கு நிம்மதி கிடையாது. அப்பாவுக்கு நான் செய்ய வேண்டிய ஒரே கடமை, இதுதான்!" என்றான் ரங்கமணி, ஆவேசத்துடன். கிழவர் அதிர்ந்து உட்கார்ந்துவிட்டார். ரங்கமணியின் பிடிவாதம் அவரை வாட்டியது. மகனை இழந்த மாதிரி பேரனையும் இழக்க வேண்டி வருமோ என்ற பயம் தான் அவரை அழுத்திக் கொண்டிருந்தது. கிழவர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். கடந்த கால நினைவு பயத்தை மூட்டியது. "இந்தத் துப்பாக்கி அப்பாவுக்கு ஏது?" என்று கேட்டான் ரங்கமணி. முப்பது வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவத்தைக் கிழவர் கூறினார்.

அந்தக் காலத்தில் திருநெல்வேலியில் மக்கள் கொதிப்படைந்திருந்தனர். ஸப்-கலெக்டராயிருந்த ஆஷ் கலெக்டராகப் பதவி ஏற்றிருந்தான். அவனைப் பழிவாங்கப் பலர் துடித்தனர். ஒரு நாள் சாமிநாதன், ஒரு துணியில் சுற்றியபடி இரண்டு கைத் துப்பாக்கிகளைக் கொண்டு வந்தார். அதைப் பார்த்துவிட்ட நெல்லையப்பபிள்ளை பதறிப் போய் விட்டார்.

"இதெல்லாம் எதுக்குடா?" — நடுங்கிக் கொண்டே கேட்டார்.

"வெள்ளைக்காரப் பயல்களை இந்த மண்ணிலிருந்து விரட்ட!" என்று கூறிவிட்டுச் சிரித்தார் சாமிநாதன். மகனின் பிடிவாதத்தை உணர்ந்திருந்த நெல்லையப்ப பிள்ளைக்குக் கடவுள் மீது பாரத்தைப் போடுவதைத் தவிர வேறு வழியில்லை.



அவன்: ஆயிரம் வருடங்களுக்கு முன் பிறந்திருந்தால்?
அவள்: பிறந்திருந்தால்?....
அவன்: சரித்திரப் பாடங்களைப் படிக்க வேண்டிய தொல்லை இருந்திருக்காதே. — ஏ. கே. கந்தசாமி

ஒரு நாள் நெல்லையப்பபிள்ளை, வீட்டிலிருந்த போது சாமிநாதன் வியர்த்து விறுவிறுக்க, கலந்த தவிப்புடனும், மருண்ட பார்வையுடனும் வீட்டுக்குள் ஓடி வந்தார். அவருடைய நிலையைப் பார்த்துப் பதறிப் போனார் நெல்லையப்பபிள்ளை.

"என்னடா, என்ன விஷயம்? ஏன் இப்படிப் பேயறைந்தவன் மாதிரி வந்து நிற்கிறாய்?" என்று பதற்றத்துடன் கேட்டார் நெல்லையப்பபிள்ளை.

"ஒழிந்தான் வெள்ளைக்காரக் கலெக்டர்" என்று கூறிப் பயங்கரமாகச் சிரித்தார்.

"அடப்பாவி, சுட்டுக் கொன்று விட்டாயா?" — கிழவர் நிலைகொள்ளாமல் தவித்தார்.

"நான் இல்லை. அந்தப் பாக்கியம்தான் எனக்குக் கிடைக்கவில்லையே. என் நண்பன் செய்து முடித்து விட்டான்" என்றார் சாமிநாதன். நெல்லையப்பபிள்ளை பீதியினால் நடுங்கினார். எந்தச் சமயத்திலும் தன் வீட்டைப் போலீஸ் சோதனையிட வரலாம், சாமிநாதனையும் கைது செய்யலாம் என்று பயந்தார். பரபரப்புடன் ஓடிப் போய் அலமாரியைத் திறந்து பார்த்தார். உள்ளே துப்பாக்கிகளைக் காணவில்லை. திகைப்புடன் திரும்பினார்.

"அப்பா, ஒரு துப்பாக்கி ஆஷ் துரையைப் பரமண்டலத்துக்கு அனுப்பி விட்டது. இன்னொன்று என் மடியில் பத்திரமாயிருக்கிறது" என்று கூறி உரக்கச் சிரித்தார் சாமிநாதன். அவர் வாயைத் தம் கையினால் பொத்தினார் நெல்லையப்பபிள்ளை.

''இரைந்து பேசாதேடா! இன்னும் என்னவெல்லாம் நடக்குமோ!'' என்று கூறிக் கொண்டே சாமிநாதனின் மடியிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கிக் கொண்டு போய்ப் பின்புறத்தில் உள்ள மாமரத்தின் அடியில் புதைத்து வைத்தார்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு அவர் வீட்டைச் சோதனை போட வந்த போலீஸ்காரர்கள், தடையம் ஏதும் கிடைக்காமல் ஏமாந்து திரும்பினர். ஆஷ் கொலை நடந்து பத்து நாட்களுக்குப் பிறகு புதுச்சேரியிலிருந்து சாமிநாதன் பெயருக்கு ஒரு தபால் வந்தது. உறையைப் பிரித்தபோது, உள்ளே இரண்டு துண்டுக் கடிதங்களில் கவிதை மட்டும் எழுதியிருந்தது. பாரதியார் அனுப்பியிருந்தார். சில மாதங்களுக்குப் பிறகு மரத்தடியில் புதைத்திருந்த துப்பாக்கியையும், அந்தக் கவிதையையும் ஒரு பழைய பெட்டிக்குள் போட்டு ஒரு மூலையில் வைத்துவிட்டார் நெல்லையப்ப பிள்ளை.

பழைய சம்பவத்தைக் கூறி முடித்துவிட்டு ரங்கமணியை உற்றுப் பார்த்தார் நெல்லையப்பபிள்ளை.

''அந்த நாளிலும் எனக்கு நிம்மதியில்லை; இந்த நாளிலும் நிம்மதியில்லை!'' என்று முனகிக் கொண்டே பெருமூச்சு விட்டார்.

ரங்கமணி வந்து மூன்று நாட்கள் ஆயின. கிழவர் தம் ஆசைகள் அனைத்தையும் சொல்லித் தீர்த்தார். ரங்கமணி கேட்டான். ஆனால் ஒன்றையாவது நிறைவேற்றி வைப்பதாக அவன் வாக்குக் கொடுக்கவேயில்லை. கிழவரின் பேச்சுக்குத் தடையில்லாமல் கேட்டுக் கொண்டிருந்தான். அவருக்குத் தெரியும், தம் ஆசைகள் நிறைவேறப் போவதில்லை என்று. இருந்தாலும் அவைகளை வாய்விட்டுச் சொல்லியாவது தீர்த்துக் கொள்ளுவோமே என்ற ஒரு நைப்பாசைதான்.

மூன்றாம் நாள் ரங்கமணி ஊருக்குப் புறப்பட்டு விட்டான். தனக்கு வேண்டிய சாமான்களைப் பெட்டியில் அடுக்கிக் கொண்டிருந்தான். அவனுடைய பழைய பெட்டி ஒன்றைத் திறந்து சில புத்தகங்களைத் தேடி எடுத்தான். அப்போது புத்தகங்களுக்கு இடையே ஏதோ ஒன்று பளபளத்தது. புத்தகங்களை விலக்கி அதை எடுத்தான். தந்தத்தினால் செய்யப்பட்ட இரண்டரை அங்குல நீளமுள்ள இயேசுநாதரின் உருவம் அது. சிலுவையில் இயேசுநாதர் மாட்டப்பட்டிருப்பது போல் பொம்மை செதுக்கப்பட்டிருந்தது. மலையாளத்துக் கலைஞர் ஒருவரின் கைத்திறன் அதில் நன்கு புலப்பட்டது. கைகள் இரண்டையும் விரித்து, தலை தொங்கும் பாவனையில், சாந்தமே உருவமாகச் சிலுவையில் காட்சியளித்த இயேசுவின் உருவத்தை உற்றுப் பார்த்தான் ரங்கமணி. அந்தத் தந்தச் சிலை அவனுக்குக் கிடைத்த சம்பவம் நினைவில் வந்ததும் முகத்தைச் சுளித்தான். அந்தச் சிலுவைப் பொம்மையை அவனுக்குக் கொடுத்தவரைப் பற்றிய நினைவே கசந்தது. அதைத் தூர எறிந்துவிட நினைத்தான். பிறகு என்ன நினைத்தானோ, தன்னுடைய பிரயாணத்துக்கு எடுத்து வைத்த பொருள்களோடு சேர்த்துப் பெட்டிக்குள் வைத்துக் கொண்டான். அந்தச் சமயத்தில் நெல்லையப்பபிள்ளை அங்குவந்தார்.

''மூன்று நாள்கூடத் தங்கவில்லையே, அதற்குள் என்னதான் அவசரமோ? வெள்ளைக்காரன் சுதந்திரத்தைக் கையில் வைத்துக் கொண்டு உனக்காகக் காத்திருக்கிறானே?'' என்று எரிச்சலுடன் கேட்டார் கிழவர். ரங்கமணி சிரித்தான்.

''வெகுதூரம் போகவில்லை. திருநெல்வேலிக்குத்தான் போகிறேன். உங்களுக்குத் தான் துணைக்குச் சேது இருக்கிறானே!'' என்றான் ரங்கமணி.

''சமையல்காரன் துணை ஒரு துணையா? ஏதோ கூலிக்கு மாரடிப்பான்.... ஆமாம், துப்பாக்கியை எங்கே – ?''

''என் பெட்டிக்குள் இருக்கிறது!''

''அதையும் ஏன்டா கொண்டு போகிறாய்?'' – கிழவர் பதற்றத்துடன் கேட்டார்.

''பல இடங்களில் அலையவேண்டியிருக்கும். தற்காப்புக்குத்தான். வீணாகப் பயப்படாதீர்கள். எல்லாம் ஒரு நல்ல முடிவுக்காகத்தான்.''

''என்னவோ எனக்குப் பயமாயிருக்கிறது. கடவுள் என்ன நினைக்கிறாரோ!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டார் கிழவர்.

அன்று காலையே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டான் ரங்கமணி. வீட்டை விட்டுக் கிளம்பியதுமே அவன் உள்ளத்தில் உற்சாகம் பொங்கியது. வெகு நாட்கள் ஆசையோடு காத்திருந்த ஒரு சந்தர்ப்பத்தை நோக்கிச் செல்வதாக நினைத்தான்.

ரயில்வே ஸ்டேஷனுக்குள் நுழைந்த போது திருநெல்வேலி செல்லும் பாசஞ்சர் வண்டி, அன்று ஒரு மணி நேரம் தாமதமாக வரும் என்று தெரிய வந்ததும், பிளாட்பாரத்தில் கிடந்த ஒரு பெஞ்சியில் போய் அமர்ந்து கொண்டான்.

தன்னையே நினைத்து உள்ளூறச் சிரித்துக் கொண்டான். இது என்ன பயணம்? இதன் முடிவு என்ன? கண்களைக் கட்டிக் காட்டில் விட்டது போன்ற உணர்வு, திடீரென்று அவனைக் கவ்விக் கொண்டது. செல்லும் திசை, லட்சியத்தின் வெற்றியில் கொண்டு போய் நிறுத்துமா? ஒன்றுமே புரியவில்லை. இருந்தாலும் உள்ளத்தின் அடித்தளத்தில் நம்பிக்கை ஒட்டிக் கிடந்தது.

அவனுடைய கனவுகளையெல்லாம் நனவாக்கிவிடலாம் என்றுதான் ஆசை காட்டினார் சர்தார் சொக்கலிங்கம்பிள்ளை. அவரைக் கண்டதுமே இவனுக்கு நம்பிக்கை விழுந்து விட்டது.

சர்தார் சொக்கலிங்கம்பிள்ளைக்கு அறுபது வயதுக்கு மேலிருக்கும். ஆனாலும் முகத்தில் நல்ல தேஜஸ். கண்களின் தீட்சண்யம், ரங்கமணியையே பணிய வைத்து விட்டது. முகத்தில் நரைத்த மீசைதான் என்றாலும், பரந்த அவருடைய முகத்துக்கு அது அழகையும், கம்பீரத்தையும் கொடுத்தது. முன்பின் பழக்கம் இல்லாவிட்டாலும் அவரைத் தொடருவது என்ற முடிவுடன் புறப்பட்டு விட்டான் ரங்கமணி.

பிளாட்பாரத்துக்குள் நுழைந்த ரயில் ரங்கமணியின் சிந்தனையைக் கலைத்தது.

(தொடரும்)

## சுவரிலிருந்து கூரை வரை,
## நிலையான பொருள்களி
## லிருந்து அலங்காரங்களுக்கும்

# ஏரோப்ளே
# சாம்ப் ப்ளைவுட்ஸ்

## அழகாக சிக்கனமாக இலாபகரமாகச் செய்ய ஏற்றவை

ஏரோப்ளே சாம்ப் ப்ளைவுட்ஸ் சிற்பிகளுக்கும், வீடு கட்டுபவர்களுக்கும் டிஸைன் செய்ய பலவிதத்தில் உதவுகிறது. சுவருக்கும், கூரைக்கும், மரச்சட்டம் செய்வதற்கும், நாற்காலிகள், மேஜைகள், கட்டில்கள், ட்ரெஸிங் மேஜைகள், அலமாரிகள், சாமான் வைக்கும் சிறு அறைகள், புத்தக ஷெல்புகள் முதலிய சாதனங்கள் எல்லாவற்றிற்கும்—சாம்ப் ப்ளைவுட்டின் அழகான க்ரேயின்களிலும் தனிப்பட்ட ஷேடுகளும் நிறங்களும் கிடைக்கின்றன. இவையெல்லாம் டெஹ்ராடூனிலுள்ள FRI னாலும், கல்கத்தா N.T.H னாலும் அங்கீகாரம் பெற்றவை.




தயாரிப்பவர்கள்:

வுட்க்ராப்ட்ஸ் அஸ்ஸாம்

ப்ரொ: ஜே ஸ்ரீ ம அண்ட் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,

இந்தியா எக்ஸ்சேஞ், கல்கத்தா-1






# சேவல் கண்ட தேர்தல்

ஹிந்தி: சரத் ஜோஷி

தனது கூட்டிலிருந்து வெளியே வந்த அது, வலது கண்ணைச் சாய்த்து வானத்தை நோக்கியது. வெண் நுரை போன்ற மேகங்கள் குழுமி யிருந்தன. இன்னும் நிலம் தெளிந்தபாடில்லை. குளிர்ச்சியான சூழ்நிலை. கதகதப்பை நாடிப் புழுக்கள் நெளியும் வேளை. ஆசிரியர் ஐயா முத்து தமது படுக்கையில் எழுந்து உட்கார்ந்து திருப்பள்ளி எழுச்சி பாடலானார். இருள் பிரிந்து அந்த அறையில் ஒளி பரவ இன்னும் நேரம் பிடிக்கும். அவரது மனைவியோ முன் இரவின் நினைவு மயக்கம் முகத்தில் தாண்டவ மாடத் தூக்கக் கலக்கத்தில் புரண்டு படுத்த வாறிருந்தாள்.

வெளியே வந்த சேவல் 'கொக் கொக்' என ரகசியக் குரல் கொடுத்துத் தன் பெட்டையை அழைத்தது. பெட்டையோ முட்டையிட்ட களைப்பில் மெய்ஞ்ஞான முடிச்சை அவிழ்க்க முனைபவர்களைப் போன்று சோம்பி உட்கார்ந்திருந்தது. இரண்டு குழந்தைகளைப் பெற்றுவிட்ட இந்தக் காலத்துப் பெண்கள் எப்படி மெருகு அழிந்து கவர்ச்சி குன்றிவிடுகிறார்களோ, அப்படியே தனது பெட்டையும் ஆகிவிட்டதாகச் சேவலுக்கு ஒரு நினைப்பு. இதற்குக் காரணம் சூழ்நிலையோ, பருவ நிலையோ, சேவலுக்குத்தான் வெளிச்சம்.

தனது சிவப்புக் கொண்டையை லாகவமாக ஆட்டிக் கொண்டு இடுப்பை நொடித்து ராயசமாக நடந்த வண்ணம் அது, தினமும் தான் போகும் குப்பை மேட்டை நோக்கிப் போயிற்று. அங்குதான் அதற்கு இளம் வெய்யிலோடு புதிய தானிய மணிகளும் கிடைப்பது வழக்கம். கொண்டையைச் சிலிர்த்துக் கம்பீரமாக ஒருமுறை கூவிய அது எதிர்ப்புற மிருந்த சுவரைப் பார்த்தது. அதன் பார்த்த கண் பார்த்தபடியே நிலைத்து விட்டது.

ஒரு போஸ்டரில் சேவலின் படம் அச்சிடப் பட்டிருந்தது. அதன் கீழே '...க்கு வோட்டுப் போடுங்கள்' என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்த சேவலுக்கு ஒரே பிரமிப்பு. சேவலோடு என்ன கேலி வேண்டிக் கிடக்கிறது? எந்த மடையன் அதன் புகைப் படத்தை எடுத்து அச்சடித்து இங்கு ஒட்டியிருக்கிறான்? துளிக்கூடச் சந்தேகம் இல்லை. இதே சேவலின் படம்தான். இறக்கை, கால்கள், கொண்டை எல்லாமே அதன் அச்சு. அதோடு கீழே '.....வோட்டுப் போடுங்கள்' என்று வேறு எழுதியிருக்கிறார்கள். ஆமாம், வோட்டு என்றால் என்ன? சேவல் மீண்டும் குரல் கொடுத்துத் தன் பெட்டை நாயகியை அழைத்தது. கற்பின் நல்லாளின் வேகத்தோடு ஓடி வந்த பெட்டை கேள்விக் குறியில் 'போஸ்' கொடுத்து அதன் அருகில் நின்றது.

''பார்த்தாயா? இது என்ன?'' என்று கேட்டது சேவல்.

''உங்கள் படம்!...'' பிறகு நாணிக் கோணிக் கொண்டு ''நன்றாகத்தான் இருக்கிறது!'' என்று முடித்தது பெட்டை.

''நன்றாயிருக்கட்டும். வேண்டாமென்று கூறவில்லை. ஆனால் யார் ஒட்டினார்கள் இதை?'' என்று கடித்தது சேவல்.

பெட்டை நடுநடுங்கிப் போய்விட்டது.. ''நான் இல்லே!'' என்று நாடி தளர்ந்து சொல்லிற்று.

''அது எனக்குத் தெரியும். இதன் கீழே என்ன எழுதியிருக்கிறது, பார்த்தாயா?''

பெட்டை தலையைக் குனிந்து கொண்டது.

''அடி மண்டு, 'மண்டுச்சாமி' என்று எழுதியிருக்கிறது. அதற்குக் கீழே '...வோட்டுப் போடுங்கள்' என்று குறிப்பிட்டிருக்கிறது.''

''ஆமாம். வோட்டென்றால் என்னவாம்?'' கேள்விக்குரிய தொடிப்போடு பெட்டை மீண்டும் நின்றது.

சேவல் யோசனையில் ஆழ்ந்தது. பிறகு, ''ஏதாவது மருந்தாயிருக்குமோ? இதைச் சாப்பிட்டால் ஒருவேளை நீ அதிக முட்டை இடுவாயோ?'' என்றது.

''ஹூக்கும். எப்போதுமே நீங்கள் இப்படித்தான். நான் என்ன குறைவாகவா முட்டை யிடுகிறேன்? எனக்கு எதற்கு இந்த மருந்தும், மாயமும்?'' கோபித்துக் கேட்டது பெட்டை.

''ஏனடி இந்தக் கோபம் என் ராசாத்தி? நான் வேடிக்கைக்குச் சொன்னால்...''

''எதற்கெடுத்தாலுமா வேடிக்கை? ஆமாம், வோட்டு என்றால் என்ன? இன்னும் நீங்கள் சொல்லவில்லையே அதை!''

''எனக்குத் தெரிந்தால் நான் ஏன் உன்னைக் கேட்கிறேன்? ஆனால் ஒன்று. இது நல்லதற்குக் காலமில்லே என்று மட்டும் எனக்குப் படுகிறது. ஏதோ ஓர் ஆபத்துத்தான் நம்மைச் சூழ்ந்திருக்கிறது. ஒருவேளை நமது கோழி இனத்தையே தானிய மணிகள் நிறைந்த இந்த உலகத்திலிருந்து அகற்றிடச் செய்யும் சூழ்ச்சியாயிருக்குமோ?''

தமிழ் :

**ரா.வீ.**



''இராது, இராது! கழுவுங்கள் வாயை! எதற்கு இப்படியெல்லாம் அச்சானியம் போலப் பேசுகிறீர்கள்?'' பெட்டை அழமாட்டாக் குறையாகக் கேட்டது.

''அப்படி இல்லேயென்றால் இது என்னவாயிருக்கும்? மனிதன் எப்பொழுதாவது கோழிகளைப் புரிந்து கொள்வான், அதற்கு மரியாதையும் மதிப்பும் கொடுக்க முன்வருவான் என்று நீ எண்ணுகிறாயா? என்னைக் கேட்டால், அவனுக்கு நீ இடும் முட்டைகள் தான் தேவை! மற்றபடி எதுவும் வேண்டியதில்லே'' என்றது சேவல்.

பெட்டைக்கு அழுகை அழுகையாக வந்தது. மேக மூட்டம் போட்ட இன்றைய நாள் ஏதோ ஓர் அபசகுனத்தைத் தாங்கி வந்திருப்பதாகவே அதற்குத் தோன்றியது.

இரண்டு மனிதர்கள் தன் படத்தைப் பார்த்துத் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொண்டிருப்பதைச் சேவல் கண்டது. உடனே கவனமாகக் காது கொடுத்து அவர்கள் பேச்சைக் கேட்கலாயிற்று.

''நீ போடுவாயா சேவலுக்கு வோட்டு?''

''கட்டாயம். நீ...?''

''நான் ஒருநாளும் சேவலுக்கு வோட்டுப் போட மாட்டேன். போடுபவர்களையும் ஆதரிக்க மாட்டேன்!''

சேவலும் பெட்டையும் ஒன்றையொன்று அச்சத்தோடு பார்த்துக் கொண்டன.

''இதன் பொருள் என்ன? சிலர் நமக்கு வோட்டுப்போட விரும்புகிறார்கள். சிலர் மறுக்கிறார்கள் என்பதுதானே? இதுபோன்ற இழுபறியினால் நமக்குத்தானே பெருத்த அவமானம் ஏற்படும்?'' என்ற சேவல் நீண்ட பெருமூச்சு விட்டது. ''காலத்தின் கோலம், நம்மை என்ன என்ன காட்சிகளையெல்லாம் காண வைக்குமோ?'' என்று முடித்தது.

அவை எப்பொழுதுமே மானிடர்களின் பேச்சைக் கேட்பதில் ஆர்வம் காட்டியதில்லே. ஆனால் இன்றோ நிலைமை மிகவும் மாறிப் போயிருந்தது. நான்கு ஆட்கள் எங்கேயாவது நின்று பேசிக் கொண்டிருந்தால் தீனியை மறந்து, ஆனால் தீனியைத் தேடிச் செல்வது போல் பாசாங்கு செய்தவாறு சேவல் அங்கே போய் நிற்கும். காதைத் தீட்டி வைத்துக் கொண்டு அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கேட்கும். பெட்டை பயத்தினால் எங்குமே போவதில்லே. எந்த நேரமும் அஞ்சி அஞ்சியே செத்துக் கொண்டிருக்கும். தன் கூட்டில் அமர்ந்து 'என்ன ஆகுமோ, என்ன ஆகுமோ?' என்று சிந்தித்துக்கொண்டே யிருக்கும்.

அன்று சேவல் மிகவும் பரபரப்போடு தன் கூட்டுக்குத் திரும்பியது. பெட்டையைப் பார்த்து, ''ராணி! இன்னும் நான்கு நாட்கள் தான் பாக்கியிருக்கின்றன. நாம் ஒருவரையொருவர் நன்றாகப் பார்த்துக் கொண்டு விடுவோம். அன்பு செலுத்திக் கொள்வோம். வியாழனன்று வோட்டுப் போடப் போகிறார்களாம்'' என்றது.

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?''

''கேட்டதைத்தான் சொல்கிறேன். தெருமுனையில் ஒரு கூட்டம் நடந்தது. அதில் ஓர் ஆள் காது செவிடுபட உரக்கக் கத்திக் கொண்டிருந்தான். 'நி னை வி ரு க் க ட் டு ம்.

வியாழனன்று வோட்டு. சேவலுக்குப் போட வேண்டும். மறந்து விடாதீர்கள்!' என்று.''

இரண்டும் இப்படிப் பேசிக் கொண்டிருந்த அதே நேரத்தில் அந்தப் பக்கமாக ஓர் ஊர்வலம் வந்தது. அது போட்ட கூச்சல் செவியைப் பிளந்தது.

''வோட்டு யாருக்கு?''

''சேவலுக்கு!''

சேவலும் பெட்டையும் பயந்து போய்க் கூட்டுக்குள் புகுந்து கொண்டன. இரண்டுக்கும் ஒரே குலைநடுக்கம்! இரண்டும் நெருக்கியடித்துக் கொண்டு ஒன்றை யொன்று அணைத்தவண்ணம் உட்கார்ந்தன.

ஊர்வலம் நகர்ந்தது. அது போட்ட சத்தமும் சிறுகச் சிறுகக் காற்றில் கலந்து கரைந்து கடைசியில் அடங்கியும் விட்டது. சிறிது நேரத்துக்குப் பின்னர் சேவல் மெதுவாகக் கூட்டிலிருந்து தலையை நீட்டி வெளியே எட்டிப் பார்த்தது. சூழ்நிலை அமைதியாகக் காட்சி தந்தது. கும்பல் கண் பார்வையிலிருந்து மறைந்திருந்தது.

வியாழக்கிழமை. இல்லை, முதல் நாள் புதன் கிழமை இரவு.

சேவல் பெட்டை இரண்டுக்குமே தூக்கம் பிடிக்கவில்லை. வான வீதியிலே தேர்தல் என்னும் பயங்கரப்பேய் சுற்றிக் கொண்டிருப்பதாக நினைப்பு. கண்ணீரில் மூழ்கிய விழிகளோடு இரண்டும் ஒன்றையொன்று பார்த்துப் பெருமூச்செறிந்து கொண்டிருந்தன.

''எங்காவது பேசாமல் கண்காணாத இடத்துக்கு ஓடிவிட்டால் என்ன?'' என்றது பெட்டை மெதுவான குரலில்.

''கண்காணாத இடம் என்று எங்காவது இருக்கிறதா? கோழிகள் சூழ்நிலைக்குப் பயந்து என்றைக்காவது எங்கேயாவது ஓடியதுண்டா? ஒளிந்ததுண்டா? இன்றுவரை கண்டும் கேட்டுமிராத நிகழ்ச்சியாயிற்றே! அப்படி இருக்கும்போது நாம் மட்டும் ஏன் ஓடி ஒளிய வேண்டும்? அதோடு நாளைக்கு உலகம் முழுவதுமே வோட்டுப் போடப் போகிறது. ஓடுவதென்றால் நாம் எங்கே ஓட முடியும்?'' சேவல் நிலைமையை விளக்கியது.

இரவு முழுவதும் பெட்டை படைத்தவனை வேண்டியது: ''கடவுளே! இந்த வோட்டிலிருந்து எங்களைக் காப்பாற்றேன்!''

கதிரவன் எழுந்தான். ஒளிக் கதிர்கள் பரவின. பள்ளி யெழுச்சி பாடப்பட்டது. ஆசிரியரின் மனைவி எழுந்தாள். செட்டியார் மனைவி குழந்தையைச் சாக்கடைக்கருகில் கொண்டு போய் உட்கார வைத்தாள். மக்களின் சலசலப்பும் கலகலப்பும் தொடங்கின. எத்தனையோ முறைகள் என்ன என்னவோ பேச்சொலிகள் காதுகளில் விழுந்தன.

''யாருக்குப் போட்டாய் வோட்டு?''

''சேவலுக்கு!''

''நானும் சேவலுக்குத்தான் போடப் போகிறேன்!''

சேவல் தனக்குள் புகைந்தது: ''என்னெதிரே வோட்டு, சீட்டு என்று எந்தப் பொருளுமே விழவில்லையே! இது என்ன வேடிக்கை! என்ன கபட நாடகம்! என்ன ஏமாற்று வித்தை!''

ஆத்திரம் குமிழியிட அது கூட்டிலிருந்து வெளியேறியது.

பெட்டை அதைத் தடுக்கப் பார்த்தது. ஆனால் அது அங்கு நின்றால்தானே? ஒரு சடசடப்பில் ஒன்பது கஜ தூரம் தாண்டிச் சென்று அது உரக்கக் குரல் கொடுத்தது.

'நான் இங்கே இருக்கிறேன்' என்று பொருள் அந்தக் 'கொக்கரக்கோ'வுக்கு.

ஆனால் மறுபக்கத்திலிருந்து பதில் இல்லை.

மக்களின் நடமாட்டம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. சேவலின் செவிகளிலும் தனக்கு வோட்டுப் போடும் செய்தி விழுந்து கொண்டேயிருந்தது. ஒன்றும் புரியாத வேதனையோடு அது தெருவின் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குப் போய்ப் போய்த் திரும்பிக் கொண்டிருந்தது.

'' 'வோட்டு' என்றால் என்ன? அது எனக்கு எங்கே கிடைக்கிறது? 'வோட்டு, வோட்டு' என்று ஜபம் செய்கிறார்களே, அது மனிதர்களின் முட்டாள்தனமா, பைத்தியக்காரத்தனமா அல்லது ஏமாற்றுச் செயலா? சேவலைப் போலவே சேவலின் மனமும் 'வோட்டு' என்னும் அந்த ஒரு சொல்லையே சுற்றிச் சுற்றி வளைய வந்து கொண்டிருந்தது.

பெட்டைக்கும் ஒன்றும் வேண்டிக் கிடக்கவில்லை. பசி, தாகம் எதுவும் தெரியவில்லை. தானிய மணிகளையோ, புழுப் பூச்சிகளையோ ஏறெடுத்தும் பாராமல் இரண்டும் இங்கு மங்கும் அலைபாய்ந்து கொண்டிருந்தன.

மாலை முடிய மக்களிடையே வோட்டுப் பேச்சுத்தான்! பொழுதேறப் பொழுதேற அதே பேச்சு கூச்சலாக வளர்ந்தது.

சேவலுக்கே அதிக வோட்டுக்கள் கிடைத்திருப்பதாக மக்கள் பேசிக் கொண்டிருந்ததை இரண்டுமே கேட்டன. கிடைக்காத ஒன்றைக் கிடைத்ததாகக் கூறும் இந்த மக்களுக்கு எதிராக இரண்டுமே ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கின. எனவே, மனிதச் சந்தடியை அமுக்கிக் கொண்டு அவற்றின் குரல் ஒலித்தது.

தெரு முழுவதும் சந்தோஷ ஆரவாரம் எழுந்தது. சேவலுக்கும் பெட்டைக்கும் சொந்தக்காரர் வீடோ விழாக் கோலமே பூண்டு விட்டது. ஏனெனில், அவற்றின் சொந்தக்காரர்தான் அன்றையத் தேர்தலில் வெற்றி சூடிக்கொள்ளப் போகிறார். அவருடைய சின்னமான சேவலுக்குத்தான் பெரும்பான்மையான வோட்டுக்கள் கிடைத்திருந்தன. அவருக்காக உழைத்தவர்கள்; அடிவருடியவர்கள் எல்லோரும் விருந்துக்கு அடிபோட்டுக் கொண்டிருந்தனர்.

கையெழுத்து மறையும் நேரமாயிற்று. சேவலும் பெட்டையும் களைத்துப் போய்த் தங்கள் கூட்டை அடைந்தன. சேவலுக்கு இன்னும் பரபரப்பு அடங்கவில்லை. ஆனால் பெட்டையோ பத்திரமாகக் கூட்டை அடைந்ததை எண்ணி ஆண்டவனுக்கு நன்றி செலுத்திக்கொண்டிருந்தது.

இந்த வேளையில்தான் அட்டகரி பிடித்த தலைப்பின்னி ஒருவன் அந்தப் பக்கமாக வந்தான். அவன் சேவல் சின்னக்காரரின்

வீட்டில் சமையல் வேலை பார்ப்பவன். வந்தவன் சேவலின் கால்களைப் பிடித்துத் தலைகீழாகத் தூக்கிக் கொண்டு கொல்லைப் புறமாக உள்ளே சென்று விட்டான்.

பெட்டை அவனுக்குப் பின்னால் ஓடி அலறியது.

''இதுதான் வோட்டா? என்ன செய்யப் போகிறாய்? என்னை என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டு அவன் கையில் துடிதுடித்தது சேவல்.

யாரும் எதையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இரவுச் சமையல் தேர்ந்தெடுத்த சமையலாக அமைந்தது. பிளேட்டுகளில் அவற்றை வைத்துப் பரிமாறிய அழகை இன்றும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும், என்றும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். தேர்தல் விருந்தாயிற்றே!

இரவு முழுவதும் பெட்டை அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருந்தது. வோட்டையும் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தது.

ஃ ஃ ஃ

இன்னும் சுவரொட்டி கிழியவில்லை. தினமும் பெட்டை குப்பை மேட்டை நோக்கிப் போகிறது. சுவரொட்டியில் அச்சடிக்கப் பட்டிருந்த தன் மணாளச் சேவலின் 'கொழுகொழு' உருவத்தைக் கண்டு என்ன நினைப்பில் லயிக்கிறதோ, தெரியவில்லை! அவ்விடத்தை விட்டுத் திரும்ப அதற்கு இன்றும் வெகு நேரம் பிடிக்கிறது.

('ஞானோதயா'விலிருந்து எடுத்தது)

# கிரிக்கெட் தெரியாக் கிராமத்துக்காரர்!

கோ. கந்தசாமி





வெய்யிலில் ஆடும் ஆட்டத்தைப் பார்க்க
வேகமாகவே ஓடுகிறார்
கைகளில் தோளினில் பையினை மாட்டி
ஏக மாகவே கூடுகிறார்!

சரியாகவே க்யூவில் நின்றுமே
சடுதியாய் உள்ளே செல்கிறார்!
காரில் வந்தோரும் காத்துக் கிடந்தே
கடலைப் பட்டாணி மெல்லுகிறார்!





தாட்டும் பூட்டும் போட்டுக் கொண்டு
அழகாய் வந்து ஆடுகிறார்!
பேட்டைப் பார்த்துப் பந்தை வீசி
ஓட்டமாய் ஓடிப் போகிறார்!

மட்டையை எடுத்துப் பந்தை அடித்தால்
மாயமாய்த் துள்ளித் தாவுகிறார்!
தட்டினைப் பந்தை டக்கெனப் பிடித்தால்
சபாஷ் என்றுமே கூவுகிறார்!





சிக்ஸர் என்றும் சக்ஸஸ் என்றும்
சிரித்தே கையைத் தட்டுகிறார்!
விக்கெட் விழுந்தால் அவரைப் பார்த்து
விதவிதமாகத் திட்டுகிறார்!

கிரிக்கெட் பார்க்கும் ஜனங்களும் என்னைக்
கேலியாய் ஏதோ பேசுகிறார்!
மறக்காதேப்பா முண்டாசு என்று
மடமடவெனவே ஏகுகிறார்!

[ADVT-Y68-M5-45-7

# சிவனருட் செல்வர்



திருமுருக கிருபானந்தவாரியார்

## 39. காரைக்கால் அம்மையார்

தேவர்கள், மனிதர்கள் முதலிய எல்லாருக்கும் பிறப்பு இறப்பு உண்டு. பிறப்பும் இறப்பும் இல்லாதவர் சிவபெருமான் ஒருவரே. ''அஜம் த்ருவம்'' ''அஜாத இத்யேதவம்'' என்பன சுருதி வாக்கியங்கள். ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்பது இளங்கோ அடிகள் வாக்கு. ''பிறப்பிலி இறப்பிலி பிறங்கலரசன்றன்மகளார்'' என்பர், வில்லிப்புத்தூரார்.

இத்தகைய சிவபெருமானுடைய திருவாக்கினால் 'அம்மையே' என்று அழைக்கப்பெற்ற அரும் பெரும் சிறப்புடையவர் காரைக்காலம்மையார் ஒருவரே.

நிறைந்த வளங்களுடன் திகழும் பதி காரைக்கால். அது துறைமுகப் பட்டினம். கடல் அலைகள் சங்குகளைச் சுமந்து வந்து கழிக்கானல்களில் உலவும் வளமை உடையது. அந்நகரில் பெரு வணிகர்களின் குடிகள் நெருங்கி வாழ்ந்தன. அறநெறியில் நின்ற அப்பெரு வணிகர்கள் குறைவில்லாத செல்வமும், சீரும் உடையவர்கள். மரக்கலங்கள் வந்து அயல்நாட்டுப் பொருள்களை இறக்குவதும் ஏற்றுவதுமாக வாணிபத்தினால் உயர்ந்து திருவளர்கின்ற அந்நகரில் வாழ்கின்ற வணிகர்கட்குத் தலைவர் தனதத்தர். நற்குணங்கட்கு உறைவிடமாகிய அவர், மகப்பேறு வேண்டித் தவம் கிடந்தார். செல்வம் நிறைந்த அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் அவரும் புரிந்த அருந்தவப் பயனால் திருமடந்தை அவதரித்தது போல் ஒரு பெண் மகவு பிறந்தது.

வணிகர் குலம் விளங்க அவதரித்த அம்மகவுக்குப் புனிதவதி என்று தாய் தந்தையர் திருப்பெயர் சூட்டினர். பஞ்சாக்கரம் மூன்று வகைப்படும். சிவபஞ்சாக்கரம், குருபஞ்சாக்கரம், பக்த பஞ்சாக்கரம் என்பனவாகும். சிவ பஞ்சாக்கரம், தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம் முத்தி என ஐவகைப்படும். குரு பஞ்சாக் கரம், ஞான சம்பந்த; நாவுக்கரசு; நம்பியாரூர; மணிவாசகர் அருணகிரி என ஐவகைப்படும், இப் பஞ்சாக்கரமே புனிதவதி என்ற திருநாமம். தனதத்தர் இம்மந்திரத்தை இடையறாது கூறியும், தமது புதல்விக்குச் சூட்டியும் நலம் பெற்றார். புனிதவதி தளர்நடை பயின்று வளர்கிற பொழுது, பாம்பணிந்த பரமனிடத்தே தணியாத காதலுடன் சிவநாமமே உச்சரித்து வந்தார். செல்வம் மிகுந்த தந்தையாராகிய தனதத்தர், சுற்றத்தினர் மகிழ அவ்வக்காலத்தில் புனிதவதிக்கு எல்லாச் சிறப்புக்களையும் செய்து வந்தார். அழகின் கொழுந்து போல் வளர்ந்த அம்மையார் விளையாடும் போதெல்லாம் சிவநாமமே பொழிந்தார்; திருத் தொண்டர்கள் வந்தால் அன்போடு தொழுவார். செவிலித்தாயாரும் தாதியரும் போற்ற அம்மையார் மங்கைப் பருவம் அடைந்தார்.

நாகைப்பட்டினத்தில் நிதிபதி என்பார் ஒருவர் இருந்தார். அவர் வணிகர் குலத்தில் புகழ் மிகுந்தவர். அவர் தமது புதல்வன் பரமதத்தனுக்குத் திருமணம் செய்ய விரும்பிப் புனிதவதியம்மையாரை மணம் பேசும்பொருட்டு அறிஞர்களைக் காரைக்காலுக்கு அனுப்பினார். அந்த அறிஞர்கள் தனதத்தருடைய மாளிகையை அடைந்ததும், அவர்களை இனிது உபசரித்து வரவேற்றார் தனதத்தர். ''தங்கள் புதல்வியை நாகை நிதிபதியாருடைய புதல்வன் பரமதத்தனுக்கு முறைப்படி மணம்

செய்து கொடுக்க வேண்டும்'' என்று வந்த மூதறிவாளர்கள் தனதத்தரை வேண்டிக் கொண்டார்கள். மாப் பிள்ளையின் குலம், குடி, கோத்திரம் முதலியன ஒத்திருந்தபடியால் பரம தத்தனுக்குப் பெண் தர இசைந்தார் தனதத்தர். உடன் திருமணத்துக்கான நன்னாள் குறிப்பிடப்பட்டது. மணம் பேச வந்தவர்கள் நாகை சென்று, நிதி பதியாரிடம் தனதத்தரின் இசைவைத் தெரிவித்தார்கள். அதனைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த நிதிபதியார், திரு மணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்தார். மாப்பிள்ளை வீட்டாரும், பெண் வீட்டாரும், சுற்றத்தார்களுக்கும், நண்பர்களுக்கும் திருமண அழைப்பு அனுப்பினார்கள். பரமதத்தனை நன்கு அலங்கரித்து மங்கல வாத்தியங்கள் முழங்கக் காரைக்காலுக்கு வந்து சேர்ந்தார்கள். வந்தவர்களையெல்லாம் இனிது வர வேற்ற தனதத்தனார், தங்குமிடம் தந்து, உணவு வகைகளையூட்டி உப சரித்தார். சுற்றத்தார்கள் மகிழப் புனிதவதியாருக்கும் பரமதத்தனுக்கும் மிகவும் சிறப்பாகத் திருமணம் நடை பெற்றது.

எல்லா வகையான சிறப்புக்களுட னும் திருமணம் இனிதாக முடிந்த பின் பெண்ணை மாப்பிள்ளை வீட்டுக்கு அனுப்புதல் வேண்டுமன்றோ? தமக்கு ஒரே புதல்வியாதலினால் தனதத்தர் மணப் பெண்ணை நாகைக்கு அனுப்ப மனமின்றித் தவித்தார். சம்பந்தி யாகிய நிதிபதியின் அனுமதி பெற்றுக் காரைக்காலிலேயே தமது மாளி கைக்கு அருகில் வேறொரு தனி மாளிகை புதுக்கி அதில் மருமகனுடன் மகளைத் தனிக் குடித்தனம் அமர்த்தினார். நிரம்பச் செல்வமும் ஆடை அணி கலன்களும், பொன்வெள்ளிப் பாத் திரங்களும், பசு, நிலம், ஏவலர்களை மகளுக்குக் கொடையாக வழங்கினார். மாமனார் தந்த செல்வத்தைக் கொண்டு பரமதத்தன் வாணிபம் செய்து, மனைவியாருடன் இனிது வாழ்ந்து வந்தான்.

கணவனாரின் இல்வாழ்க்கைக்கு அருந் துணையாய் அமைந்த அம்மையார், சிவ பெருமானுடைய திருவடிக் கீழ்மிகுந்த அன்பு கொண்டார். சிவபெருமா னுடைய திருத்தொண்டர்கட்கு நல்ல திருவமுதும், செம்பொன்னும் நவமணி களும் உயர்ந்த ஆடைகளும் அன் புடன் தகுதிப்படி தந்து சிவபக்தி செய்து கொண்டிருந்தார்.

பரமதத்தன் வழக்கம்போல் ஒரு நாள் வாணிபம் செய்யும் இடத்தில் இருந்தான். அப்போது அவனைக் காண வந்த நண்பர்கள் இரண்டு மாங்கனி களை அவனுக்குக் கொடுத்தனர். அக் கனிகள் இரண்டையும் தனது ஏவலன் மூலம் வீட்டில் வைக்கச் சொல்லி அனுப்பினான். அம்மையார் அக்கனி களை வாங்கி வைத்தார். அப்போது சிவனடியார் ஒருவர் பசியுடனும், களைப்புடனும் அம்மையார் வீட்டுக்கு வந்தார். சிவனடியாரின் உயர்வையும் அயர்வையும் கண்ட அம்மையார் அவ ருக்குத் திருவமுது படைத்து, கறியமு துக்குப் பதிலாகக் கணவனார் அனுப் பிய மாங்கனிகளில் ஒன்றை வைத்து உபசரித்தார். மூப்பும் பசியும் மிக்க அவ்வடியவர் மாங்கனியோடு இன் சுவையுண்டியை இனிது அருந்தி மகிழ்வுடன் அம்மையாரை வாழ்த்தி விட்டுச் சென்றார்.

பரமதத்தன் உச்சிப் பொழுதில் வீட்டுக்கு வந்தான். அம்மையார் அன்னம் படைத்து, எஞ்சியுள்ள மாங் கனிகளில் ஒன்றையும் வைத்தார். மனைவியார் படைத்த மதுரமாங் கனியை உண்ட பரமதத்தனுக்கு அக் கனியால் மேலும் இன்மை உண்டா யிற்று. மற்றொரு கனியையும் கொண்டு வந்து வைக்கும்படி மனைவியாரிடம் கூறினான். பாவம், என்ன செய்வார் அம்மையார்? கனி கொண்டு வருபவ ரைப் போல் உள்ளே சென்றார்; அங்கே நின்று மனம் தளர்ந்தார். உற்ற விடத்து உதவும் உத்தமராம் உமை பாகனை நினைந்தார். ''தேவ தேவா! உனது அடியார்க்கு ஒரு கனியைப் படைத்து விட்டேன். கணவனார் இரண் டாவது கனியையும் கேட்கிறார். அருட்கடலே! அடியவரின் அல்லலைக் களைய வேண்டும்'' என்று துதித்து உள்ளம் உருகினார். கண்ணுதற் பெரு மான் கருணையினால் அவர் திருக்கரத் தில் அதிமதுரக் கனி ஒன்று வந்து பொருந்தியது. அதைக் கொணர்ந்து நாயகனுக்குப் படைத்தார் அம்மை யார். அக்கனி அமுதினும் இனிதாக இருப்பதை உணர்ந்த பரமதத்தன், ''இக்கனியை எங்கே பெற்றாய்?'' என்று அம்மையாரைக் கேட்டான். 'வேறு எங்கே பெற்றாய்?' என்று நன் மகளிரைக் கேட்கக் கூடாது. பரமதத் தன் இவ்வாறு கேட்டதால் அம்மை யார் முன்னையினும் மனம் கலங்கினார். திருவருளின் திறத்தை வெளிப்படுத்த வும் கூடாது; அதே சமயம் பொய்மை

புகல்வதும் கூடாது. இதனால் உள்ளம் உணர்ந்த அவர் நிகழ்ந்ததைத் தெரிவிப்பதுவே தக்கதென்று கருதினார். அடியார்க்கு ஒரு கனியைப் படைத்த பின்னர், இறைவரை வேண்டக் கண்ணுதற்பெருமான் கனியருளியதைக் கூறியருளினார். திருவருளைத் தெளியாத பரமதத்தன், ''சிவபெருமான் திருவருளால் இக்கனி வந்தது உண்மையாயின், அவரது அருளால் மற்றொரு கனியைத் தருவித்துக் கொடு'' என்று கேட்டான். அம்மையார் முன் போலவே பெருமானை வேண்டி முன் போலவே மற்றொரு கனியையும் பெற்றார். அதனை அம்மையார் அவன் கையிலே கொடுத்தார். பெரும் வியப்புடன் அதனைக் கையில் வாங்கினான் பரமதத்தன். உடனே கனி மாயமாய் மறைந்தது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. திருவருளின் அற்புதச் செயலைக் கண்ட பரமதத்தன் பெரிதும் அஞ்சினான்; அவனுடைய உள்ளம் நடுங்கிற்று. அம்மையார் மனித உடம்பினைக் கொண்ட தெய்வம் என்று கொண்டான். அவருடைய பெருமை அறியாது நடந்து கொண்ட தன் சிறுமையை நினைந்து வருந்தினான். திருவருளை நம்பாது மறுமுறையும் கனியைக் கேட்டு அவர் மனத்தைத் துன்புறுத்தியது குற்றம் என்று மனம் நொந்தான். தெய்வமாகிய அவர் தமக்குப் பணிவிடை செய்வது பாவம் என்று எண்ணிய பரமதத்தன், அவரைப் பிரிந்து வாழ்வதே தக்கது என்று கருதினான்.

பரமதத்தன் ஒரு கனியை உண்டு அதன் இனிமையில் திருப்தி அடையாது, மறு கனியையும் கேட்டான். அதனால் அவன் உணவு நசைமிக்கவன் என்றும், கருதியற்றவன் என்றும் கூறலாகாது. சிலர் பரமதத்தனை இழிந்தவன் என்றும், தன்னலமுடையவன் என்றும் கூறுவர். இது பிழை.

(தொடரும்)



# சக்திக்கும், வலிமைக்கும்!




## காட்பரீஸ்
# போர்ன்விடா

ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புகளும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச் சுவையாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்

Bensons / CP-578 TAM




இந்தியர்களை முன்னேற்றப் பாதையில் — நாகரிகச் சாலையில் செல்லுமாறு செய்வதில் ஓர் அம்சமாக ஸதி என்ற உடன்கட்டை ஏறும் பழக்கத்தை இந்தியாவில் தாங்கள் ஒழித்ததாகப் பிரிட்டிஷார் பெருமைப் பட்டுக் கொள்வதுண்டு. 1829ம் ஆண்டில் வாரிடு பெண்டிங்க் காலத்தில் ஸதி ஒழிப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது உண்மை. அதற்குப் பரவலாகப் பலத்த எதிர்ப்பு இருந்த போதிலும் இந்திய மக்களிலேயே அறிவு சார்ந்த பலர் அச்சட்டத்தை ஆதரித்ததினாலேதான் பிரிட்டிஷாரால் இச் சட்டத்தை அமுலுக்குக் கொணர முடிந்தது.

ஆனால் இதற்குச் சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே போர்ச்சுகீஸியரின் ஆட்சியில் கோவாவில் உடன் கட்டை ஏறும் பழக்கம் சட்டபூர்வமாகத் தடுக்கப்பட்டு விட்டது !

கோவாவைப் போர்ச்சுகீஸிய ஆதிக்கத்தின் கீழ் தாம் கொணர்ந்த முதல் ஆண்டிலேயே அதாவது 1510ல், அல்பான்ஸோ டி. அல்புகுவர்க் உடன்கட்டை ஏறும் பழக்கத்தை ஒழித்துச் சட்டம் இயற்றினார். அப்போதுதான் இந்தியாவின் சில பகுதிகளில் போர்ச்சுகீஸிய ஆதிக்கம் பரவத் தொடங்கியிருந்த சமயம். அல்பான்ஸோவுக்கோ அல்லது போர்ச்சுகீஸிய ஆதிக்கத்துக்கோ பரவலான ஆதரவோ ஒத்துழைப்போ மக்களிடையே இன்னும் ஏற்படாத நிலை.

# ஸதி ஒழித்த சீலர்

அந்தக் தருணத்தில் இது போன்ற ஒரு பெரிய சீர்திருத்தத்தைச் செய்வதென்றால் அதற்கு எவ்வளவு துணிவு வேண்டும்? ஸதி ஒழிப்புத் திட்டம் பலத்த எதிர்ப்பைத்தான் மக்களிடையே காணும் என்பதை நன்கு உணர்ந்திருந்தார் அல்பான்ஸோ. ஆதரவாளர்கள் என்று யாருமே இல்லை. எனினும், அவசியமான சீர்திருத்தம் இது என்று அவருக்குத் தோன்றியதால் தைரியமாகச் சட்டமியற்றினர், அஞ்சாமல். புதிதாக ஓர் இடத்தை ஆக்கிரமித்து ஆளத் தொடங்குபவர் ஆரம்பத்திலேனும் மக்களிடையே நல்லெண்ணத்தைப் பெற அவர்கள் மனதுப்படி நடக்கவே முற்படுவார்கள். ஆனால் அல்பான்ஸோ இதற்காகத் தமக்குச் சரி என்று தோன்றியதைச் செய்யத் தவறவில்லை. ஆகவே முதன் முதலில் ஸதி ஒழிப்புச் சட்டம் கொணர்ந்தவர் இந்தியாவில் அல்பான்ஸோதான்.

இதே அந்நியருக்கு முதன் முதலில் அந்நிய ஆட்சியை இந்தியாவில் புகுத்தியவர் என்ற அவப் பெயரும் உண்டு. எனினும், இந்த அவப் பெயர் அவர் செய்த வேறு பல நல்ல காரியங்களின் விளைவாக மட்டுப் படுத்தப்பட்டிருக்கிறது.

இவரது பரந்த மனப்பான்மை, நேர்மை, நியாய நிலையில் நின்று அரசாண்ட பண்பு இவற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டாக ஏதேனும் கூற வேண்டுமானால், இவருக்குப் பின் அரசாள வந்தவர்கள் செய்த அநீதிகள் தாங்காமல் மக்கள் — இந்துக்கள் முஸ்லிம்கள் முதலிய பலரும் — இவரது சமாதிக்குச் சென்று பாதுகாப்பு வேண்டிப் பிரார்த்தித்ததைச் சொல்லலாம். இப்பழக்கம் கோவாளியரிடையே 1515ல் அவர் இறந்த பிறகு பல காலத்துக்கு இருந்து வந்தது. இதைவிடச் சிறந்த அத்தாட்சி வேறு தேவையா என்ன?



வி.எஸ்.ஸ்கண்டூர்

திருமண வரவேற்பு. பம்பாய்த் திருமண வரவேற்பு.

''டேன், டேன், டேன்.... உன்னைவிட மாட்டேன்....!'' என்றொரு திரைப்படப் பாட்டு. அடுக்கி வைக்கப்பட்ட பாத்திரங்களை வரிசையாகக் கீழே தள்ளப்படுவது போன்ற பின்னணியும், இடைவிடாது வெந்நீர்த் தவலையில் 'லொட் லொட்' எனத் தட்டப்படுவது போன்ற சத்தமும், ஒன்றை ஒன்று விழுங்க, கிளிக் குரலில் கொடுத்த பணத்துக்கு முழுமனத்துடன் கத்தப்பட, வரவேற்பில் குழுமியிருந்த இளவல்கள் மானசீகமாக மேல்நாட்டுப் பாணி நெளிவு,

## ஓட்டைப் படக் கதை



# வழுக்குமுனை

பி.வி. பாரதீயன்

முறுக்கு நடனங்களை அநுபவித்து ஆனந்தப் பட, தட்டிசை இசைத்தட்டில் கிளம்பி ஒலிபெருக்கியில் விசுவரூப ஆட்டம் ஆடியது.

தும்பை வெண்மையில் ஆடை பூண்ட ஐஸ்க்ரீம் விநியோகிக்கும் சிப்பந்திகள் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்தனர். மங்கலப் பொருள்களாகச் சந்தனம், மஞ்சள் கிழங்கு, குங்குமம், வெற்றிலைபாக்கு, தேங்காய் முதலியனவற்றை மணமக்களை வாழ்த்த வருகிறவர்களுக்கு வழங்கும் பழக்கம் ஒரு பழங்கதை. முன்பு தாங்கள் பிறருக்கு வழங்கிய திருமணப் பரிசுகளை வசூல் செய்வதற்கே ஏற்பாடு செய்யப்பட்டது போன்ற வரவேற்பு வைபவங்கள்! கையிலே பரிசாக எதுவும் இல்லாமல் வாழ்த்துக் கூறத் துணிந்து நாகரிகம் மலிந்த இந்த நகரத்தில் எந்த வரவேற்புக்கேனும் போக முடியுமா? முகம் தெரியாத ஒருவர் வந்தவர்களுக்கெல்லாம் வணக்கம் என்று சொல்வதும், அடுத்து நிற்பவர் பன்னீர்ச் செம்பைத் தலைக்கு மேலே இருமுறை குலுக்குவதும், மூன்றாவது நபர் ஒரு ரோஜா மலரும் இரண்டு இலைகளும் குச்சியோடு சேர்த்துக் கட்டப்பட்ட பூச்செண்டைக் கையில் திணிப்பதும், மேடையில் உட்கார்ந்திருக்கும் புது மணத் தம்பதிகள் வாழ்த்துக்களையும் பரிசுகளையும் கணப் பொழுதில் ஏற்றுக் கொள்வதும், எல்லாம் உயிரோடு உயிர், நெஞ்சோடு நெஞ்சு, ஒட்டி உறவாடாமல் வரவு செலவுக் கணக்காக நடக்கும் வரவேற்பு வைபவங்களின் பெருமைகள்! நாற்பது ஆண்டுகளாக, பம்பாய் மண்ணிலே உழன்ற சுப்பண்ணா ஆண்டுக்கு ஆண்டு ஆத்மீகத் தொடர்பு குறைந்து வெறும் வேஷமாக, நாடகம் போல கவனித்துக் கொண்டுதான் இருக்கிறார். மாதுங்காவிலே சுப்பண்ணா முன்னின்று நடத்தி வைக்காத விசேஷங்களே கிடையா. பெரிய இடமோ, சின்னவர்களோ, யாரானாலும் சுப்பண்ணாவை அழைக்காமல் எதையும் நடத்துவது கிடையாது. அவரது அநுபவ பூர்வமான யோசனைகள், சிக்கல்களைப் பொழுதில் தீர்த்து வைக்கும் திறமை, கலகலப்பான பேச்சு, நெற்றி நிறைய விபூதியும் மையத்தில் பெரிய வட்டவடிவில் குங்குமமும் துலங்கும் மகிழ்ச்சி பொங்கும் இன்முகம் இத்தனையும் அறியாதவர்களே பம்பாயில் கிடையாது. அவரிடத்தில் இருந்த முக்கியமான குணம் தகுந்த சமயத்தில் தாமே புகுந்து ஏற்பட்டுள்ள இடையூறைத் தீர்த்து வைப்பதுதான். வேடிக்கையாக மற்றவர்களுடன் பேசிக் கொண்டுதான் அந்த வரவேற்பிலும் நின்று கொண்டிருந்தார். அவரது கண்கள் நான்கு பக்கமும் அடிக்கடி யாரையோ தேடிக் கொண்டிருந்தன. அந்தப் பெரிய கல்யாண மண்டபத்தின் ஒரு மூலைக்கு விரைந்தார். பெண்ணின் தகப்பனார் கைகளைப் பிசைந்தவண்ணம் நின்று கொண்டிருந்தார் அங்கே.

''வாங்கோ, சுப்பண்ணு!'' என்று தமது துன்பத்தை விசாரிக்க வந்த அவரை அருகே அழைத்தார்.

''மாப்பிள்ளை முகம் ஏன் அப்படிக் கடு கடுப்பாக ஆகிவிட்டது?'' என்று சுப்பண்ணு கேட்டார்.

''ஒரு சின்னத் தவறு நடந்து போச்சு. நம்ம லல்லி வேலை பார்க்கவில்லை, வீட்டோடு தான் இருக்கிறாள் என்று சொல்லியிருந்தோம். சேகருக்கு அது மனசுக்குப் பிடித்திருந்தது. அவள் இதற்குமுன் வேலைக்கே போனதில்லை என்று பிள்ளையாண்டான் நினைத்திருந்தான். லல்லி ஒரு வருஷமாகத்தான் வேலைக்குப் போகவில்லை என்கிறதாக நான் சொல்லியிருக்கணும். நான் எதையும் ஒளிக்கணும்னு செய்யலை. இத்தனை தீவிரமா இதைப் பத்தி நினைப்பார் மாப்பிள்ளைன்னு தெரிஞ்சிருந்தால் முதல் காரியமா சொல்லித் தொலைச்சிருப்பேன்'' என்று சபேசன் அலுத்துக் கொண்டார்.

சுப்பண்ணு இடைமறித்தார்.

''மாப்பிள்ளை என்ன சொல்கிறான்? அதை மட்டும் சொல்லும்!''

''என்ன சொல்வான்? 'உண்மையை மறைத்து வைத்துக் கல்யாணம் செய்திருக்கிறீர்கள். நேர்மை வேண்டாமா?' என்று படபடக்கிறான். அவன் இருக்கிற நிலையைப் பார்த்தால்......''

மேலே பேச முடியாமல் உணர்ச்சிவசப்பட்டு உதடுகள் துடிக்க, கண்களில் நீர் பொங்க நின்றார் சபேசன்.

சுப்பண்ணு சபேசனின் முதுகைத் தட்டிக் கொடுத்து, ''அனாவசியமா மனசை அலட்டிக்காதே, சபேசா! இந்த 'ரிசப்ஷன்' முடிகிற வரை, இன்னும் ஒரு மணி நேரம் பல்லைக் கடிச்சுண்டு சிரிச்ச முகமா இரு. நான் சேகரிடம் பேசறேன்!'' என்பதாகச் சமாதானம் கூறிவிட்டு அங்கிருந்து நகர்ந்தார்.

வாழ்த்துக் கூற வருகிறவர்களுக்கு ஏதோ தகராறு நிகழ்ந்திருக்கிறது என்பது தோன்றாதிருப்பதன் பொருட்டுச் சுப்பண்ணு நேரே சேகரை அணுகினார்.

''என்ன மாப்பிள்ளை சார், தலைவலியோ?'' திடீரென்று தோன்றிய கேள்வி. சட்டென, ''ஆமாம்!'' எனத் தாற்காலிகமாக ஒரு பதிலைச் சொல்லி வைத்தான் சேகர்.

''சூடா காப்பி சாப்பிட்டால் குறைந்து விடும். உங்களுக்கு இன்றைக்கு ரொம்பவும் சிரமம்! இப்பவே ஏற்பாடு பண்ணிட்டேன் காப்பிக்கு. ஏம்மா, லல்லி, கல்யாணத் தன்னிக்கே இப்படிக் கவனிக்காம விட்டுட்டியே அவரை? உனக்கும் தலைவலி போலத்தான் இருக்கு. கல்யாண நாளிலே மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் தலைவலி வருகிறது சகஜம். அப்புறம் எல்லாம் சரியாகப் போய்விடும்!''



சுப்பண்ணு பேசிவிட்டு இருவரையும் பார்த்துச் சிரித்தார். 'இவருக்குத்தான் எத்தனை சாமர்த்தியம், மையமான பொருளோடு பேசுகிறாரே!' என்று லல்லி நினைத்தாள். சேகர் புரியாமல் திகைத்தான்.

சற்றைக்கெல்லாம் சுப்பண்ணு இருவருக்கும் காப்பி கொணர்ந்து கொடுத்தார். இருவரும் உற்சாகமில்லாமல் கடுகடுப்பாகக் காப்பியைப் பருகினர்.

சேகரும் லலிதாவும் வருகிறவர்களிடம் வெளிக்கு உதட்டுச் சிரிப்புடன் பேசினரே ஒழிய உள்ளூறப் புகைச்சல் ஓயவில்லை. வரவேற்பு நிகழ்ச்சி முடிவுற்றதும் சேகர் தான் அணிந்திருந்த 'சூட்'டைக் களைந்து விட்டு வேறு ஆடை அணிய மாடி அறைக்குச் சென்றான். அந்தச் சமயத்தில் லலிதாவிடம் சுப்பண்ணு நறுக்கென இருவரும் பேசிக்கொண்ட தகவலை விசாரித்தார்.

லலிதா முன்பு வேலை பார்த்த கம்பெனியிலிருந்து பல பழைய நண்பர்களும் மானேஜரும் வரவேற்பின்போது வந்தனர். அவர்களுடைய பேச்சிலிருந்து லலிதா வேலை பார்த்திருக்கிறாள் என்பதைச் சேகர் புரிந்து கொண்டான். சற்றுக் கடுமையாக அவளிடம் ''வேலை பார்த்ததில்லை என்று சொன்னீர்களே?'' எனக் கேட்க ''ஆமாம்! ஒரு வருடமாக வேலைக்குப் போவதில்லை. அதற்கு முன்பு ஐந்து ஆண்டுகள் வேலைக்குப் போய்க் கொண்டுதான் இருந்தேன்'' எனப் பளிச்செனப் பதில் கூறிவிட்டாள். வேலை பார்க்காத பெண்ணைத்தான் மணம் புரிந்துகொள்ள வேண்டும் என ஏற்கனவே பல இடங்களிலிருந்து வந்த பெண்ணைப் பெற்றவர்களிடம் மறுத்துவிட்டு வீட்டோடு இருக்கும் பெண்



"இந்தத் தேர்தலில் நீங்கள் என்னை அவசியம் ஆதரிக்க வேண்டும்."

நடிகை: எனக்கு இன்னும் வோட்டுப் போடுகிற வயசு வரலியே. வேணுமானா மேடை ஏறி உங்களுக்கு ஆதரவு தரச் சொல்லிப் பேசறேன்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

லலிதா என்ற காரணத்தைப் பெருமளவில் விரும்பி ஒப்புக் கொண்ட பின்னர் அவன் நினைப்புத் தவறு என்பது வெளியானபோது சேகர் கோபம் அடைந்ததில் வியப்பில்லை. முப்பத்து நான்கு வயது வரையில் இப்படி ஏமாற்றப்படவா ஒண்டிக் கட்டையாக அவன் இருந்தான்? உண்மையை மறைத்து விட்டார்கள் என்ற நினைப்பு பலவித விபரீத எண்ணங்களுக்கு வித்திட்டு, "இருக்கட்டும், என் சாமர்த்தியத்தையும் காட்டு கிறேன்!" என்று அவனை லலிதாவிடம் உறும வைத்தது. "இங்கே யார் சாமர்த்தியத்தைக் காட்டுகிறார்கள்? புரிந்து கொள்ளாமல் எதை யாவது பேச வேண்டாம்" என்றது உள்ளம் துடித்த பெண் குரல். கப்பண்ணா புகுந்து இடைக்காலப் போர் நிறுத்தம்போன்ற ஒரு நிலையை உண்டாக்கி யிருந்தார்.

நடந்த பேச்சு வார்த்தைகளின் விமரி சனங்களுடன், அவரோடு வர மறுத்த சேகரின் கையைப் வலுவில் பிடித்துச் கப் பண்ணா இழுத்து, "தயவு செய்து என்னோடு பத்து நிமிடங்கள் பேசுங்கள் மாப்பிள்ளை!" என்று கூப்பிட்டபோது மறுக்க முடியாமல் சேகர் அவருடன் மூன்றாவது மாடிக்கு மேல் இருந்த மொட்டை மாடிக்குப் போனான். அவனது வீட்டாரிடையே அப்போதுதான் பெண் வீட்டார் ஏமாற்றி யிருக்கிறார்கள் என்ற வதந்தி பரவிக் கொண் டிருந்தது. கப்பண்ணா, 'மாப்பிள்ளை இப் போது வந்து விடுவார்!' என்று மற்றவர்களை யெல்லாம் நிறுத்திவிட்டுச் சேகரைத் தனியே அழைத்துப் போனபோது யாராலும் தடுக்க முடியவில்லை.

"என்ன முடிவு செய்தீர்கள் சேகர்?"

"முடிவு என்ன முடிவு? மரியாதை தெரி யாதவர்கள். பொய் சொல்லி ஏமாற்றி விட்டார்கள். செல்லாத காசை என் தலை யில் கட்ட முடியாது."

"பிசிறில்லாமல் துல்லியமாய் 'ணங்' என்று சத்தம் கேட்கும் பழைய காலத்து வெள்ளி ரூபாயப்பா இது! அறுபத்தெட்டு வயதுக் கிழவன் நான். பொய் பேச மாட் டேன். குழந்தை லலிதாவின் சுபாவம் எனக்கு நன்றாகத் தெரியும். இந்தக் குடும் பத்தையும் தெரியும். என் வயசு கொடுக்கிற உரிமையுடன் என் சொந்தப் பிள்ளை போல எண்ணிச் சொல்கிறேன். பொய், ஏமாற்று தல் எதுவும் இவர்களிடம் மருந்துக்குக்கூடக் கிடையாது. கடவுளுக்கும் மனச்சாட்சிக்கும் கட்டுப்பட்ட நல்ல ஜீவன்கள் அத்தனையும்."

கப்பண்ணாவின் பேச்சைக் கேட்டுச் சேகரின் கோபம் அதிகமாயிற்று.

"ஓய், நீர் வயசில் பெரியவராயிருக்கலாம். உமது வயசுக்கு நமஸ்காரம். பெண் வேலை பார்க்கிறவளாக இருக்கக் கூடாது. வேலைக் குப் போகிறவள் எனக்குப் பிடித்தமில்லை என்று என்னிடம் முதன் முதலாக இவர் களது உறவுப் பையன் வந்து கேட்டபோதே சொன்னேன். அவன் லலிதா வேலைக்குப் போகவில்லை என்று சொன்னான். பெண் பார்த்தபோதோ, அப்புறமோ, எந்தச் சந்தர்ப்பத்திலும் சபேசனோ அல்லது மற்ற வர்களோ முன்பு ஐந்து வருஷங்கள் வேலைக் குப் போய்க் கொண்டிருந்தாள் என்று சொல் லவே இல்லை. நான் எதைக் குறிப்பாகத் தவிர்க்க விரும்பினேனோ அதிலேயே என்னைச் சிக்க வைத்தாற் போலத்தான் இருக்கிறது. என்னுடைய நிலையில் நீங்கள் இருந்தால் தான் உங்களுக்கு என் உணர்ச்சிகள் தெளி வாகப் புரியும். இனி மாற்ற முடியாத ஒன்றுக்கு மன அமைதி தேடித் தருகிறேன் என்று அவர்களுக்காக நீங்கள் வக்காலத்து வாங்கி வந்திருப்பது வீண் முயற்சி!"

கப்பண்ணா சேகரின் பேச்சைக் கேட்டுச் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. புன் சிரிப்புடன் தொடர்ந்தார். "சேகர், நான் வக்காலத்து வாங்கவில்லை. ஏமாற்றப்பட்டு விட்டதாக நினைத்தால் அந்த நினைப்பு சரி தானா இல்லையா என்பதையே நான் கூற விரும்புகிறேன். எப்படியோ சந்தர்ப்பங்கள் நீங்கள் சந்தேகப்படும் வகையில் இருப்பது உண்மை. ஆனால் ஒன்று சொல்லப் பிரியப் படுகிறேன். லலிதா ஒரு பட்டதாரி. பதி னைந்து வயதுக்கு மேல் நான்கு ஆண்டுகள்

**46ம் பக்கத்துக்கு விடைகள்:**

1. ஜகதீச சந்திர போஸ். 2. பிரான்ஸ். 3. விஜயா, இந்திரா, பால பாரதா, சக்கரவர்த்தினி. 4. 4,000. 5. 10 டன். 6. குயானா (முன்னாள் பிரிட்டிஷ் கயானா) போட்ஸ்வானா (முன்னாள் பச்சுவானாலாந்து) லெஸதோ (முன்னாள் பசுதோலாந்து) பார்படாஸ். 7. 62. 8. மாணிக்க வாசகர், அரிமர்த்தன பாண்டியன். 9. இருவருமே பார்வையை இழந்தவர்கள்.

பூப்போன்ற
மென்மைக்கு



# பிபின்

சேலைகள்

**பிபின்** சில்க் மில்ஸ் கோ. பிரைவேட் லிட்
பம்பாய்-28

* நைலான் ஜார்ஜெட் சேலைகள்
* ''டெரீன்'' ஷர்ட்டிங்குகள் & சூட்டிங் துணிகள்



ரோஜா இலைச் சின்-
னத்தைப் பார்த்து
வாங்குங்கள்



ரோஹித் க்ரூப் என்டர்ப்ரைஸ்

கல்லூரியில் பயின்ற காலத்தில் அவள் கல்லூரியிலும் வெளியேயும் ஆண்களையே பார்த்திருக்க மாட்டாளா? எப்போதாவது ஒரு சமயத்திலேனும் 'இவர் அழகாக இருக்கிறார், அவர் கெட்டிக்காரர்' என யாரையேனும் பார்த்து எண்ணாமல் இருந்திருப்பாளா? அந்த எண்ணம் கணத்துக்கேனும் உள்ளத்தை அந்த நபரின் பக்கம் சற்றே சாய்த்து இழுத்திருக்காதா? அதுவும் கிடக்கட்டும்.

"இருபதாவது வயதில் பி. ஏ. பட்டத்துடன் படிப்பை முடித்து விட்ட பெண், இருபத்தேழு ஆண்டுகள் நிரம்பியவளாக இருபத்தெட்டாம் பிராயத்தில் இருக்கக் கூடியவள், முழுக்க ஏழு வருடங்களைத் 'திருமணம் வருகிறது வருகிறது' என்று எதிர்பார்த்தவாறு வீட்டோடு முடங்கிக் கிடந்தால் மட்டும் யாரைப் பற்றியும் எதையும் எண்ணிப் பார்க்காமல் இருந்து விடுவாளா? கவனத்தைக் குறிப்பாக எதிலும் லயப்படுத்தாமல் சும்மா விட்டு வைத்திருக்கும்போது தான் பலப் பல பைத்திய சிந்தனைகளும் போவோர் வருவோரை வேடிக்கை பார்த்தோ அவர்களால் ஈர்க்கப்பட்டோ மனம் அலைபாய வாய்ப்புகளும் மிகுதி!

"இன்னொன்றும் சொல்கிறேன். முப்பதுக்கு மேல் வயதான ஆண் எவனும் எப்படி 'ஒரு பெண்ணையுமே நான் ஆசைக் கண்கொண்டு பார்த்ததில்லை இதுவரை' என்று சொல்வது நம்ப முடியாததோ, அப்படித்தான் அது இருபத்தேழு வயதுப் பெண்ணைப் பற்றியும். அவ்வப்போது பொங்கி எழும் பருவ உணர்ச்சிகளை அணைபோட்டு ஒழுக்கம் குன்றாமல் வாழ்ந்திருக்கிறாளா அந்தப் பெண், அதே போலத் தவறான வழியில் இறங்காதவன்தானா அந்தப் பிள்ளை என்பதே இன்று ஏற்பட்டுள்ள வயோதிகக் கல்யாணச் சூழலிலே கவனிக்க வேண்டியதாகும். அதனால் முன்பு லலிதா வேலைக்குப் போய் வந்ததை ஏதோ ஒரு பெரிய குற்றம் போல எண்ணி உங்கள் இருவருடைய வாழ்வையும் வீணில் கெடுத்துக் கொள்ள வேண்டாம் என்று நன்மையை எடுத்துச் சொல்கிறேன். இத்தனையும் கேட்ட பிறகும் பழைய மனநிலைதான் என்றால் ஈசன் உங்கள் இருவருக்கும் துணை நின்று எப்படியாவது மனோலயத்தை ஏற்படுத்தி மகிழ்ச்சி கூட்டட்டும்!"

சுப்பண்ணு அமைதியாக, தெளிவாக உச்சரித்த வார்த்தைகள் சேகரை வாயடைத்து நிறுத்தியிருந்தன. அவர் மாடியை விட்டுக் கீழே இறங்கும்போது வானத்தில் மினுக்கிய நட்சத்திரங்களைப் பார்த்த வண்ணம் சேகர் யோசித்தவாறு நின்றான்.

சற்றைக்கெல்லாம், "மாப்பிள்ளை, எதையும் வேண்டுமென்று மறைக்கவில்லை. எனக்கு உங்கள் மனசில் இருப்பது தெரிந்திருந்தால் முதலிலேயே நான் சொல்லி விருப்பேன். தவறாக நினைக்க வேண்டாம். மன்னித்து விடுங்கள்!" என்று கூப்பிய கைகளுடன் நின்ற சபேசனுக்குப் பின்னால் கண்களில் நீர் துளும்பக் கவலையே உருவாய் லலிதாவையும் கண்டான் சேகர்.

"பரவாயில்லை, பரவாயில்லை!" என அவரிடம் சொல்லி விட்டு, "லல்லி, என்னோடு வா. சுப்பண்ணுவுக்கு இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் நமஸ்காரம் பண்ணினால் தான் நல்லது. நம்மைக் காப்பாற்றிவிட்டார் அவர்!" என்று கூறியவாறு துன்பப் படுகுழியில் தள்ளவிருந்த ஒரு வழுக்கு முனையினின்றும் தன்னைக் காப்பாற்றி விட்ட அண்ணனுக்கு நன்றிக் கடனைத் தெரிவிக்க மனைவி லலிதாவின் கையைப் பற்றி இழுத்தவாறு விரைந்தான் சேகர்.




■ இங்கிலாந்து மக்கள், ஓர் ஆண்டில் குடிக்கும் தேநீரின் அளவு எவ்வளவு தெரியுமா? உலகில் மிகப் பெரிய கப்பலான 83,573 டன் எடையுள்ள குவீன் எலிஸபெத்தைப் போல 30 கப்பல்களை அதனுள் மிதக்க விடலாமாம். அவ்வளவு தேநீரை ஓர் ஆண்டில் குடிக்கின்றனர்.

■ திபத்தியர்கள் ஒரு நாளைக்குக் குறைந்தது என்பது கோப்பைகள் வரை ஒவ்வொருவரும் தேநீர் அருந்துகின்றனர். அவர்கள் வெண்ணெயோடு சேர்த்துக் கடைந்துதான் சாப்பிடுவர்.

■ சயாமில் உப்பும் வாசனைப் பொருள்களையும் கலந்து தேயிலையைச் சாப்பிடுகின்றனர்.

■ ஷான் பகுதியில் வாழ்வோர் தேயிலையை வேக வைத்தோ பொறிக்க வைத்தோ உப்புடன் கலக்கி உருண்டைகளாக்கிச் சாப்பிடுகின்றனர்.

■ ருஷ்ய நாட்டில் சூடான தேநீரில் பாலைக் கலக்க மாட்டார்கள். எலுமிச்சம் பழத் துண்டோ அல்லது இனிப்பான ஜாமோ கலந்து குடிக்கின்றனர்.

■ பர்மாவில் புது மணத் தம்பதிகளுக்கு பிரத்யேக தேநீர்ப் பானத்தை அருந்தக் கொடுப்பார்கள், அதில் எண்ணெய் கலந்திருக்கும். அந்தத் தேநீரை அருந்துவதால் மணமக்களுக்குள் அன்யோன்யம் ஏற்படும் என ஒரு நம்பிக்கை இங்கே உண்டு.

■ பசிபிக் கடலின் தெற்குப் பகுதியில் "டிரிஸ்டான் டகுன்ஹா" என்றும் ஒரு தன்னந்தனித் தீவு உள்ளது. இங்கே வாழ்வோருக்கு தேநீர் உயிர்ப் பானம். தேயிலை வருடத்துக்கு ஒருமுறைதான் இறக்குமதி செய்வார்கள். இங்கு குற்றம் புரிவோருக்கு அளிக்கப்படும் தண்டனை தேநீர் கிடைக்காமல் செய்து விடுவதுதானாம். எனவே இங்கே குற்றங்கள் மிகக் குறைவு.

■ "ஒரு ஸிங்கிள் போடு!" என்று சொல்லிக் கேட்டு வாங்கிக் கல்லூரியில் அறைப்பது போல் கண்ணாடி தம்ளரை லாகவமாகச் சுழற்றித் தேநீர் அருந்தும் பழக்கம் தமிழகத்துக்கு மட்டுமே உரியது!

தகவல்: இ. குமாரராஜ

# இன்னும் ஐந்து வருடங்களில்



# ரூபாயின் மதிப்பு

# 25 பைசாவாகக் குறைந்துவிடுமோ?

## இன்று நாட்டில் நடப்பதென்ன?

கடந்த 5 வருடங்களில் ரூபாயின் மதிப்பு வீழ்ந்திருக்கும் விதத்தைப் பாருங்கள்:

1962—5%
1963—16%
1964—30%
1965—46%
1966—52%

1966-ல் ரூபாயின் மதிப்பைக் குறைத்தே ஆகவேண்டிய நிர்ப்பந்தம் அரசாங்கத்துக்கு ஏற்பட்டது.

ஆனால் ரூபாயின் மதிப்புக் குறைப்புக்குப் பிறகு அத்தியாவசியமான பண்டங்களின் விலை மேலும் ஏறிவிட்டது. உதாரணமாக:

| | |
|---|---|
| காய்கறிகள், பழங்கள், மீன்கள் | —25% |
| வனஸ்பதி | —25% |
| பால் மற்றும் பால் தயாரிப்புகள் | —18 முதல் 53% |
| மருந்துகள் | —15 முதல் 20% |

கடந்த 5 வருடங்களில் ரூபாயின் மதிப்பு, நாட்டிற்குள்ளேயே 60%-க்கு மேல் வீழ்ச்சியடைந்துவிட்டது. அடுத்த 5 வருடங்களில் என்னவாகும் என்று உங்களை நீங்களே கேட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இதற்கு நீங்கள் செய்யக்கூடியதுதான் என்ன? சுதந்திரா கட்சிக்கே வோட் செய்யுங்கள்.

சுதந்திரா கட்சி செய்யக்கூடியது என்ன?

ரூபாயின் மதிப்பை கண்ணியமாகவும், நிலையானதாகவும் செய்ய:

★ வீண் செலவுகளைக் குறைக்கும்.
★ தேசிய வளங்களை விரயமாக்கும் வீண் திட்டங்களை விட்டொழிக்கும்.
★ கரென்ஸி நோட்டுகளை அச்சடித்துக்கொண்டே போவதினால் விளையும் நாணய மதிப்பு வீழ்ச்சியை நிறுத்தும்.
★ மிதமிஞ்சிய சுங்கத் தீர்வைகளையும், இதர வரிகளையும் குறைக்கும்.
★ நிலங்களிலும், ஆலைகளிலும் உற்பத்தியைப் பெருக்கும்.

## அடுத்துவரும் பொதுத்தேர்தலில் நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?

**வோட் செய்வதற்கு முன் நன்றாக யோசனை செய்து இந்த வாய்ப்பை சரியானபடி பயன்படுத்திக்கொள்ளுங்கள்.**

**5 வருடங்களுக்குப் பிறகு காலம் கடந்துவிடக்கூடும்**



# சுதந்திரா கட்சிக்கே வோட் செய்யுங்கள்

அவ்வளவு சீக்கிரம் சென்னையிலிருந்து அழைப்பு வரும் என்று சபேசன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. பவர் ஹவுஸ் அமைப்பு வேலைகளில் அவன் மேற்கொண்டிருந்த பொறுப்பு பெரும்பாலும் நிறைவேறி விட்டதென்றாலும், இன்னும் இரண்டொரு மாதங்களாவது அந்தப் பகுதியிலேயே தங்க வேண்டியிருக்குமென்றுதான் அவன் எதிர்பார்த்தான். அத்தனை நாட்களும் அவனுக்கு இருந்த இடைவிடாத வேலை காரணமாகக் கனகாவுடன் அந்த ரம்மியமான மலைப் பிரதேசங்களில் மனம் போனபடி சுற்றித் திரிவதற்கு அவனுக்கு வாய்ப்பு இல்லாமலே போய்க் கொண்டிருந்தது. இனி தங்கியிருக்கும் நாட்களில் அவ்வளவு தீவிரமான உழைப்புக்கு அவசியமிராதாகையால் கிடைக்கும் ஓய்வுநேரத்தையெல்லாம் கனகாவைப் பல இடங்களுக்கும் அழைத்துச் சென்று அவளை மகிழ்விப்பதில் செலவிட முடியுமென்று அவன் நம்பிக் கொண்டிருந்தான். சம்பா நீர்த் தேக்கத்தில் செய்த உல்லாசப் படகுப் பிரயாணம் அத்தகைய இன்பப் பொழுதுபோக்குக்கு ஓர் ஆரம்பமென்றே அவன் நினைத்தான்.

சம்பா நீர்த் தேக்கத்துக்குச் சென்று வந்த மறு நாள், வீட்டுக்கு வெளியே புல்தரையில் நாற்காலிகளைப் போடச் சொல்லி அமர்ந்து இதமான காலை வெய்யிலை நுகர்ந்தவாறே, தவசிப்பிள்ளை முத்தையா பரந்து பரந்து பரிமாறிய சூடான சிற்றுண்டிகளைச் சாப்பிட்டுக் கொண்டு கனகாவுடனும் குமரனுடனும் மகிழ்ச்சி பொங்கப் பேசிக் கொண்டிருந்த சமயத்தில்தான் சென்னையிலிருந்து அந்தத் தந்தி வந்தது.

அவசரத் தந்தியாயிருந்ததால் அதைக் கொண்டு வந்து கொடுப்பதற்காக உச்சிக்கடவுக் காரியாலயத்திலிருந்து ''ஜீப்''பையே அனுப்பியிருந்தார்கள். போனாக் கிழவன்தான் ஓடிச் சென்று அந்தத் தந்தியை ஜீப் டிரைவ

முதல் பரிசு நாவல்

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்



னிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான்.

''சபேசா! தந்தி உனக்குத்தான் வந்திருக்கிறது'' என்று தந்தியை அவனிடம் கொடுத்தான் குமரன். இப்போதெல்லாம் குமரன் சபேசனிடம் ஏக வசனத்திலேயே பேசி வந்தான்.

தந்தியைப் பிரித்துப் பார்த்த சபேசன் கடகடவென்று சிரித்தான்.

''கனகா, உனக்கும் இந்த மலைப் பிரதேசத்துக்கும் ராசியே இல்லை போலிருக்கிறது'' என்றான் சிரித்துக் கொண்டே.

''ஏன்? என்ன சமாசாரம் தந்தியில்?'' என்று கேட்டாள் கனகா.

''உடனே சென்னைக்குப் புறப்பட்டு வரச் சொல்லி மேலிடத்திலிருந்து உத்தரவு. நீயே தந்தியைப் படித்துப் பார்'' என்று தந்தியை அவளிடம் கொடுத்தான் சபேசன்.

''பாக்கி வேலைகளுக்குப் பதில் எஞ்சினீயரை அனுப்புகிறோம். நீங்கள்



உடனே புறப்பட்டு வரவும். இங்கு அவசர வேலைகள் காத்திருக்கின்றன'' — தந்தியை உரக்கப் படித்த கனகாவின் முகம் சட்டென்று வாடியது போல் தோன்றியது.

''ஏன் கனகா? இந்தக் காட்டுப் பிரதேசத்திலிருந்து சென்னைக்குத் திரும்பிப் போவதென்றால் உனக்குச் சந்தோஷம் தானே?'' என்று கேட்டான் குமரன்.

''சந்தர்ப்பம் பார்த்து நன்றாகக் கேலி செய்யுங்கள், குமரண்ணா. உண்மையில் இந்த மலைப் பிரதேசத்து வாழ்க்கையை இப்போதுதான் நான் ரசிக்க ஆரம்பித்திருக்கிறேன். நேற்று சம்பா நீர்த் தேக்கத்தில் நாம் செய்த படகுப் பிரயாணம் இலேசில் மறக்கக்கூடியதா? சென்னை வாழ்க்கையில் அதெல்லாம் ஏது?'' என்று கேட்டாள்.

''பலே, பலே! இதைத்தான் பாதரச மனப்பான்மை என்று சொல்வது'' என்று சிரித்தான் சபேசன்.

''தப்பு சபேசன்! ஒன்றிலும் ஒட்டாத மனத்தைத்தானே பாதரசத்தோடு ஒப்பிட்டுச் சொல்ல முடியும்? கனகாவின் மனம் அப்படியில்லை. எதையும் எளிதாக ஏற்றுக் கொண்டுவிடாது. ஏற்றுக் கொண்டு விட்டால் இலகுவில் விடவும் விடாது'' என்றான் குமரன்.

''அப்படியானால் அதற்கு எதை உவமையாகச் சொல்வது?'' என்று கேட்டு விட்டு, அதற்காகச் சிந்தனை செய்பவன் போல் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து எதிரே தெரிந்த மலை முகட்டைப் பார்க்க ஆரம்பித்தான் சபேசன்.

''போதும், போதும். உவமையைத் தேடிக் கொண்டு மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டாம். நீங்கள் இந்தத் தந்தியிலிருப்பதை அப்படியே ஒப்புக் கொண்டு புறப்பட்டு விடப் போகிறீர்களா?'' என்று கேட்டாள் கனகா.

''வேறு என்ன செய்யச் சொல்கிறாய்? பதில் தந்தி கொடுத்து விடட்டுமா? — 'நானும் என் மனைவியும் இன்னும் கொஞ்ச நாட்கள் இந்த மலைப் பிரதேசத்தில் தேன் நிலவு கொண்டாட ஆசைப்படுகிறோம். இப்போதே புறப்பட முடியாது. நீங்கள் செய்வதைச் செய்து கொள்ளுங்கள் என்று!''

குமரன் உரக்கச் சிரித்து விட்டான். கனகாவின் முகம் குப்பென்று சிவந்தது.

''இப்படியெல்லாம் கேலி செய்தால் நான் எழுந்து உள்ளே போய் விடுவேன்'' என்று சிணுங்கினாள்.

''கோபித்துக் கொள்ளாதே, கனகா. உன் மனம் எனக்குப் புரியவில்லையா என்ன? ஏன்? எனக்குக்கூடத்தான் இங்கிருந்து மூட்டை கட்டிக்கொண்டு கிளம்ப வேண்டும் என்பதை நினைத்தாலே கஷ்டமாயிருக்கிறது. எதிர்பாராத திடீர் மாற்றங்களை யார் தான் சந்தோஷமாக ஏற்றுக் கொள்ள முடியும்? ஆனால் கடமையென்று வரும் போது அதற்குத் தலை வணங்கித் தானே ஆக வேண்டும்?'' என்று அவளைச் சமாதானப்படுத்தினான் சபேசன்.

''ஏன் சபேசன், பதில் எஞ்சினீயர் வந்து பொறுப்பேற்றுக் கொண்டபிறகு தானே நீ இங்கிருந்து புறப்பட வேண்டும்?'' என்று கேட்டான் குமரன்.

''அப்படி அர்த்தமில்லையே. 'உடனே புறப்பட்டு வரவும்' என்ற உத்தரவைத் தான் நான் எடுத்துக் கொள்ளவேண்டும். பதில் எஞ்சினீயரை எப்போது அனுப்ப வேண்டும் என்பது மேலிடத்தார் பொறுப்பு.''

''உன் வரைக்கும் இங்கு உன் பொறுப்புக்களில் முக்கால்வாசிக்குமேல் முடித்து விட்டாயல்லவா?''

''கொஞ்ச உழைப்பா உழைத்திருக்கிறார். இத்தனை நாளும் என்னுடன் சரியாகப் பேசக்கூட அவருக்கு நேரம் இருந்ததில்லையே?'' என்றாள் கனகா.

''பாவம்! கனகாவுக்குத்தான் மிகுந்த ஏமாற்றம். நான் என்ன செய்ய முடியும்? எடுத்துக் கொண்ட வேலையை முழுமூச்சுடன் செய்து முடித்தாலொழிய வேறெதிலும் என் மனம் செல்லாது'' என்றான் சபேசன்.

''அது தெரிந்துதானே, கல்யாணமான புதிது என்றும் யோசியாமல் உன்னை இங்கே அனுப்பினார்கள்'' என்று சிரித்தான் குமரன்.

''இங்கு நடக்கும் வேலையைப் பற்றி நான் அவ்வப்போது மேலிடத்துக்கு ரிப்போர்ட் அனுப்பி வந்திருக்கிறேனில்லையா? பாக்கி வேலைகளுக்கு ஒரு சாதாரண உதவி எஞ்சினீயரே போதும் என்றுகூட அவர்கள் தீர்மானித்திருக்கலாம். எல்லாம் சென்னைக்குப் போனால் தான் தெரியும்'' என்றான் சபேசன்.

''அது சரி, நீங்கள் பேசுவதைப் பார்த்தால் இன்றைக்கே புறப்பட வேண்டும் என்று மூட்டை கட்டிப் புறப்பட்டு விடுவீர்கள் போலிருக்கிறதே'' என்றாள் கனகா.

''அதற்கு அவசியமில்லை. இரண்டொரு நாட்கள் அவகாசம் எடுத்துக் கொண்டே புறப்படலாம்'' என்றான் சபேசன்.

# இளமேனியருக்கு
# இணங்கிய
# உறவு
# பியர்ஸ்...















இப்போது, புதிய புள்ளிக்கோல மேலுறையோடு உமக்கே!

## மென்மை கொஞ்சும் தூய
## கிளிசரின் சோப்

பச்சிள மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது பியர்ஸ். வாளவிடாமல் உங்கள் சருமத்தை இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது பியர்ஸ்...மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது. உங்கள் மேனியீது இளமை கொஞ்சிடவே : பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-PS. 158-140 TM



**சைக்கிள் வாங்குவது வாழ்நாள் முழுவதற்குமான ஒரு முதலீடு. ஹெர்குலிஸ் உங்கள் பணத்திற்கு மிகச்சிறந்த மதிப்பைத் தருகிறது.**

மிக உயர்ந்த தரத்துடன் தயாரிக்கப்படும் ஹெர்குலிஸ் சகாயமாக விலையிடப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள 135 நாடுகளில் அமோகமாக விரும்பி வாங்கப்படுகிறது இது என்பதற்கு இந்த சிறப்புகள் தான் காரணம்.

தென் கிழக்கு ஆசியாவிலேயே மிகப் பெரியதும், மிகச் சிறந்த இயந்திர சாதனங்கள் நிறுவப் பட்டுள்ளதுமான, சென்னையில் உள்ள சைக்கிள் தொழிற்சாலையில், சர்வதேசத் தர நிர்ணயங்களுக்கு ஏற்றபடி தயாரிக்கப்படுகிறது இது.

ஹெர்குலிஸ், உலகிலேயே மிகப் பெரிய சைக்கிள் தயாரிப்பாளர்களாகிய ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட், யு. கே. அவர்களின் ஒத்துழைப்பைக் கொண்டு வெகு நுட்பமாக உருவாக்கப்படுகிறது.

**அவர் தேர்ந்தெடுத்தது ஹெர்குலிஸ்**

ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்க நான் கஷ்டப் பட்டுச் சேமித்தேன். அது ஒரு சிறந்த முதலீடு என்பதை நிரூபித்திருக்கிறது. எங்கள் வீட்டின் ஒரு அங்கமான அது எப்போதும் நல்ல நிலையில் இருக் கிறது; நம்பகமானதும் கூட.



# ஹெர்குலிஸ்®

**வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை**



விலை, தரம், வலிமை, நேர்த்தி, உறுதி, ஆகிய எந்த வகையிலும் ஹெர்குலிஸ் ஐயமின்றி உங்கள் பணத் துக்கு மிக உயர்ந்த மதிப்பைக் கொடுக்கிறது.

ஹெர்குலிஸ் சைக்கிள் அண்ட் மோட்டார் கம்பெனி லிமிடெட், யு. கே. அவர்களின் பதிவு பெற்ற டிரேட் மார்க்குகள்.

இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா அம்பத்தூர், மதராஸ்-53.

உரிமையாளர்கள்: ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்-1, பதிவு பெற்று உபயோகிப்போர்.

சிறு சேமிப்புகளில் முதலீடு செய்யுங்கள்.

tic-h-3822a

'நல்ல வேளே!'' என்ருன் கனகா. ஏனோ அவள் மனம் அந்தத் திடீர் மாறுதலே ஏற்கவே மறுத்தது.

முத்தையா கடச்கட ஆவி பறக்கும் இட்டிலிகளேத் தட்டில் எடுத்துக் கொண்டு வந்து மூவருக்கும் பரிமாறி விட்டுப் போளுன். சற்று நேரம் மூவரும் ஒன்றும் பேசாமல் அவற்றை ஒரு கை பார்ப்பதில் லயித்திருந்தனர்.

சட்டென்று குமரன் கனகாவைப் பார்த்துக் கூறினுன். ''கனகா! நீ இங் இருந்து புறப்படுவதற்கு முன்னுல் இந்த அண்ணனுக்காக முடித்து வைக்க வேண்டிய கடமையை மறந்து போய் விடாதே!''

கண நேரம் புரியாதவள் போல் அவன் முகத்தைப் பார்த்தாள் கனகா. சட்டென்று புரிந்து கொண்டு, ''ஓ.... அதைச் சொல்கிறீர்களா? ஆனுல் அது விஷயத்தில் நான் எந்த விதத்தில் உதவி செய்ய வேண்டுமென்று இது வரையில் நீங்கள் எனக்குச் சொல்லவில்லேயே ?'' என்ருள்.

தனது மனத்தில் இருந்ததை எப் படிக் கூறுவதென்று தயங்குபவன் போல் குமரன் சில கணங்கள் மௌனமாக இருந்தான்.

அவனுடைய மௌனத்தைச் சபேசன் வேறுவிதமாகப் புரிந்து கொண்டான். ''நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். அதற்குள் நான் தோட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வருகிறேன்'' என்று கூறி எழுந்திருக்க முயன்ருன்.

குமரன் அவன் தோளேப் பற்றி அவனே மீண்டும் உட்கார வைத்தான். ''நமக்குள் இந்த மரியாதையெல்லாம் எதற்கு? உனக்கும் தெரிய வேண்டிய விஷயம்தான் இது. முன்னெச்சரிக்கை இல்லாமல் திருமணப் பத்திரிகையைக் கையில் கொடுத்துத் திகைக்க வைக்க வேண்டுமென்ற திட்டம் எனக்குக் கிடையாது'' என்று கூறிச் சிரித்தான்.

''அடேடே! உங்களுடைய திரு மண விஷயமாகவா பேசப் போகி றீர்கள்? எவ்வளவு அரிய சந்தர்ப் பத்தை இழப்பதற்கு இருந்தேன்! மணப் பெண்ணுக வரப் போகும் அதிர்ஷ்ட சாலி யார் ?'' என்று கேட்டான் சபேசன் உற்சாகத்துடன்.

''இந்த மலேப் பிரதேசத்துக்கேற்ற மணப் பெண்ணுகப் பார்த்துத்தான் குமரண்ணு தேர்ந்தெடுத்திருக்கிருர். இந்த விஷயத்திலெல்லாம் அவர் புரட்சிகரமான கருத்துக்கள் கொண்ட வர் என்று உங்களுக்குத் தெரிந்திருக் குமே?'' என்ருள் கனகா.



## மகாத்மா மொழிகள்

- உன் உரிமைகளே நீ இழக்கக் காரணம் உன்னுடைய பல வீனமே.

- கருத்து வேறுபாட்டுக்கு அர்த்தம் விரோதமென்றுல், நானும் என் மனேவியும் எப் பொழுதும் விரோதிகளாகத் தான் இருந்திருப்போம்.

- கடவுளுக்குத் தான் சேவை செய்ய வேண்டுமென்பதில்லே. உண்மைக்குச் சேவை செய்தாலே போதும்.

அனுப்பியவர்: வி. ஸ்ரீதரன்

- ''நாம் செய்த தவற்றை ஒப்புக் கொள்வது, அழுக்கான தரையைப் பெருக்கி அதை மேலும் பளபளப் பாக்குவதைப் போன்றது.''

அனுப்பியவர்: வி. சம்பத் குமார்

''சரிதான். மணப்பெண் யாரென்று கூறுவதற்கு இந்தப் பீடிகை தேவையா?''

''பெயர் விஷயத்திலும் ஒரு பொருத் தம் பார்த்திருக்கிருர் குமரண்ணு. அந் தப் பெண்ணின் பெயர் வள்ளி'' என்று கனகா கூறியதும் சபேசன் புரிந்து கொண்டான்.

''ஓ! விஞ்ச் ஆபரேட்டர் காளி யண்ணனுடைய தங்கையா? நான்கூட ஒரு தடவை அந்தப் பெண்ணேப் பார்த்திருக்கிறேன் குமரன். அதிர்ஷ்ட சாலி வள்ளி மட்டுமல்ல, நீங்களும் தான்!'' என்று உற்சாகத்துடன் கூறிக்

கொண்டே குமாரனின் கையைப் பற்றிக் குலுக்கினான் சபேசன்.

''கனகா! நேற்று நான் காரியாலயத்திலிருந்து சம்பா நீர்த் தேக்கத்துக்குத் தனியே வந்து கொண்டிருந்தேனல்லவா? வழியில் வள்ளியைச் சந்தித்தேன்'' என்றான் குமரன்.

''அப்படியா? கவிதை நிறைந்த சூழ்நிலையில்தான் உங்கள் சந்திப்பு நிகழ்ந்திருக்கிறது'' என்று கூறிச் சிரித்தான் சபேசன்.

''அதிருக்கட்டும், வள்ளியும் நேற்று சம்பா நீர்த் தேக்கத்துக்கு வந்திருந்தாளா என்ன?'' என்று கேட்டாள் கனகா.

''அவளுடைய அத்தையுடன் சம்பா தேவிக் கோயிலுக்குப் போயிருந்தாளாம். அங்கிருந்து நீர்த் தேக்கத்தில் நீங்கள் படகுப் பிரயாணம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்ததும் நானும் உங்களுடன் இருப்பேனு என்ற பயத்துடன், தான் மட்டும் முன்னதாகவே அங்கிருந்து புறப்பட்டிருந்தாள்.''

''என்ன பயம்?'' என்று கேட்டாள் கனகா.

''என்னை நேருக்கு நேர் சந்தித்து விட்டால் என்ன செய்வது என்ற பயம்தான்'' என்று சிரித்தான் குமரன்.

''கடைசியில் அவளுடைய பயமே உங்களுடைய சந்திப்புக்குக் காரணமாயிருந்து விட்டதில்லையா?''

''பாவம்! வள்ளியைப் போல் மென்மையான இயல்புடைய ஒரு பெண்ணின் மனத்தில் அம்மாதிரி இனம் புரியாத அச்சங்கள் தோன்றுவது இயற்கைதானே! ஆனால் நாங்கள் சந்தித்தது நல்லதாய்ப் போயிற்று. அவளுடைய அச்சங்கள் எவ்வளவு அர்த்தமற்றவை என்று நான் அவளுக்கு விளக்கிச் சொல்ல முடிந்தது'' என்றான் குமரன்.

''ஆமாம், இது விஷயத்தில் என்னிடமிருந்து என்ன உதவியை எதிர்பார்க்கிறீர்கள் என்று இன்னும் சொல்லவில்லையே நீங்கள்?'' என்றாள் கனகா.

''என் தங்கையின் ஸ்தானத்தில் இருக்கும் நீதான் சில சம்பிரதாயங்களை நிறைவேற்றி வைக்க வேண்டும்.''

''சம்பிரதாயங்களைப் பற்றி உங்களுக்கும் நம்பிக்கை இருக்கிறதா?'' என்று கேட்டுச் சிரித்தாள் கனகா.

''எனக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, வள்ளிக்காக அவற்றையெல்லாம் நடத்தித்தானாக வேண்டும். புரட்சிக் கருத்துக்களை அப்படியே ஏற்றுக்கொள்ளும் சூழ்நிலையில் வள்ளி வளரவில்லை. எந்தச் சம்பிரதாயங்களுக்கு அவள் பழக்கப் பட்டிருக்கிறாளோ, அவற்றை நாம் ஏற்றுக் கொள்வதில் தவறு கிடையாது. அதுதான் நேர்மையான வழி.''

''உண்மைதான் குமரன்! நீங்கள் சொல்வதை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன்'' என்றான் சபேசன்.

''முக்கியமாக வள்ளியின் அச்சமெல்லாம் அவளுடைய அண்ணனின் சம்மதத்தைப் பற்றித்தான். சம்பிரதாயமான முறையில் அணுகினால்தான் காளியண்ணன் சம்மதத்தை நாங்கள் பெற முடியும்.''

''அது சரி... சம்பிரதாயமான முறை என்று எதைச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள் கனகா.

''பரிசம் போட்டுப் பெண் கேட்பது தான் சாதாரணமாக அவர்களிடையே

சென்னை : சித்ரா • ஸ்ரீ கிருஷ்ண
சயானி • ராம்
மற்றும் தென்னாடெங்கும்



ஏ எல் எஸ் புரொடக்ஷன்ஸ்

# கந்தன் கருணை

ஈஸ்ட்மென் கலர்






திரைக்கதை வசனம்-டைரக்ஷன் : **A.P.நாகராஜன்** ❊ தயாரிப்பு : **ஏஎல்.ஸ்ரீநிவாசன்**

ஒப்புக்கொள்ளப்படும் சம்பிரதாயம். நானும் பாக்கு வெற்றிலை, பழம் புஷ்பம் முதலியவற்றுடன் வள்ளிக்கேற்ற பரிசப் பொருளையும் எடுத்துக் கொண்டு வள்ளிக்குப் பரிசம் போடுவதற்காக அவர்களுடைய வீட்டுக்கே செல்வதாக இருக்கிறேன். அந்தச் சமயத்தில் என் தங்கையான நீயும் என்னுடன் வர வேண்டும்'' என்று குமரன் கூறியதும் கனகாவும் சபேசனும் ஒருங்கே சிரித்து விட்டனர்.

குமரனும் சிரித்தான். ''எனக்குக் கூட அதை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது. ஆனால் வள்ளியைக் கருதி அந்த முறையைப் பின்பற்றுவதென்று நான் தீர்மானித்து விட்டேன். வள்ளிக்கான பரிசப் பொருளையும் சென்னையிலிருந்து வரவழைத்தாயிற்று'' என்றான்.

''அப்படியா அண்ணா? எங்களுக்கெல்லாம் சொல்லவே யில்லையே?'' என்றாள் கனகா ஆவலுடன்.

''இரு, அதை எடுத்து வருகிறேன்'' என்றவாறு எழுந்த குமரன் உற்சாகத்துடன் உள்ளே சென்று சில நிமிஷங்களுக்குள்ளேயே ஒரு நகைப்பெட்டியுடன் திரும்பினான்.

''எல்லா விவரங்களும் வீரமணிக்கு எழுதி அவனையே ஒரு நல்ல பரிசுப் பொருளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி கேட்டிருந்தேன் வீரமணியின் செலக்ஷன் எப்படி இருக்கிறதென்று நீங்களே பாருங்கள்'' என்று கூறிய குமரன் நகைப் பெட்டியைத் திறந்து அவர்களுக்குக் காட்டினான். பச்சைக் கற்களும் சிவப்புக் கற்களும் பதித்த கலையழகு மிளிரும் கழுத்தாரமொன்று அந்தப் பெட்டிக்குள்ளே காட்சியளித்தது.

''ஏ அப்பா பிரமாதமாயிருக்கிறதே! விலை ஐந்நூறுக்குக் குறையாது போலிருக்கிறதே'' என்றாள் கனகா பிரமிப்புடன்.

''விலை பெரிதில்லை. சந்தர்ப்பத்துக்கேற்ற பொருள்தானா என்பதுதான் கேள்வி'' என்றான் குமரன்.

''உண்மையிலேயே வள்ளி அதிருஷ்டசாலிதான்'' என்றாள் கனகா.

அந்தச் சமயத்தில் போலா யாரிடமோ அதட்டிப் பேசும் குரல் கேட்டது. குமரன் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். கேட்டைக் கடந்து புல்தரையில் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்த மங்காவை நடுவில் நிறுத்தித்தான் போலா அப்படி அதட்டிக் கொண்டிருந்தான்.

''ஐயாகிட்டே இப்போ பேச முடியாது. அவங்க ஏதோ முக்கியமான சமாசாரம் பேசிக்கிட்டிருக்காங்கோ. நீ இப்போ போயிடு. அப்புறம் வந்து பாரு'' என்று அவன் கூறிய வார்த்தைகளை மங்கா காதில் போட்டுக்கொண்டதாகவே தெரியவில்லை. அலட்சியமாக மற்ற மூவரும் உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி வந்தாள்.

''என்ன மங்கா?'' என்று கேட்டான் குமரன் வியப்புடன்.

''ஏன் சார்... நீங்க செய்தது கொஞ்சமாவது நியாயமாயிருக்கா? எங்க வள்ளியக்கா மனசிலே ஏதேதோ ஆசையை மூட்டி விட்டுட்டு இப்படிச் சும்மாவே இருந்திட்டீங்களே, இது தான் பெரிய மனுஷத்தனமா?'' என்று சற்றுக் கடுமையாகவே மங்கா கேட்டதும் குமரன் அதிர்ச்சி அடைந்தான்.

''மங்கா! நீ பேசுவது என்னவென்று புரியாமல் பேசுகிறாயே?'' என்றான் வியப்புடன்.

''எல்லாம் புரிஞ்சுக்கிட்டுத்தான் பேசறேன். சுயபுத்தியோடதான் பேசறேன். ஏன் சார், நீங்கள்ளாம் படிச்சவங்களாச்சே, நீங்ககூடவா பொறுப்பில்லாமல் நடந்துக்கிடணும்?'' என்று கேட்டாள் மங்கா.

அந்த வார்த்தைகளைக் கேட்டுக் கனகாவுக்குப் பொறுக்கவில்லை. ''ஏய், வாயாடி, தராதரம் தெரியாமல் என்ன உளறுகிறாய்?'' என்று அவளை அதட்டினாள்.

மங்கா அவளை ஒரு தடவை முறைத்துப் பார்த்தாள்.

''நிறுத்துங்கம்மா. நீங்க ஏன், இதிலே தலையிடறீங்க? நான் பேச வந்த வழக்கு இந்த ஐயாகிட்டல்ல!'' என்றாள்.

''வழக்கா?'' என்று கேட்டான் குமரன் திகைப்புடன்.

''ஆமாம் சார்! வழக்குத்தான். நீங்க எங்க வள்ளியக்கா மேலே ஆசை வச்சது தப்பில்லே. வள்ளியக்காவுக்கு அப்படியெல்லாம் அதிர்ஷ்டம் தேடி வரணும்னுதான் நான் ஆசைப்பட்டுக்கிட்டிருந்தேன். ஆனா நீங்க செய்ய வேண்டியதென்ன? எப்போ வள்ளி அக்கா மேலே ஆசை வச்சீங்களோ, அப்பவே நேரே அவங்க வீட்டுக்குப் போய்ப் பரிசம் போட்டுப் பெண் கேட்க வேண்டியதுதானே முறை. அந்தப் பொறுப்பைக்கூட நீங்க உணராமே இருந்தால் என்ன அர்த்தம்னு கேட்கறேன்!'' என்று மங்கா கூறியதும் குமரன் சிரித்தான். **(தொடரும்)**

# இன்று முதல்

அவள் உங்கள் பொறுப்பு. இப்பரந்த உலகில் அவளுடைய மகிழ்ச்சியை விடச் சிறந்தது வேறெதுவும் இருக்க முடியாது உங்களுக்கு. உங்கள் அன்பு, ஆதரவு, அனுசரித்துப் போகும் பண்பு - இவற்றைத்தான் உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறாள் உங்கள் அருமை மனைவி. வருங்காலத்தில் தாயாக, குடும்பத் தலைவியாகப் பரிணமிக்கப்போகிறாள் உங்கள் வாழ்க்கைத் துணைவி. எனவே, நீங்கள் உங்கள் பொறுப்புகளை நிறைவேற்ற இப்பொழுதிருந்தே திட்டமிட வேண்டாமா? உங்களுடைய வருங்காலத் தேவைகளுக்கு மிகச் சிறந்த முறையில் திட்டமிட்டு உதவ வழி வகை செய்கிறது ஆயுள் இன்சூரன்ஸ். உங்களுக்கு அண்மையிலுள்ள ஆயுள் இன்சூரன்ஸ் முகவரோடு (ஏஜெண்ட்) கலந்தாலோசியுங்கள். ஆயுள் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷன் வழங்கும் பல்வேறு விதமான பாலிசிகள் பற்றி நன்கு விளக்குவார் அவர். உங்கள் தேவைக்கேற்ற பாலிசியினை நிச்சயம் நீங்கள் பெறலாம். கவனத்தோடு அதனைத் தேர்ந்தெடுக்கவும். உங்கள் பொறுப்புகளை நிறைவேற்ற வழிவகுத்துதவும் அப்பாலிசி.

**அன்பு, ஆயுள் இன்சூரன்ஸ்**
**இவ்விரண்டுமே உங்கள் குடும்பத்துக்குத் தேவை!**

**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**






''ஸார், நாங்கள் நண்பர்களாக இருபது பேர்கள் சேர்ந்து ஒரு நாடக சபை அமைக்கலாம் என்றிருக்கிறோம். அதற்குத் தங்களைத்தான் தலைவராக நாங்கள் ஒரு மனதாகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். எங்களை நிராகரித்து விடக்கூடாது...'' என்று என் நண்பர் ஒருவர் என் வீடு தேடி வந்து மிகவும் பவ்யமாகக் கேட்டுக் கொண்டார். முகஸ்துதிக்கு வசப்படாதவர்களும் உண்டா? என்னையறியாமலே அவருக்கு என் சம்மதத்தைத் தெரிவித்து விட்டேன். ஏற்கனவே எனக்குக் கொஞ்சம் நாடகப் பைத்தியம் உண்டு. பல நாடக சபைகளை ஆரம்பித்து அற்பாயுசில் முடிவிருக்கிறேன். அத்துடன் சில நாடகங்களை நடத்தி அநுபவமும் பெற்றிருக்கிறேன். சில காலத்துக்கு அந்தப் பைத்தியம் கொஞ்சம் தெளிந்திருந்தது. நண்பர் வந்து ஆசையைக் கிளறி, என் தலையில் ஐஸ் வைத்துவிடவே நான் புளகாங்கிதம் அடைந்தேன்.

விரைவில் ஓர் அமெச்சூர் நாடகக் குழு உருவாகி விட்டது. குழுவின் அங்கத்தினர்கள் யாவரும் உத்தியோகஸ்தர்கள். ஒரு சமூக நாடகத்தைத் தேர்ந்தெடுத்தேன். ஆதி காலத்தில் மேடையில் பெண்மணிகளாக ஆண்மணிகளே தோன்றிவந்தார்கள். இப்போது அது நடைபெறாது. சினிமாவில் அறிமுகமான ஒரு நடிகையைப் பிடித்துப் போட்டால்தான் நாடகம் எடுபடும்.

இரண்டு பெண் பாத்திரங்களுக்கு மாத்திரம் நடிகைகளையே ஏற்பாடு செய்துவிடுவது என்று முடிவு செய்யப்பட்டது.

நாடகக் குழுவின் தலைவன் என்ற முறையிலும், நாடக ஆசிரியர், வசன கர்த்தா, டைரக்டர் என்ற முறையிலும் நடிகர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. நாடகக் குழுவின் அங்கத்தினர் ஒவ்வொருவரையும் பரீட்சித்துப் பார்த்து அவரவர்களுக்கு ஏற்ற பாகத்தை முடிவு செய்தேன். இந்தத் தீர்மானம் நடந்து கொண்டிருக்கும்போதே அங்கத்தினர்களிடையே கசமுச என்ற பேச்சுக்கள் எழுந்தன. சிலர் தனித் தனியாகப் பிரிந்து பேசலாயினர்.

''அங்கத்தினர்களுக்குள் நாடக பாத்திரங்கள் விஷயமாக அபிப்பிராய பேதம் ஏதேனும் இருந்தால் தயவு செய்து அதை மனம் விட்டு வெளிப்படையாகச் சொல்லி விடவேண்டும்'' என்று மிகவும் பணிவு கலந்த குரலில் கரம் கூப்பி அனைவரையும் கேட்டுக் கொண்டேன். ஒருவரும் வாய் திறக்கவில்லை. நான் மறுபடியும் கேட்டுக்கொண்டேன். ஒருவர் எழுந்து நின்று தம் அபிப்பிராயத்தை வெளியிட்டார்:

''நான் இந்த நாடகக் குழுவிலிருந்து விலகிக் கொள்கிறேன். எனக்கு நல்ல பாகம் கொடுக்கப்படவில்லை. நன்றாய், 'டிப்டாப்'பாக டிரஸ் செய்து கொண்டு நடிக்கச் சந்தர்ப்பம் கிடைக்கும் என்று ஆவலாக எதிர்பார்த்தேன். ஆனால் அதற்கு நேர்மாறாக, எனக்குத் தோட்டக்காரன் வேஷம் கொடுக்கப்பட்டிருக்கிறது. உடம்பைத் திறந்து கொண்டு, சாய வேஷ்டியோடு நான் மேடையில் தோன்ற மாட்டேன். நான் நாடகத்தில் நடிக்கப் போகும் சமாசாரத்தை ஊரிலிருந்து வந்திருக்கும் என் மைத்துனனிடம் சொல்லிவிட்டேன். அவன் நாடக மேடையில் என் நடிப்பைப் பார்க்க ஆவலோடு காத்துக் கொண்டிருக்கிறான்.... நான் மேடையில் தோட்டக்காரனாக வருவதைப் பார்த்து விட்டானானால் அவ்வளவுதான். என்னை ஒரு நயா பைசாவுக்குக் கூட மதிக்க மாட்டான். என்னை மன்னித்து விடுங்கள்.''

இதேமாதிரி ஒவ்வொருவரும் அவரவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பாகங்களைக் குறைகூற ஆரம்பித்தார்கள்.

இன்னொரு அங்கத்தினர் கூறினார்:

''நான் இந்த நாடகத்தில் ஏற்கும் பாத்திரம் வில்லன். ஆபீசில் எனக்குக் கீழே வேலை பார்க்கும் ஒரு சாதாரண ஜூனியர் கதாநாயகனாக வருகிறார். என்னைப் பொறுத்த வரையில் அதில் ஆட்சேபம் ஒன்றுமில்லை. ஆனால் என் மனைவி அதை விரும்ப மாட்டாள்; எனக்குக் கீழே வேலை பார்க்கும் ஒரு குமாஸ்தாவிடம் நான் கடைசியில் அவமானப்படுவதைப் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க மாட்டாள். ஒன்று கதாநாயகனை மாற்றுங்கள் இல்லாவிட்டால் எனக்குக் கதாநாயகன் பாகம் கொடுங்கள்.''

அவருக்குக் கதாநாயகன் வேடம் கொடுப்பதென்றால் நாடகத்தையே மாற்ற வேண்டியதுதான். அவர் கொஞ்சம் மோட்டா ஆசாமி! வயதும் நாற்பதிருக்கும்.

அங்கத்தினர்கள் யாருமே ஒத்து வராததால் நாடகத்தையே மாற்றிவிட வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தேன். கதாநாயகன், வில்லன் என்ற வித்தியாசத்துக்கே இடம் இல்லாமல் நாடகத்தை முற்றிலும் மாற்றியமைத்து விட்டேன். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் ஒரு காரியமாகக் கரூர் வரையில் போக வேண்டி வந்தது. அப்படிப் போனது நல்லதாய்ப் போயிற்று. இல்லையென்றால் நான் நித்தியானந்தத்தைச் சந்திருக்க மாட்டேன். கரூர் — திருச்சி ரயில் மார்க்கத்தில் ரயிலில் பாடிப் பிச்சையெடுத்துக் கொண்டிருந்த நித்தியானந்தத்தின் அதியற்புதமான சாரீரத்தைக் கேட்டதும் நான் அயர்ந்து போய்விட்டேன். அவனையே கதாநாயகனாகப் போட்டு ஓர் அதிசய நாடகம் தயாரிக்கத் திட்டம் ஒன்று தீட்டினேன். அவனை என் கருத்துக்கு இசைய வைப்பது சிரமமாயில்லை. இரண்டு வேளை சாப்பாடு, சிற்றுண்டி, தங்கியிருக்க இடம்

ஆயிலைகளுக்கு ஏற்பாடு செய்வதாகச் சொன்னதும் அவன் முகத்தில் களை படர்ந்தது. ''நீ எங்கள் நாடகத்தில் நடித்தால் உனக்கு மிகவும் சுலபமாகச் சினிமா சான்ஸ் கிடைக்க வழியுண்டு. நானே அதற்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்று பெரிய போடாகப் போட்டேன். அவன் உடனே இணங்கி விட்டான். அவனைச் சென்னைக்கு அழைத்து வந்து எங்கள் சபைக் கட்டடத்திலேயே தங்கியிருக்கச் செய்து சாப்பாட்டு வசதிகளையும் செய்தேன். அவன் கதாநாயகனை நடிப்பதற்கு ஏற்ற விதத்தில் வேறு நாடகமே எழுதினேன். அதற்கு ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. 'நித்தியானந்தத்தின் திவ்விய சாரீரம் நமக்கு அரிதிற் கிடைத்த பொக்கிஷம். அதை வைத்துக்கொண்டு நம் நாடகக் குழுவுக்குப் பெரு நிதி திரட்டி



விடலாம்' என்று அங்கத்தினர்களிடம் கூறி உற்சாகப் படுத்தினேன். அவர்களுக்கும் சந்தோஷம்தான்.

'நித்தியானந்தத்துக்கு ஏற்ற நாடகத்தைத் தயாரித்துக் கொண்டிருந்த வேளையில் எதிர்பாராத தடையொன்று என் நாடகத்துக்கு ஏற்பட்டு விட்டது!

எலும்பும் தோலுமாக இருந்த நித்தியானந்தம் இரண்டு, மூன்று மாத சுக வாழ்வில் உருத்தெரியாமல் மாறிவிட்டான்! அவனது சாரீர நயத்துக்காகமட்டும் நான் அவனை அழைத்து வரவில்லையே! அவனுடைய மெலிந்த சரீரத்தின் ஒட்டி யுலர்ந்த தோற்றத்தையும் அல்லவா நம்பினேன்! இப்பொழுது அவனே நடிக்கச் செய்வதா யிருந்தால் ஒரு ஜமீன்தார் பாத்திரம்தான் அவனுக்குக் கொடுக்கலாம்! இப்பொழுது நான் நாடகத்தை மாற்றவில்லை. அவனையே வெளியேற்றி விட்டேன். அத்துடன் அவனை வைத்து எழுதப்பட்ட அந்த நாடகத்துக்கும் கை கழுவினேன். ஒருவாறு என் நாட



கப் பைத்தியத்துக்கும் முற்றுப் புள்ளி வைத்தேன்.

ஆனால் நான் விட்டாலும் அந்த நாடகப் பைத்தியம் என்னை எளிதில் விடுவதாயில்லை.

இன்னொரு நாடகக் குழு ஒரு வசதியுள்ள பெரிய மனிதரின் பேராதரவோடு ஆரம்பமாயிற்று. பழைய நாடக நண்பர்கள் பலர் அதில் இருந்தனர். அவர்கள் என்னை எப்படி யெப்படியோ அதில் சிக்க வைத்து விட்டார்கள். ஒரு நாள் அந்த நாடகக் குழுவினரைப் பார்க்கச்சென்றேன். நடிக்கப் போகிறவர்களைப் பார்த்தேன். மேற்படி பெரிய மனிதரின் பொறுப்பில் நடிகர்கள் தேர்வு நடத்தப் பட்டிருந்தது. அந்தப் பட்டியலை என்னிடம் தந்தார்கள். நாடகத்தின் கையெழுத்துப் பிரதியையும் பார்வையிட்டேன். எனக்கு என் அபிப்பிராயத்தை உடனே சொல்லும் துணிவு இருக்கவில்லை. மறுநாள் தெரிவிப்பதாகச் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்துவிட்டேன். அந்தக் காரியம் மிகவும் தர்ம சங்கடமானதாகப் படவே எனக்கு மீண்டும் அங்கே போகவே மனம் இடம் தரவில்லை. கதாநாயகனாக வர இருந்தவர் அந்தப் பெரிய மனிதர்! அவருக்கு வயது நாற்பதுக்கு மேல் இருக்கும். நடிக்க வந்த பெண்கள் இருவருமே மகா கனம் பொருந்தியவர்கள்! நான் என்ன செய்யட்டும்! என் முடிவை நேரில் போய்ச் சொல்லும் தைரியம் எனக்கு இல்லை. விவரமாக ஒரு கடிதம் எழுதி ஒரு பையனிடம் கொடுத்தனுப்பிவிட்டேன்.

அவ்வளவுதான். அந்த நாடகக் குழுவைச் சேர்ந்த நண்பர் ஒருவர் என்னைத் தேடிக் கொண்டு வந்து விட்டார். ''என்ன ஸார், இப்படிச் செய்து விட்டீர்களே! அந்தப் பெரிய மனிதரின் திரவிய சகாயத்தில்தானே இந்த நாடகம் நடந்தாக வேண்டும்? அந்தப் பெண்களும், பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். நாடக சபைக்கு வேண்டிய பண உதவியைச் செய்யச் சித்தமா யிருக்கிறார்கள். அதற்கு அவர்கள் விதித்த நிபந்தனை



குழுவின் நாடகங்களில் அவர்கள் முக்கிய பாகங்கள் ஏற்று நடிக்க வேண்டும் என்பது தான். அவர்களைப் போய் வேண்டாம் என்று சொல்லி விட்டீர்களே, ஸார்! அந்தப் பெண்களின் முகங்களும், பெரிய மனிதர்களின் முகங்களும் போன போக்கு......! அப்பப்பா! நாடகக் குழுவையே கலைத்துவிட வேண்டியதுதான்...!'' என்று அவர் கண்களில் கண்ணீர் பெருகக் கூறினர். அத்துடன் அந்த நாடகக் குழு முற்றிற்று!

சில மாதங்களுக்கு நான் உண்டு, என் வேலையுண்டு என்று நாடக உலகத்தையே மறந்து விட்டு ஒழுங்கா யிருந்

தேன். மீண்டும் ஒரு நாடக டைரக்ஷன் சான்ஸ் எனக்குக் கிடைத்தது. அந்தக் குழுவினரே நாடகத்தைத் தயாரித்து நடிகர்களையும் தேர்ந்தெடுத்து விட்டார்கள். சொல்லிக் கொடுக்கும் பணியைத்தான் நான் ஏற்றேன். ஒரு நல்ல நாளில் நாடக ஒத்திகையைத் தொடங்கினேன். கதாநாயகன், கதாநாயகி இருவருமே நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்: மிகவும் பொருத்தமான ஜோடியும் கூட. இருவரும் ரொம்ப நன்றாக ஒத்துழைத்து நடித்தார்கள். என் உற்சாகம் அளவுக்கு மீறிப் பொங்கியது.

நாடகம் முழுவதும் நன்றாக ஒத்திகை நடத்தியாகி விட்டது. இனி அரங்கேற்ற வேண்டியதுதான். இந்தச் சமயம் பார்த்துத் தானா பேரிடி போன்ற அந்தச் செய்தி வர வேண்டும்? ''கதாநாயகனும் கதாநாயகியும் உண்மையாகவே ஒருவரையொருவர் காதலித்து விட்டதனால் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டனர்'' என்பது தான் அச் செய்தி.

''அவர்கள் காதலித்து விட்டுப் போகட்டும்... கல்யாணமும் செய்து கொள்ளட்டும்.



அப்படியே நம் நாடகத்திலும் நடித்து விடட்டுமே! நாடக அரங்கேற்றத்துக்குத் தேதிகூடக் குறித்தாகி விட்டதே!'' என்று நாடகக் குழுவின் காரியதரிசியைக் கேட்டேன்.

'' 'அந்தப் பெண் நாடகத்தில் நடிப்பதாயிருந்தால் இந்தக் கலியாணமே வேண்டாம்' என்று நம் கதாநாயகன் முரண்டு பிடிக்கிறானாம். அதனால் பெண்ணைப் பெற்றவர் என்னிடம் வந்து கெஞ்சுகிறார்... அத்துடன் இன்னொரு சமாசாரம். நம் கதாநாயகனும் கதாநாயகியும் இங்கில்லை. உதகமண்டலத்துக்குப் போய்விட்டார்கள்....''

இதைக் கேட்ட பிறகு நான் ஏன் பதில் பேசுகிறேன்?

பிறகு என் நாடக ஆர்வம் அடியோடு தணிந்து விட்டது என்று நினைப்பீர்கள். அது தானில்லை. அது தணியாத தாகம்; தீராத பைத்தியம். எந்த நாடகத்துக்கு அழைப்பு வந்தாலும் தவறாமல் போய்ப் பார்ப்பேன். நாடகங்களில் முதலில் பிரார்த்தனை பாடும் பொழுது என்னை யறியாமல் என் உடம்பில் ஒரு விறுவிறுப்பு ஏறும். எனக்கும் அதில் போய்க் கலந்து கொள்ள வேண்டும் என்ற துடிதுடிப்பு உண்டாகும். மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொள்ளுவேன்.

அன்று ஒரு நாடகத்துக்குப் போயிருந்தேன். அக்குழுவினர் தங்களுடைய அடுத்த மகத்தான நாடகம் ''ஸ்ரீவள்ளி கல்யாணம்'' என்று அறிவித்தார்கள். என்னுள் உறைந்து கிடந்த நாடக ஆர்வம் விசுவரூபமெடுத்துக் கிளம்பியது. அதற்கேற்றாற்போல் மேற்படி நாடகக் குழுவினர் என்னையே அந்த நாடக டைரக்டராக இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டனர்.

நானும் அதற்கு ஒப்புக் கொண்டு ஒத்திகை நடத்த ஆரம்பித்தேன். நடிகர்கள் நன்கு ஒத்துழைத்தார்கள். நாடகம் நன்றாக அமைந்து விடும் என்று எனக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் ஒரே ஒரு குறை. முருகனாக வரும் நடிகர் கருகருவென்று மீசை வைத்துக் கொண்டிருந்தார். நாடகம் அரங்கேற்றப்படும்போது அதை எடுத்துவிட வேண்டும் என்று அவருக்கு முன்னதாகவே சொல்லியிருந்தேன். அவரும் சம்மதித்தார். ஆனால் நாடக தினத்தன்று அவர் மீசையை எடுக்கவில்லை. நாடகம் ஆரம்பமாகி விட்டது. முருகன், வேடனாக வருகிற வரையில் ஒன்றும் நிகழவில்லை. நாடகம் அமைதியாய் நடந்து கொண்டிருந்தது. முருகன் தன் திருவிளையாட்டின் முடிவில் தினைப்புனத்தில் வள்ளியம்மைக்கு ஆறு முகங்களுடன் திவ்ய தரிசனம் தரும் கட்டம் வந்தது. ஆறுமுகப் பெருமான் மேடையில் தோன்றியதுமே பெரிய கரகோஷ ஆரவாரம் எழுந்தது. நாடகம் நன்றாக நடப்பது பற்றிப் பெருமிதம் கொண்டிருந்த எனக்கு முதலில் சந்தோஷமாயிருந்தது. பிறகு சுரீரென்று உண்மை புரிந்தது. முருகனின் பால் வடியும் ஆறு முகங்களில் ஒரு முகத்தில் மட்டும் மீசை இருந்து தொலைத்தால் நாடகம் பார்ப்பவர்கள் சிரிக்காமல் என்ன செய்வார்கள்?

அந்தக் காட்சி முடிந்ததும் அந்த நடிகரைக் கடிந்து கொண்டேன். ''நான் என்ன செய்யட்டும், ஸார்? மீசையை எடுத்து விட்டால் என்னை யார் என்றே தெரியாது என்று கூறி என் மனைவி ஒரேயடியாக என்னைத் தடுத்துவிட்டாள்'' என்று கூறிப் பரிதாபமாக விழித்தார். ''இனி உமக்கு இந்த ஒரு முகம் போதும். ஆறு முகங்கள் வேண்டாம்'' என்று கூறி மீதி நாடகத்தை ஒருவாறு முடித்து விட்டேன்.

இந்த எதிர்பாராத நிகழ்ச்சியை நான் என்றும் மறக்க முடியாமல் அது என் உள்ளத்தில் பதிந்து விட்டது. அமெச்சூர் நாடகங்களில் ஹாஸ்யம் வேண்டுமென்று சிரமப்பட வேண்டாம். ஜனங்கள் சிரித்து ரசித்து மகிழ்வதற்கு எத்தனையோ இயற்கையான ஹாஸ்யங்கள் நாடகத்தில் தாமாகக் கிடைக்கின்றனவே.

நடந்த நாடகங்களின் குன்றாத சுவையும், நடக்காத நாடகங்களின் மறக்க முடியாத நிகழ்ச்சிகளுமே இப்போதெல்லாம் என் மன அரங்கில் சுவையூட்டிக் கொண்டிருக்கின்றன.




### ஜனநாயகத்துக்குப் பொருந்துமா?
### பொங்கல் மலர்
### ருஷ்யக் கணக்கின் விடை

கடந்த 7–1–67 அன்று பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்கள் கோவைக்கு விஜயம் செய்து ஒரு பொதுக்கூட்டத்தில் உரையாற்றினர். அந்தப் பொதுக்கூட்டம் காங்கிரசுக்குப் பொதுத் தேர்தலில் ஆதரவு திரட்டுவதற்காகவே கூட்டப்பட்டது. அக் கூட்டத்தில் பேசிய பிரதமர் கூட்டணியை முறியடித்து மீண்டும் காங்கிரஸுக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்ததும் தினசரிகளில் வெளியானது. ஆனால் இதில் வேதனை கலந்த உண்மை என்னவென்றால் இந்தக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தவர் மாவட்டக் கலெக்டர் என்பதும், அவர் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு தம் கையொப்பமிட்டு அழைப்பிதழும் நுழைவுச் சீட்டும் தம் அலுவலகத்திலிருந்தே அனுப்பியதும்தான். நிலைமை இவ்வாறெனில் நாட்டில் உண்மையான ஜனநாயகம் எப்படியிருக்க முடியும்? ஆளும் கட்சியின் பிரசாரத்துக்காக அதிகாரத்தை உபயோகிப்பதும் பொதுமக்களின் வரிப் பணத்தைப் பயன்படுத்துவதும் ஜனநாயகத்துக்குப் பொருந்துமா?

பொள்ளாச்சி — ரா. முருகன்
10–1–67 — மா. ராகவன்

(இக்கடிதம் எழுதியவர்கள் கலெக்டரின் கையெழுத்துடன் கூடிய அழைப்பிதழையும் நுழைவுச் சீட்டையும் நமக்கு அனுப்பியுள்ளார்கள். —ஆசிரியர்)

மகரிஷியின் படைப்பான 'இலையுதிர் காலம்' என்ற குறுநாவலைப் படித்தேன். அழுது கொண்டு இருக்கிறேன். அண்மையில் அவர் 'நானும் என் எழுத்தும்' என்ற தலைப்பில் சோக மயமான பாத்திரத்தை முழுக் காவியமாகப் படைக்க முடியாமல் பயந்து ஓடிக் கொண்டிருப்பதாகக் குறிப்பிட்டெழுதியிருந்தார். ஆனால் இலையுதிர்காலத்தில் படைக்கப்பட்டுள்ள வனிதா அவர் கூற்றைப் பொய்ப்பித்து விட்டாள்.

இடைப்பாடி
13–1–67 — இரா. ஜயப்பிரகாசம்

“குறையொன்றும் இல்லை” என்ற ராஜாஜியின் அற்புதக் கவியைப் படித்தேன். உள்ளக் கல்நெக்குவிட்டுக் கரைந்து உருகிற்று. புல்லிய கண்களில் நீர் பெருகிற்று.

இது கவிதை அல்ல. ராஜாஜியின் நீண்ட வாழ்வெனும் தெய்வீக சங்கீதத்துக்கு என்றும் நீங்காத ஆதார சுருதி.

சென்னிமலை
13–1–67 — செ. கு. சிங்காரவேலு

இலையுதிர்காலம்' அருமையான படைப்பு. திரு 'மகரிஷி' அவர்கள் வனிதாவை அழகு படச் சித்திரித்திருக்கிறார்கள். கதை உள்ளத்தைத் தொடுவது மட்டுமல்ல, இடமும் பெற்று விடுகிறது அழியாமல்!

நண்பர் திரு ர. சு. நல்லபெருமாளின் தொடர்கதை – அந்தக் காலத்தை–அதாவது வெள்ளையர் ஆண்ட காலத்தைப் புதிய தலைமுறைக்கு எடுத்துக் காட்டுவதாகக் கண் முன் விரிகிறது. அந்தக் காலத்துக்கு வாசகர்களைப் 'பயணம்' செய்யச் சொல்கிறார். ஆரம்பத்திலேயே கதை களை கட்டி விட்டது. பேட்டியாளரோடு பேட்டி சுவையான பகுதி. அதில் அவர் கணவர் பெயரைக் குறிப்பிடாதது ஒரு குறை.

அடுத்த இதழிலிருந்து கல்கி 40 காசு என்பதை நாசூக்காகக் குறிப்பிட்டீர்கள். எல்லாம்தான் விலை ஏறுகிறதே?

பொங்கல் மலர் சிறப்பாக இருக்கிறது.

குமரி மாவட்டம், 17–1–67 — வனமாலிகை

கல்கி இதழில் வெளியிடப்பட்டுள்ள ருஷ்யப் பெருக்கல் கணக்கை நானும் எனது நண்பர்களும் மாதிரியாக வைத்துக் கொண்டு பல புதிய கணக்குகளைப் போட்டுப் பார்த்தோம். அவற்றில் இடது புறத்தில் எழுதப்படுகிற சிறிய இலக்கத்தின் முதல் ஸ்தானம் இரட்டைப் படையாக இருந்தால் விடை சரியாகவே வருகிறது; முதல் ஸ்தானம் ஒற்றைப்படையாக இருந்தால் பெரிய இலக்கத்தையும் பெருக்கல் தொகையோடு சேர்த்துக் கூட்டினால்தான் விடை சரியாக வருகிறது.

| 44×75 | |
|---|---|
| ~~22~~ | ~~150~~ |
| 11 | 300 |
| 5 | 600 |
| ~~2~~ | ~~1200~~ |
| 1 | 2400 |
| விடை | 3300 |

| 43×75 | |
|---|---|
| 21 | 150 |
| ~~10~~ | ~~300~~ |
| 5 | 600 |
| ~~2~~ | ~~1200~~ |
| 1 | 2400 |
| விடை | 3150 |

நமது முறைப்படி
44×75 = 3300

நமது முறைப்படி
43×75 = 3225

| | |
|---|---|
| ருஷ்ய முறைப்படி மேலே வந்துள்ள விடை | 3150 |
| இதனுடன் பெரிய எண்ணைக் கூட்டவும் | 75 |
| சரியான விடை | 3225 |

விழுப்புரம், 28-12-66 — சு. கல்யாணசுந்தரம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.




BENSONS2/JEN-49C TAM

# ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ்

## எண்ணெய் கலந்த டிஸ்டெம்பரைப் போல விலை குறைவு. இருந்தாலும் நன்ருக கழுவக்கூடிய. அதிக கவர்ச்சியான நிலைத்து நிற்கும் மெருகு.

**இதற்கு முன் உண்மையான பிளாஸ்டிக் அலங்கார பினிஷ் எதுவும் இவ்வளவு குறைந்த விலைக்கு இவ்வளவு அதிகம் கிடைத்ததில்லை**

இது மட்டுமல்ல, ஜென்ஸோலின் வால் பினிஷ் பிளாஸ்டிக் பொருள் உள்ளது — கவர்ச்சிகரமான, நிலைத்து நிற்கும் மெருகு தருகிறது. நன்ருக கழுவி சுத்தம் செய்யக்கூடியது; சுலபமாகப் பூசலாம், விரைவில் காய்கிறது, பிரஷ் சுவடே தெரியாது.

ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ் 15 அழகிய வண்ணங்களில் — பக்கத்து பெயிண்ட் கடையில் இப்போது கிடைக்கிறது. எளிய செலவுக்குத் தகுந்தபடி சவுகரியமான விலை. இந்தப் புரட்சிகரமான பிளாஸ்டிக் பினிஷைக் கொண்டு உங்கள் சுவர்களை அலங்கரியுங்கள் — வியப்பூட்டும் தரம், வியப்பூட்டும் விலை !




தயாரிப்பு:

**ஜென்ஸன் & நிகல்ஸன்** சிறப்பாக விற்பனையாகும் ரோபியாலாக் தயாரிப்பாளர்

ஜென்ஸன் & நிகல்ஸன் (இந்தியா) லிட். 7, அரண்மனைக்காரத் தெரு, சென்னை

7/219, அவனுசி ரோடு, கோயம்புத்தூர்

REGISTERED No. M.
Registered as a Newspaper in Ceylon